# கல்கி

நேரடி ரிப்போர்ட்

KALKI
12.9.99
ரூ. 4.50



# பேசாமலே கூட்டம் சேர்க்கும் மூப்பனார்!

## நம் இருவரைப் பற்றி ஒரு அற்புதமான விஷயம் உள்ளது.

# உண்மையில் நாங்கள் ஒருவரே.

அந்த மழலைச் செல்வம் தான் உங்கள் உலகம். அவனுக்குத் தாருங்கள் ஒரு அன்பளிப்பை. அதை வாஞ்சையுடன் போற்றி மகிழ்வான் என்றென்றும்.

# சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்ட்.

உங்களின் ஒரு அங்கமே உங்கள் மழலைச் செல்வம். அவனது அங்கத்தில் நீங்களும் ஒன்றாகத் திகழ்கிறீர்கள். இந்த பந்தத்தைக் கொண்டாட அவனுக்கு யூடிஐ–ன் சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்டை அன்பளிப்பாக தாருங்கள். 15 வயதிற்குட்பட்ட எந்த ஒரு குழந்தைக்கும், ஆண்டிற்கு 12% உறுதிப்படுத்தப்பட்ட வருவாய். வருவாய் தானாகவே மறுமுதலீடு செய்யப்படும். முதலீடு செய்யப்பட்ட ரூ.10,000 வளர்ந்து 21 ஆண்டுகளில் குறைந்தபட்சம் ரூ.1,08,000 ஆகிறது. குறைந்தபட்ச முதலீடு ரூ.2,000. உச்ச வரம்பு கிடையாது. மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள யூடிஐ கிளையை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும். உங்கள் குழந்தையின் எதிர்காலம் உங்கள் கையில். இப்பொழுதே அதைப் பத்திரப்படுத்துங்கள்.






**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

உங்கள் வளமான நாளைக்கு

ம்யூச்சுவல் ஃபண்டுகளில் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் அனைத்து முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்களை பாதிக்கும் காரணங்களால் திட்டங்களின் என் ஏ வி ஏறவும், இறங்கவும் செய்யலாம். கடந்த கால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. சி ஜி ஜி எஃப் என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரத்தை, எதிர்கால வாய்ப்புகளை அல்லது ஆதாயங்களை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. திட்டத்தின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று ஒரு உத்திரவாதமும் வழங்கப்படமாட்டாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

**மண்டல அலுவலகம்** : 29 இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 5210335, 5210347. **கிளை அலுவலகங்கள்** : கோயம்புத்தூர் போன்: 214973. சென்னை போன் : 5210335, 5210347. மதுரை. போன்: 738186. திருச்சி போன்: 760060.

SAATCHI & SAATCHI - 135/99 C TAM A

## காதில் விழுந்தவை:

# அமைச்சர்களின் தலை உருளுமா?



● தமிழகம் - பாண்டிச்சேரியில் உள்ள நாற்பது மக்களவைத் தொகுதிகளிலும் மூன்று தொகுதிக்கு ஒரு அமைச்சரைப் பொறுப்பாக நியமித்து, தேர்தல் வேலைகளைக் கவனிக்கச் சொல்லியிருந்தது தி.மு.க. தலைமை. ஆனால் தாங்கள் சொன்ன வேட்பாளர்களைப் போடாததால், சில அமைச்சர்கள் அவ்வளவு சுறுசுறுப்பாகப் பணிகளில் இறங்காதது தலைமையின் கவனத்துக்கு வந்திருக்கிறது. தஞ்சை - மயிலாடுதுறை - நாகப்பட்டினம் தொகுதிகளில் உள்ள கழக உடன்பிறப்புகள் அந்தப் பகுதி அமைச்சரிடமிருந்து இன்னும் கொஞ்சம் அழுத்தமான ஆதரவை எதிர்பார்த்து நின்றார்கள். நெல்லை - தென்காசி - திருச்செந்தூர் தொகுதியிலும், உடன்பிறப்புகளுக்குள் மோதல் இருந்தது. இதே நிலை திண்டுக்கல் தொகுதியிலும் இருந்தது. நெல்லை வேட்பாளர் கீதா ஜீவனின் தந்தையும், தூத்துக்குடி சட்டமன்ற உறுப்பினருமான பெரியசாமி, நெல்லைப் பகுதி கழகத் தோழர்களின் ஒத்துழைப்புக் கிடைக்காதது குறித்து தலைமையிடம் புகார் கூறியுள்ளாராம். இதைத் தொடர்ந்து அமைச்சர்களின் தேர்தல் பணி குறித்து ஆய்வு நடத்தி அறிக்கை கொடுக்குமாறு புலனாய்வு ஏஜென்ஸிகள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனவாம். வோட்டு எண்ணிக்கைக்கு முன்னாலேயே ஒருசில அமைச்சர்களின் தலை உருளலாம் என்கிறார்கள்.

● 'திராவிடர் கழக' வீரமணி இந்தத் தேர்தலில் அ.இ.அ.தி.மு.க. கூட்டணியை ஆதரித்துத் தேர்தல் கூட்டங்களில் பேசினார். மதவாத பா.ஜ.கவுடன் தி.மு.க. கூட்டணி வைத்துக் கொண்டதுதான், தமது எதிர்பிரசாரத்திற்குக் காரணம் என்றார். "ஆனால் சென்ற 1998 தேர்தலில் அ.இ.அ.தி.மு.க. பா.ஜ.கவுடன் கூட்டணி வைத்தபோது அதை எதிர்த்து நேரிடையாகப் பிரசாரம் செய்யாமல் அறிக்கை மட்டும் விட்டு விட்டு அமெரிக்கா போய் விட்டாரே அது ஏன்?" என்று கேட்கிறார்கள் தி.க. தொண்டர்கள். இதனால் வீரமணி மீது அதிருப்தியுடன் இருக்கிறார்கள் தி.க. பிரமுகர்கள்.

● சென்னை என்றாலே, அது தி.மு.க.வின் கோட்டை என்பது தெரிந்த ஒன்று. ஆனால் இந்த முறை அப்படியல்ல. வட சென்னையும் தென் சென்னையும் சற்றுக் கவலைக்குரியதாக இருப்பதாகச் சொல்கிறார்கள். வடசென்னையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றில், "குப்புசாமிதான் இந்த முறையும் தி.மு.க. வேட்பாளர்" என்று கலைஞர் மிக முன்னதாகவே தெரிவித்தும், முனைப்போடு தேர்தல் பணிகள் துவங்கப்படவில்லையாம். தி.மு.க. தொழிற்சங்க அமைப்பின் முழு பலமும், குப்புசாமியின் பின்னால் இருந்தும் பணிகள் விறுவிறுப்படையாததற்குக் காரணம் நிதி நிலைதான் என்கிறார்கள். தென் சென்னையில் - குறிப்பாக புறநகர்ப் பகுதிகளில் பாலாற்றுக் குடிநீர்ப் பிரச்னை பெரும்பிரச்னையாக இருக்கிறது. உள்ளாட்சித் தேர்தல்களில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் காண்ட்ராக்ட் போன்ற விஷயங்களில் காசு பண்ணுவதில் குறியாக இருக்கிறார்களே தவிர, மக்களைப் பற்றிக் கவலைப்படுவதேயில்லை. இதனால் மக்கள் ஆளுங்கட்சியின் மீது வெறுப்படைந்துள்ளனர். சென்னையில் கலைஞர் பிரசாரம் மேற்கொள்ளும்போது நிலை ஓரளவு சாதகமாகலாம்.

● தேர்தலுக்குப் பிறகு திண்டிவனத்தின் தலைமைப் பதவிக்கு ஆபத்து வரும் என்கிறார்கள். புகார்ப் பட்டியல் தயாராகி வருகிறதாம்.

— சஞ்சயன்

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

திண்டுக்கல்லைப் பொறுத்தவரை தேவா சமூகம் யாருக்கு வோட்டுப் போடுகிறதோ அவர்களுக்கே வெற்றி என்கிற நிலை' ஆறு சட்டமன்றத் தொகுதிகளுள், திருமங்கலம், சோழவந்தான், உசிலம்பட்டி, திண்டுக்கல் ஆகிய நான்கில் தேவரின ஆதிக்கமே அதிகம்.

பெரும்பாலும் கிராமங்களையே உள்ளடக்கிய இப்பகுதியில் ஜாதியும், கவர்ச்சியும் இல்லாவிட்டால் 'பருப்பு' வேகாது என்று கலைஞர் யோசித்துத்தான் தேவர் சமூகத்தைச் சேர்ந்த - தொகுதிக்குட்பட்ட கருமாத்தூரில் பிறந்த 'நடிகர் சந்திரசேகரை' வேட்பாளராக நிறுத்தியிருக்கிறார் என்று இங்குள்ளவர்கள் சொல்கிறார்கள். என்றாலும் தங்களைக் கலந்து ஆலோசிக்காமலேயே ஒரு நடிகரைத் தொகுதியில் வேட்பாளராக நிறுத்தியதால் முதலில் அதிர்ந்து போனது அகில இந்திய பார்வார்டு பிளாக் கட்சிதானாம். தனது அதிருப்தியை வெளிக்காட்ட வலுவான வேட்பாளராக தேவரினத்தைச் சேர்ந்த சுரேந்திரனை நிறுத்தி வோட்டுப் பிரிப்பு நடவடிக்கையில் இறங்கியிருக்கிறது. அவரது 'சிங்கம்' சின்னத்திற்கு தேவரின மக்களிடம் நல்ல வரவேற்பு.

சந்திரசேகர் நடிகர் என்பதால் வரவேற்புக்குப் பதில் எதிர்ப்பே மிஞ்சுகிறது. 'இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னே சென்னைக்குச் சென்று செட்டில் ஆனவர் வோட்டுக் கேட்க வந்தால் போட்டு விடுவோமா?' என்கிற அதிருப்தியும் அங்கங்கே ஒலிக்கிறது.

போதாக்குறைக்கு 'சமத்துவபுரம்' திட்டம், ஜாதி வேரோடிய பாமர மக்களிடம் பயங்கர எதிர்ப்பு உணர்வை விதைத்து, சிங்கத்தின் பக்கம் திசை திருப்பியிருக்கிறது என்பதும் வருத்தத்துக்குரிய உண்மை. ''பன்றி, நாய், கழுதையெல்லாம் ஒரே வீட்டுக்குள்ள (கோபமாக) அடைச்ச மாதிரியில்ல அடைச்சு வச்சிருக்காரு கலைஞர்? அதுக்குப் போட வேண்டியதுதான் வோட்டு!'' என்று அதிர்ச்சியூட்டும் வகையில் பேசுகின்றனர் மக்கள்...

''இதைக் கட்டி உட்டதுக்கு ஒரு தொழிற்சாலை கட்டியிருந்தா நாங்க ஒரு ஆயிரம் குடும்பம் வயிறு கழுவியிருப்போம். கட்சிக்காரங்க 'வித்துச் சாப்பிட' கோடி கோடியா செலவு செய்யணுமாக்கும்?'' - செக்கானூரணி, திருமங்கலம், உசிலம்பட்டி பக்கம் கிராமத்துப் பெண்கள் இப்படித்தான் சொல்கிறார்கள்.

எப்படியும் சுரேந்திரன் ஒரு அம்பதாயிரம் ஜாதி வோட்டுக்களைப் பிரிப்பார் என்று தி.மு.க.வினரே கணக்குச் சொல்கிறார்கள். ஆயினும் இந்த வோட்டுப் பிரிப்பு, தங்களின் வெற்றிக்குப்



# சந்திரசேகருக்

பாதகமில்லை; சாதகமே என்றும் சொல்கிறார்கள்.

''அது அத்தனையும் உதயசூரியனைப் பிடிக்காம இலைக்குப் போடற வோட்டு சார். இரட்டை இலையை எம்.ஜி.ஆர். காலத்திலிருந்தே கட்டிப் பிடிச்சு வந்தவங்க, இந்தமுறை அம்மாவைப் பிடிக்காம சிங்கத்துக்குக் குத்தப் போறாங்க. போன தேர்தலில்கூட என்.எஸ்.வி. சித்தனைப் பிடிக்காமல் (த.மா.கா) அவர்கள் இலைக்குப் போட்டு விட, அது ஜெயித்து விட்டது. இப்ப அதை சிங்கம் பிரிச்சா போதும் சந்திரசேகர் அண்ணன் ஜெயிப்பு உறுதி!'' என்கிறார்கள்.

த.மா.கா வேட்பாளர் என்.எஸ்.வி சித்தன் இந்த முறையும் இத் தொகுதியில் பெரும்பான்மை ஜாதியைச் சேர்ந்தவர் என்கிற அந்தஸ்துடன் நிற்கிறார். பிரசாரமும் கொடி கட்டிப் பறக்கிறது. ஆனால் வாய்ப்பு சிங்கத்தை விடவும் குறைவு என்பதை மக்களின் முக பாவங்களிலிருந்து உணர முடிகிறது. சென்றமுறை 'புதிய தமிழகத்திற்கு' தனிப்பட்ட முறையில் விழுந்த இருபதாயிரம் வோட்டுக்கள்கூட இதற்கு விழுமா? என்கிற கிண்டல் இங்கு நிறைய. காரணம் சமத்துவபுரம், அண்ணா



நெருக்கமானவர். மண்ணை மதிப்பவர். அந்த சீனிவாசன் கடந்த பதின்மூன்று மாத காலத்தில் சாதித்தது 'அம்மாவையே' துதி பாடி அமைச்சர் பதவி வேண்டி, காலில் விழுந்து எழுந்து கொண்டிருந்தது மட்டும்தானே?'' என்று தி.மு.க.வினர் செய்யும் எதிர்ப் பிரசாரமும் நன்றாகவே வேலை செய்கிறது.

சென்ற முறை வெறும் 15,000 வோட்டுக்களே கூடுதலாகப்

# வெற்றி வாய்ப்பு எப்படி..?



தேர்தல் '99

மறுமலர்ச்சித் திட்டங்களின் மூலம் 'பெரும்பான்மை ஜாதி' யினரின் வெறுப்பைச் சம்பாதித்திருக்கும் தி.மு.க., தாழ்த்தப்பட்ட மக்களிடம் கூடுதல் வரவேற்பைப் பெற்றுள்ளதுதான். காலங்காலமாய் இரட்டை இலைக்கே வாக்களித்த அம் மக்கள் சென்ற தேர்தலில் சடாரென்று 'புதிய தமிழகம்' பக்கம் சாய்ந்தது போல், இப்போது 'கலைஞர்' பக்கம் திரும்பி விட்டதாகக் கணிக்கிறார்கள் தி.மு.க.வினர்.

பலமுறை பார்லிமெண்டுக்குச் சென்று வந்த அ.தி.மு.க. வேட்பாளர் சீனிவாசனுக்குத் தொகுதியில் அப்படியொன்றும் 'கவர்ச்சி' இல்லை. 'அம்மா' வருகையும் அதனால் ஏற்கப்பட்டுத் திரண்ட கூட்டத்தையும் வைத்து ரொம்பச் சுலபமாக தங்கள் கட்சியின் வெற்றி வாய்ப்பைக் கணித்துப் புளகாங்கிதப் பட்டுக் கொண்டிருக்கின்றனர் ரத்தத்தின் ரத்தங்கள். சீனிவாசனுக்குத் தொகுதியில் நல்ல பெயரும் இல்லை. கெட்ட பெயரும் இல்லை. ''எப்போது போனாலும் மனிதரைச் சந்திக்க முடியும், பேச முடியும், பிரச்னைகளை எடுத்துச் சொல்ல முடியும். ஆனால் இந்த நடிகரை இப்படிப் போய் பார்க்க முடியுமா?'' என்று அவர்கள் செய்யும் பிரசாரமும் மிகச் சுலபமாக மக்களிடம் எடுபடுகிறது.

''பேருக்கு ஆள் இருந்து என்ன செய்ய? ஏதாவது சாதிக்க வேண்டுமே. அண்ணன் சந்திரசேகர் சாதிப்பார். கலைஞருடன்

பெற்று வென்ற அ.தி.மு.க. வேட்பாளர் சீனிவாசனை ''நிறமையான பிரதமர், நிலையான ஆட்சி' அம்மாவின் ஆட்சிக் கவிழ்ப்பு நாடகங்கள், சசிகலாவுடன் அடிக்கும் டூர்' என்றெல்லாம் சுட்டிக் காட்டும் சந்திரசேகர் ரொம்ப சுலபமாய் தோற்கடித்து விடலாம்.

ஆனாலும் ஒரே ஒரு சிக்கல்: தி.மு.க.வினர் மத்தியில் உள்ள அதிருப்திதான். எந்த அளவுவுக்குக் கட்சியில் அவருக்கு வரவேற்பு உள்ளதோ அதே அளவு எதிர்ப்பும் கூடவே இருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில் என்ன செய்யப் போகிறார் நடிகர் சந்திரசேகர்?

கேள்வி கேட்க சந்திரசேகரைத் தேடி அலையாய் அலைந்து, ஒரு வழியாய் ஃபோனில் பிடித்தோம்.

''நீங்கள் கேட்கிற கேள்வியே அபத்தம். இங்கே கட்சித் தொண்டர்களுக்குள் எந்தக் குழப்பமுமில்லை. ஊண் உறக்கமின்றி எனக்காக – என் வெற்றிக்காகப் பாடுபடுகிற தொண்டர்கள் பற்றி நீங்கள் சந்தேகிப்பதே தவறு. இது என் சொந்த ஊர். காலங் காலமாய் இருந்து வரும் கட்சிக்காரன். நான் வென்றால் என் சொந்தத் தொகுதியிலேயே தங்கி மக்களுக்காகச் சேவை செய்யப் போகிறேன். அதை மக்களிடம் தெளிவு படுத்தியும் வருகிறேன். அதன் மூலம் என் வெற்றி இங்கே நிச்சயக்கப்பட்டும் விட்டது. அதில் நீங்கள் எள்ளளவும் சந்தேகம் கொள்ள வேண்டாம்!'' என்றார் உறுதியுடன்.

— கா.சு. வேலாயுதன்



பது வேடிக்கையாக இருக்கிறது.

"அதே போல மதவாதத்தைப் பற்றிப் பேசவும் அவர்களுக்கு அருகதை இல்லை. ஒரு பஞ்சாயத்துத் தேர்தலில் கூட வெற்றி பெற முடியாத நிலையிலிருந்த பா.ஜ.க.வுக்கு தமிழகத்தில் வேரும், விழுதும் உண்டாக்கிக் கொடுத்தவர் ஜெயலலிதா. இந்தத் தேர்தலில் சிறுபான்மையோர் நலன்களைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் பா.ஜ.க வோடு கூட்டணி அமைத்திருப்பவர் கருணாநிதி.

# பேசாமலே கூட்டம்



தேர்தல் '99

"ஜெயலலிதாவைப் பார்த்து கருணாநிதி ஊழல் மகாராணி என்கிறார்; கருணாநிதியைப் பார்த்து ஜெயலலிதா ஊழல் மகாராஜா என்கிறார். இந்த இருவருக்குமே ஊழலைப் பற்றிப் பேசும் தார்மீக உரிமை கிடையாது. 'நிலையான ஆட்சி' என்று வாக்குக் கேட்கிறார்கள். அப்படிச் சொல்லி வோட்டுக் கேட்க கொஞ்சமும் தகுதியில்லாதவர்கள் அவர்கள். 1998-ல் ஐக்கிய முன்னணி அரசைக் காங்கிரஸ் கவிழ்த்ததற்குக் காரணம் யார்? ஜெயின் அறிக்கையை தொடர்ந்து அமைச்சரவையிலிருந்து தி.மு.க. அமைச்சர்களைச் சிறிது காலம் விலகியிருக்கச் சொன்னது காங்கிரஸ். ஆனால் மருமகன் மாறன் பதவி போய்விடுமே என்று கருணாநிதி மறுத்து விட்டார். காங்கிரஸ், ஆதரவை வாபஸ் வாங்கிக் கொண்டது. அதன் காரணமாக 1998-ல் பாராளுமன்றத் தேர்தல் வந்தது. அதே போல் சுயநலம் காரணமாக பா.ஜ.க. அரசுக்குக் கொடுத்த ஆதரவை வாபஸ் பெற்றார் ஜெயலலிதா. அவரால்தான் இந்தத் தேர்தல் வந்திருக்கிறது. எனவே இரண்டு ஆண்டுகளில் இரண்டு தேர்தல்கள் வரக் காரணமாக இருந்தவர்கள் கருணாநிதியும், ஜெயலலிதாவும் தான். 'நிலையான ஆட்சி' என்று அவர்கள் வோட்டு கேட்



• உற்சாகத்தில் மக்கள் வெள்ளம்

எனவே, ஊழல், நிலையான ஆட்சி, மதவாதம் என்று இவை எதைப் பற்றியுமே பேச உரிமையில்லாதவர்கள் கருணாநிதியும் ஜெயலலிதாவும். ஆனால் இவர்களுக்கு நேர்மாறாக, ஊழலைக் கண்டித்தும், நிலையான ஆட்சியை வலியுறுத்தியும், மதவாதத்தை எதிர்த்தும் பேசத் தகுதி படைத்த ஒரே தலைவர் மூப்பனார்தான். கடந்த 32 ஆண்டுகளாக மாற்றி, மாற்றிக் கொள்ளையடித்த தி.மு.க., அ.தி.மு.க. சுரண்டல் பேர்வழிகளை விரட்டியடிப்போம். மக்கள் தலைவர் மூப்பனார் தலைமையிலுள்ள அணிக்கு நமது முழு ஆதரவையும் அளிப்போம்!" - வேர்த்து விறுவிறுக்கப் பேசி முடிக்கிறார் விடுதலைச் சிறுத்தைகளின் மாநில அமைப்பாளரான திருமாவளவன். கூட்டம் ஆர்ப்பரிக்கிறது.

அடுத்துப் பேச வருகிறார் மூப்பனார். "அன்பர்களே... திருமாவளவன் பேசியதைக் கேட்டீர்கள். அதை அப்படியே நான் ஏற்றுக் கொள்கிறேன். தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட, மற்றும் சிறுபான்மை மக்களுக்கு ஆட்சி அதிகாரத்தில் சரிசமமான பங்கு கிடைக்க வேண்டும். அதற்காக இந்த அணி பாடுபடும். என்ன நான்



• திருமாவளவன்

# சேர்க்கும் மூப்பனார்!

சொல்றதைச் செய்வீங்களா? சைக்கிளுக்கு வோட்டுப் போடுங்க. நம்ம சின்னம் என்ன சொல்லுங்க பார்ப்போம்..." – மூப்பனார் இப்படி உரையாடும் பாணியில் கேட்டவுடன், கூட்டம் உற்சாகமாக 'சைக்கிள் சைக்கிள்' என்று கோஷமிடுகிறது. அவ்வளவுதான்! "வணக்கம்!" என்று சொல்லி பேச்சை முடித்துக் கொள்கிறார் மூப்பனார்.

மேடையிலிருந்து மூப்பனாரும் திருமாவளவனும் இறங்கி காருக்கு வர முடியாமல் மக்கள் கூட்டம் அலைமோதுகிறது. பெரம்பலூர் மாவட்டம் ஜெயங்கொண்டானில் நாம் பார்த்த காட்சி இது. "இங்க மட்டுமில்ல ஸார்! தமிழகம் முழுவதும் இதே நிலைதான். ஆனால் பேப்பர்க்காரங்க கலைஞருக்கும் ஜெயலலிதாவுக்கும்தான் முக்கியத்துவம் கொடுக்கறாங்க. இந்த இரண்டு திராவிட கட்சிகள் மீதும் மக்கள் மிக வெறுப்பாக இருக்காங்க. தேர்தலுக்குப் பின் தெரியும் பாருங்க..." என்கிறார் பிரசாரப் பயணத்தில் மூப்பனாருக்கு முன்னர் சென்று மேடையில் பேசும் பிரசாரச் செயலாளர் முனவர் பாட்சா.

அரியலூர்த் தொகுதி த.மா.கா. சட்டமன்ற உறுப்பினர் அமரமூர்த்தி திருமாவளவன் பேச்சை ஆஹாவென்று சிலாகித்து, "தமிழகமெங்கும் சென்று இவர் பேசினால் நம்ம அணிக்கு ரொம்பவும் உதவியாக இருக்குமே" என்று சொல்கிறார்.

லேசாக மழை தூறிக் கொண்டிருக்க, மூப்பனாரின் டாட்டா சபாரி வேன் அடுத்த இடமான ஆண்டிமடத்தை நோக்கி விரைகிறது.

**"தலைவர் தங்கியிருக்கிற ஓட்டலுக்கு முன்னால தொண்டர்கள் எதுக்கு ஸ்டார் கட்டி தொங்க விட்டிருக்காங்க?"**

**"ஸ்டார் ஹோட்டல்லதான் தங்குவேன்னு அடம்பிடிச்சாராம், அதான் இப்படி!"**

**– நிர்மலாதேவி**



மூப்பனாரின் அன்றைய பயணத் திட்டம், சுந்தரபெருமாள் கோயிலிலிருந்து புறப்பட்டு ஜெயங்கொண்டம், ஆண்டிமடம், சிதம்பரம் வழியாக வடலூர், கடலூர், கடைசியாக பண்ருட்டியில் போய் முடிக்க வேண்டும். வீட்டிலிருந்து கிளம்பும் போது மனத்துக்கு நிறைவாக இரு இளைஞர்கள் மினி சைக்கிளை மூப்பனாருக்குக் கொடுக்கிறார்கள். அதை அப்படி, இப்படித் திருப்பிப் பார்த்த மூப்பனார், "அட நல்லாயிருக்கே... நம்ம கார்ல முன்னாடி மாட்டிவிடப்பா!" என்கிறார்.

"ராகுகாலத்துக்கு முன்னாடி ஐயா கிளம்பிடுவாரு" என்கிறார் அவரது உதவியாளர் நம்மிடம். ஆனால் ராகுகாலம் துவங்கிய பின்னரே பிரசாரத்துக்குக் கிளம்பி நம்மை அதிர்ச்சியடைய வைக்கிறார் மூப்பனார்!

ஜெயங்கொண்டானை நோக்கி விரையும் போது ரோட்டோரத்திலிருந்த தமது ஓட்டுநரின் வீட்டுக்கும் செல்ல ஐந்து நிமிடம் ஒதுக்குகிறார். ஆரத்தி எடுக்கும் அந்தக் குடும்பத்தினரிடம் தமது தாராளத்தைக் காண்பிக்கிறார். உடன்வரும் பெரம்பலூர் தொகுதி விடுதலைச் சிறுத்தைகள் வேட்பாளர் 'தடா' பெரியசாமி பொன்னாடை போர்த்துகிறார்.

சோழவரத்தில் சுமாரான கூட்டம். "ஐயா.. இந்தத் தேர்தலில் எடுத்திருக்கிற முடிவு சரிதாங்க. தில்லியைப் பற்றிக் கவலைப்படாமல் தமிழ்நாட்டில் 2001-ல் காமராஜ் ஆட்சி அமைவதற்குச் சரியான அடித்தளமாக இப்போது ஐயா உண்டாக்கிய கூட்டணி இருக்குங்க" என்கிறார் தனியார் வங்கியில் வேலை பார்க்கும் சந்திரசேகரன். திருப்பனந்தாளில் நாம் சந்தித்த சங்கரன், "கொஞ்சம் அவசரப்பட்டுட்டாங்க.. இந்தப் பாராளுமன்றத் தேர்தலில் தி.மு.கவுடன், ஏதாவது ஓர் உடன்பாடு வைத்து தேர்தலைச் சந்தித்திருக்கலாம். அதன்பின் 'என் வழி... தனி வழி' என்று போயிருக்கலாம். இப்பப் பாருங்க... இந்தத் தேர்தலில் கணிசமாக வோட்டு வாங்கினாலும் எந்தத் தொகுதியிலாவது வெற்றி பெறும் அளவுக்கு வோட்டு வாங்க முடியுமா என்பது சந்தேகமாக இருக்கிறது!" என்கிறார்.

மூப்பனாருடன் பயணத்தில் செல்கிறார் பீட்டர் அல்போன்ஸ். ஜெயங்கொண்டான் கூட்டத்தை முடித்து விட்டு ஆண்டிமடத்துக்குச் செல்லும் போது மழை பிடித்துக் கொள்கிறது. அந்த மழையிலேயே ஆண்டிமடத்தில் மேடையேறுகிறார் மூப்பனார். கூட்டத்தில் 90 சதவீதம் கிராமப்புற இளைஞர்கள். அவ்வளவு பேரும் திருமாவளவனின் உடன்பிறப்புக்கள். "அடுத்த வேளை சோற்றுக்கு வழியில்லாதவர்களுக்கும், மழைக்காலங்களில் குடையில்லாமல் நடப்பவர்களுக்கும், கூரையில்லா வீடுகளில் குடியிருப்பவர்களுக்கும் வெயிலில் கால் செருப்பு கூட அணிய வசதியில்லாதவர்களுக்கும்தான் மக்கள் தலைவர் மூப்பனார் தலைமையிலுள்ள இந்த அணி பாடுபடுகிறது. தமிழ்நாட்டை, மாறி மாறிக் கொள்ளையடிக்கும் திராவிட இயக்க ஆட்சிகளுக்கு முற்றுப் புள்ளி வைப்போம். 'பெரும்பான்மை ஆள வேண்டும்; சிறுபான்மை வாழ வேண்டும்' இந்த ஜனநாயக தத்துவத்திற்கு நடமாடும் உதாரணமாக இருப்பவர் மக்கள் தலைவர் மூப்பனார் அவர்கள்தான். அவர் கரங்களை வலுப்படுத்த சைக்கிளில் வாக்களியுங்கள்" என்று பேசி முடிக்கிறார் பீட்டர் அல்போன்ஸ்.

அதே டெம்போவைத் தொடர்ந்து கையாண்டு கூட்டத்தினரை கட்டிப் போடுகிறார் திருமாவளவன். சாதாரணமாக மூப்பனார் அவ்வளவாகப் பேசுவதில்லை.

மிகச் சில கூட்டங்களைத் தவிர, இந்தத் தேர்தல் பிரசாரத்தில் மூப்பனார் அதிகபட்சமாக ஐந்து நிமிடங்களுக்கு மேல் பேசியதில்லை. "இந்தப் பகுதி எங்க (விடுதலைச் சிறுத்தை) செல்வாக்கு கொடிகட்டிப் பறக்கும் பகுதி. மூப்பனார் ஐயாவோட கூட்டணி அமைத்திருப்பதால் எங்களுக்கு ஒரு கௌரவம் கிடைத்திருக்கு. 'வன்முறைக் கும்பல்' என்று எங்களை அலட்சியப்படுத்தியவர்களைக் கூட சற்று யோசிக்க வைத்திருக்கிறது இந்தக் கூட்டணி" என்கிறார் பட்டதாரி இளைஞரான செல்வம். தேர்தல் பிரசாரத்தில் அனுபவமில்லாத இளைஞர்கள் ஆதலால், காட்டாறு வெள்ளத்தை கட்டுப்படுத்தி, உழைப்பைப் பெற்று பயனை அறுவடை செய்ய, த.மா.கா. பிரமுகர்களின் அனுபவங்கள் கைகொடுக்கின்றன.

காட்டுமன்னார்கோயிலில் கடைத் தெருவின் இருபக்கமும் வரிசையாக நின்று மூப்பனாருக்கு வாழ்த்துச் சொல்கிறார்கள் மக்கள். லால்பேட்டை, இஸ்லாமியப் பெருமக்கள் அதிகமாக வசிக்கும் ஏரியா. அங்கு அட்டகாசமான வரவேற்பு. "நாங்க இந்த முறை தி.மு.க. அணிக்குப் போட மாட்டோம். ஆனால் நீங்க நினைக்கிற மாதிரி ஜெயலலிதாவுக்கும் போட மாட்டோம். எங்களைப் பொறுத்த வரை சிறுபான்மையோரின் முழுப் பாதுகாவலனாக மூப்பனார் ஐயாதான் தெரிகிறார். அவருக்குத்தான் எங்கள் வோட்டு" என்று நம்மிடம் சொல்கிறார் காதர் மீரான்.


• சிறு சைக்கிளைப் பரிசாகத் தரும் இளைஞர்கள்...

"தமிழக முஸ்லீம் முன்னேற்றக் கழகம் (த.மு.மு.க.) ஜெயலலிதாவை ஆதரிக்கச் சொல்லியிருக்கிறதே?"

"அந்தப் பசங்க ஏதாவது சொல்லிட்டுப் போவாங்க. அதெல்லாம் நமக்குச் சரியாக வராதுங்க" என்கிறார் அவர்.

காட்டுமன்னார்கோயிலிலிருந்து மெயின் ரோட்டிலேயே சிதம்பரத்துக்குச் செல்லாமல், வெளத்தூர் வழியாகச் செல்லும் மண் பாதையில் செல்கிறது மூப்பனாரின் கான்வாய். வெளத்தூர், 2000 மக்கள் தொகை கொண்ட மிகச் சிறிய கிராமம். அங்கு ஆள் உயர அம்பேத்கர் சிலையைத் திறந்து வைக்கிறார் மூப்பனார். சிலை அருகில் கூட போக விடாமல் கூட்டம்

(தொடர்ச்சி 28-ம் பக்கம்)

# அமரர் கல்கி நூற்றாண்டு விழா



அன்புடையீர்,

வணக்கம். அமரர் கல்கி நூற்றாண்டு விழா, சென்னை தேனாம்பேட்டை காமராஜர் அரங்கில் 9.9.1999 வியாழக்கிழமை காலை 9 மணியிலிருந்து முழுநாள் விழாவாக நடைபெறுகிறது. தாங்கள் சுற்றம் சூழ வந்திருந்து சிறப்பிக்க வேண்டுகிறோம்.

## நிகழ்ச்சி நிரல்

09.00 : **சேஷம்பட்டி திரு. சிவலிங்கம் குழுவினரின் நாகஸ்வர இசை**

10.00 : இறைவணக்கம் : **குமாரி காயத்ரி**

10.05 : **அமரர் கல்கி நூற்றாண்டுச் சிறப்புப் போட்டிகளுக்கான பரிசளிப்பு விழா**
தலைமை : **டாக்டர் நல்லி குப்புசாமிச் செட்டி**
பரிசுகள் வழங்கி, வாழ்த்துபவர் : **கவிஞர் வைரமுத்து**
இசைப் பாடல் போட்டியில் பரிசு பெற்ற பாடலை இசையமைத்துப் பாடுபவர் : **திருமதி பாரதி திருமகன்**

11.00 : **'கல்கி' நூற்றாண்டு மலர் மற்றும் 'காற்றினிலே வரும் கீதம்' (திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் குரலில் அமரர் கல்கியின் பாடல்கள்) HMV கேஸட் வெளியீடு.**
தலைமை : **டாக்டர் எம்.ஏ.எம் இராமசாமி**
(இணை வேந்தர், அண்ணாமலை பல்கலைக் கழகம்)
வெளியிடுபவர் : **திரு. என். ரவி (ஆசிரியர் 'ஹிந்து' நாளிதழ்)**
முதல் படிகள் பெற்று வாழ்த்துரை வழங்குவோர் :
**சங்கீத கலாநிதி திரு. டி.என். கிருஷ்ணன்; பெங்களூர் கல்கி ஏஜெண்ட் டாக்டர் எஸ்.ஆர். வெங்கடாசலம்**

12 – 1 : நூல்கள் வெளியீட்டு விழா : **அமரர் கல்கியின் சிறந்த சிறுகதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள் அடங்கிய *'கல்கி களஞ்சியம்'*** (தொகுப்பாசிரியர் திரு. டி.எஸ். ரங்கராஜன்;

*பிரசுரம் : வானதி பதிப்பகம்)* மற்றும் **'பெங்குவின்'** பிரசுரமாக **அமரர் கல்கியின் சிறுகதைகளின் ஆங்கில மொழி பெயர்ப்பு நூல் *'Kalki : Selected Stories'*** (மொழிபெயர்ப்பாளர் : திருமதி கௌரி ராம்நாராயண்)

தலைமை : **திரு. ஏவிஎம். சரவணன்**

வெளியிடுபவர் : **திரு. டி.எஸ். ராகவன்**

**(சேர்மன், இந்தியன் வங்கி)**

முதல் பிரதிகள்பெற்று வாழ்த்துரை வழங்குபவர் :

**திரு. சோ ராமசாமி** (ஆசிரியர், துக்ளக்)

**பிற்பகல்**

**2 – 4 :** **கருத்தரங்கம்**

தலைமை : **டாக்டர் அவ்வை நடராஜன்**

உரையாற்றுவோர் : **டாக்டர் பொன்மணி வைரமுத்து**

**(கல்கியும் பெண்மையும்)**

**டாக்டர் பூவண்ணன் (வரலாற்றுக்குப் புது வாழ்வு)**

**டாக்டர் இரா. மோகன் (நகைச்சுவையாளர் கல்கி)**

**டாக்டர் தி. ராசகோபாலன்**

**(கல்கியின் கைவண்ணமும் கால் வண்ணமும்)**

**மாலை**

06.00 : அமரர் கல்கி நூற்றாண்டை ஒட்டி சிறப்பு அஞ்சல் **தலை வெளியீட்டு விழா**

**தமிழ்த் தாய் வாழ்த்து**

தலைமையுரை : **திரு ஜி.கே. மூப்பனார்**

**(தலைவர், தமிழ் மாநில காங்கிரஸ்)**

வாழ்த்துரை : **திரு. சாவி**

அஞ்சல் தலை வெளியீடு : **திரு.எஸ். ஜெயராமன்**

**(முதன்மை அஞ்சல் துறைத் தலைவர், தமிழ்நாடு அஞ்சல் வட்டம்)**

முதல் தபால் தலையைப் பெற்றுக் கொண்டு சிறப்புப் பேருரை ஆற்றுபவர்:

**தமிழக முதல்வர்**

**மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி**

07.05 : **தேசிய கீதம்**

07.15 : திரு. 'கல்கி' சதாசிவம் தயாரித்து, அமரர் கல்கி திரைக் கதை, வசனம் எழுதி, திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி நடித்த **'பக்த மீரா'** – திரைப்படம்

அன்புடன் அழைக்கிறோம்

# அமரர் கல்கி நூற்றாண்டு விழா போட்டிகள் :


• திலகவதி


• வையவன்


• கி. ராஜேந்திரன்

# ரூ.60,000 பரிசுகளைத் தட்டிச் சென்றவர்கள் யார்?

அமரர் கல்கி நூற்றாண்டு விழாவை முன்னிட்டு நடத்தப்பட்ட நாவல் போட்டிக்கான ரூ. 25,000 பரிசை யார் தட்டிச் செல்லப் போகிறார்கள் என்று அனைவருமே ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம்.

எழுத்தாளர் வையவன், ஐ.பி.எஸ். அதிகாரியும் எழுத்தாளருமான திலகவதி ஆகிய இருவரும் 'உயிர்களைத் தேடித் தேடி' என்கிற நாவலை இறுதிச் சுற்றில் பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுத்தார்கள்.

எழுதியவர் :
இ. தா. நாராயணன்,
50/2, புதுத்தெரு,
செய்யாறு – 604 407.

ரூ. 10,000 பரிசு பெறும் மினி தொடர் எது? எழுத்தாளர்கள் சு(ரேஷ்) பா(லகிருஷ்ணன்), அனுராதா ரமணன் ஆகியோர் மீண்டும் மீண்டும் படித்ததில், இரண்டு மினி தொடர்களை பரிசுக்குரியவை என்று தேர்ந்தெடுத்தார்கள். அதனால் பத்தாயிரம் ரூபாய்ப் பரிசை ஐயாயிரம், ஐயாயிரமாகப் பிரித்து இரண்டுக்கும் வழங்கப்படுகிறது.

1. ரகசியங்கள் சொல்வதற்கு அல்ல.

எழுதியவர் :
சி. ஆர். ஈஸ்வர்,
7, விநாயகா அபார்ட்மெண்ட்ஸ்,
டிரஸ்ட்பாக்கம் (தெற்கு),
மந்தைவெளி,
சென்னை - 28.

2. பிராந்தியம்,

எழுதியவர் :
நாராயணி கண்ணகி
சந்தைக்கொடியூர்,
ஜோலார்ப்பேட்டை
– 635 851.


• சுப்ர.பாலன்

அமரர் கல்கி நூற்றாண்டு விழா போட்டியில் நகைச்சுவை இல்லாமலா? தாங்கள் சென்று வந்த பல்வேறு ஊர்கள் பற்றியும் நாடுகள் பற்றியும் ஏராளமான வாசக, வாசகியர் நகைச்சுவையாக எழுதியனுப்பியிருந்தனர். அவர்களில், அந்தமானுக்குச் சென்று வந்த கா. புவனேஸ்வரி தமது அனுபவத்தை



• சுபா



• அனுராதா ரமணன்



• சுஜாதா விஜயராகவன்

நகைச்சுவையாக எழுதி நடுவர்களான சாருகேசியையும் ம.வே. சிவகுமாரையும் அசரவைத்து விட்டார். அதனால், 'அந்தமானைப் பாருங்கள் அழகு' என்கிற அவரது நகைச்சுவைப் பயணக் கட்டுரையே ரூ. 10,000 பரிசைத் தட்டிக் கொண்டு விட்டது.

**முகவரி : கா. புவனேஸ்வரி,**
**K 6, ஹெச்.ஐ.ஜி. ஃப்ளாட்ஸ்,**
**கோட்டூர்புரம்,**
**சென்னை – 600 085.**

இசைப் பாடல் போட்டி நடுவர்களான லால்குடி ஜெயராமன், சுஜாதா விஜயராகவன், வ.வே.சு. ஆகியோர், அலசி அலசி ஆராய்ந்ததில், மதுர பாரதி (சு. கணபதி) எழுதியிருந்த 'முற்றும் உறங்காதே' என்கிற இசைப் பாடல் அவர்களையும் நெகிழச் செய்து விட்டது. அதுவே ரூ. 10,000 பரிசையும் தட்டிக் கொண்டு போய் விட்டது.



• ம.வே. சிவகுமார்

**முகவரி :**
**மதுரபாரதி,**
**73, ரயில்வே ஸ்டேஷன் சாலை,**
**திண்டுக்கல் –**
**624 003.**



• சாருகேசி

இறுதியாகக் கடந்த ஓராண்டாகக் கல்கி கலெக்ஷன் பகுதியில் வெளியான அமரர் கல்கியின் எழுத்தோவியங்களில் தங்களுக்குப் பிடித்தது எது? ஏன் பிடித்தது? என்பதை ஒரு கட்டுரையாக எழுதுவதுதான் போட்டி. ஆயிரக்கணக்கான வாசகர்கள் எழுதி அசத்தி விட்டார்கள். இருந்தாலும் நடுவர்களான கி. ராஜேந்திரன், சுப்ர.பாலன் ஆகியோரை அசத்தியவர் சி. எஸ். குமார்! ரூ. 5000, பரிசு இவருக்கு!

இவரை அசத்திய அமரர் கல்கியின் கட்டுரைகள், 'புதிய விநாயக புராணம்', 'கடவுளே எங்கள் சங்கீதம்' ஆகிய இரண்டு.



• லால்குடி ஜெயராமன்

**முகவரி :**
**சி. எஸ். குமார்,**
**407, 'B' விங்,**
**கிருஷ்ண குஞ்ச் நெ. 1**
**தம்பே நகர்,**
**முலண்ட் (மேற்கு)**
**மும்பை – 400 080.**

நடுவர்கள் தேர்ந்தெடுத்த இந்த எல்லாப் போட்டிகளிலும் கல்கி ஆசிரியரும் உடனிருந்தார் என்று சொல்லத் தேவையில்லை.

பரிசுக்குரியவர்களுக்கு 9.9.99 அன்று சென்னையில் நடைபெறும் அமரர் கல்கி நூற்றாண்டு விழா மேடையில் பரிசுகள் வழங்கப்படும்.



• வ.வே.சு.

**– ஆசிரியர் குழு**

படங்கள் : **யோகா**



செல்லப் பசுங்கிளியே – எந்தன்
சிந்தூர வண்ணப் பொட்டே
நல்ல பவுர்ணமியே – சொல்ல
நாவில் இனிப்பவளே ... (செல்லப்)

பெண்ணே குலக்குருத்தே – அறிவுப்
பெட்டகமே மருந்தே
மண்ணில் மலர்ச்சி தர – விழுமோர்
மழைத்துளி போன்றவளே ... (செல்லப்)

நான் செய்த தவமோ – தந்தை
நடத்திய வேள்விகளோ
வான் பெய்த வரமோ – வந்தாய்
மகிழ்ச்சிக் கெல்லையுண்டோ ... (செல்லப்)

வள்ளிக் குறமகள் போல் – வந்தே
மங்கையராய்ப் பிறந்தால்
கள்ளிப் பால் புகட்டுகிற – சுயவர்
கண்ணைத் திறப்பாயோடி ... (செல்லப்)

விரளி மஞ்சள் கிழங்கே – தாமே
பெற்ற மகள் அருந்த
அரளி விதை அரைப்பார் – அவர்க்கே
அறிவு புகட்டுவையோ ... (செல்லப்)

கருவைப் படம் பிடித்தே – அதனில்
கண்டனர் பெண்ணெண என்றால்
உருவமிலா முளையை – பறிப்பார்
உள்ளம் திருத்துவையோ ... (செல்லப்)

நெல்லின் இளங்கதிரே – எனது
நெஞ்சின் ஒளிக்கதிரே
அல்லல் வரும்போது – மனதின்
ஆற்றலினால் தகர்ப்பாய் ... (செல்லப்)

பொறுமையும் வேண்டும் – துணிந்து
போரிடவும் வேண்டும்
நறுமலர்க் கொத்தே – வருமோர்
நாளைக்கு நல்வாக்கே ... (செல்லப்)

சற்றே கண்ணயர்வாய் – தங்கமே
தாலேலோ சொன்னேன்
முற்றும் உறங்காதே – சோதனை
முன்னே பலவும் உண்டு. ... (செல்லப்)

– மதுரபாரதி

# நீலகிரித் தொகுதியில் ஒரு சுவாரஸ்யம்!

**தேர்தல் '99**

"மனுதாக்கலின் போது எங்கள் அணியில் மட்டும் பன்னிரண்டாயிரம் பேர். அவர்கள் அணியில் நாலாயிரம் பேர் கூடத் தேறாது. இவ்வளவு கூட்டம் ஊட்டி சரித்திரத்தில் கண்டிராத அதிசயம். இதிலிருந்தே தெரியவில்லை? இந்தத் தொகுதி நிச்சயம் எங்களுக்குத்தானென்று?" என்று பி.ஜே.பியினரும், காங்கிரஸாரும் மாறி மாறிச் சொல்லி புளகாங்கிதப்பட்டுக் கொள்கின்றனர், நீலகிரித் தொகுதியில்!

களத்தில் சென்ற முறை வென்றவர் பி.ஜே.பி. வேட்பாளர் மாஸ்டர் மாதன். இரண்டு முறை தோற்று, அதற்கு முன் நான்கு முறை தொடர்ந்து வென்றவர் காங்கிரஸ் வேட்பாளர் ஆர். பிரபு.

மாதனுக்கும் பிரவுக்குமான போட்டி கடைசி நேரத்தில் தி.மு.க. அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமிக்கும், சட்டமன்றக் கொறடா முபாரக்குக்குமான பந்தயமாக உருவெடுத்துள்ளது படு சுவாரஸ்யம். வேறொன்றுமில்லை.

நீலகிரி மக்களவைக்கு உட்பட்ட கோவை மாவட்ட சட்டமன்றத் தொகுதிகள் மூன்றிலும் நீலகிரி மாவட்டத்திற்கு உட்பட்ட சட்டமன்றத் தொகுதிகள் மூன்றிலும் எந்த மாவட்டம் மாஸ்டர் மாதனுக்கு அதிக வாக்குகள் பெற்றுத் தருகிறதோ அதற்கு, குறைவான வாக்குகள் பெற்றுத் தரும் மாவட்டக் கமிட்டி, பத்துப் பவுன் சங்கிலி பரிசாக அளிக்க வேண்டும். கோவை மாவட்டத்திற்குப் பொறுப்பு அமைச்சர்! நீலகிரிக்குப் பொறுப்பு சட்டமன்றக் கொறடா!

"எங்க மாதன்ஜிக்கு கொஞ்சங்கூட வேலையில்லாம செய்திட்டாங்க சார் அமைச்சரும், சட்டமன்றக் கொறடாவும். ஊட்டி, கூடலூர், மேட்டுப்பாளையம், குன்னூர், தொண்டாமுத்தூர் எம்.எல்.ஏக்கள் எல்லாமே அவங்க. அப்புறம் பிரசாரத்துக்கு சொல்லவும் வேண்டுமோ:" உற்சாகக் களிப்பில் மிதக்கின்றனர் பா.ஜ.கவினர்.

இங்கே இப்படி என்றால் பிரபுவின் 'கை'ங்கர்யத்தால் அ.தி.மு.க. வட்டாரத்தில் ஏகக் குதூகலம். சட்டமன்றத் தொகுதிவாரியாக, நகரவாரியாக, ஒன்றியம், பஞ்சாயத்து, கிராம வாரியாக பிரபு தாராளப் பிரபுவாக கவனித்திருக்கிறாராம். பட்டிதொட்டி எங்கெங்கு காணினும் கைகளாய்க் காட்சியளிக்கின்றன. காங்கிரஸ்காரர்களை விட அ.தி.மு.கவினரே கதர்ச் சட்டைகளில் அதிகமாய்த் தெரிகிறார்கள்.

"ஏற்கெனவே பிரபு சாரோட ஐக்கியமாகிப் போனவங்க சார் நாங்க. போன தடவைதான் அம்மாவுக்கும் சோதனைக் காலம். எங்களுக்கும் போறாத காலம். 'செழிப்பு' இல்லாமப் போச்சே சாமி. ஆனாலும் சாருக்காக (பிரபுவுக்கு) நாங்க சில பேர் விசுவாசமா திரைமறைவுல வேலை செஞ்சோம். இப்ப 'அம்மா' திரும்பவும் 'அன்னை'யோட ஐக்கியமாகிப் போனதுல எங்களுக்குத்தான் சார் நிறைய சந்தோஷம்!" என்கிறார்கள்.

பிரபுவின் பிரசாரத்தில் ஹிந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ் தொழிற்சாலைப் பிரச்னையும் தேயிலை விலைச் சரிவுமே முன்னிலை வகிக்கின்றன. மாஸ்டர் மாதனின் பிரசாரத்திலோ சுடுகாட்டுக்குப் பாதையமைத்தது, பாலத்திற்கு, பள்ளிக்கூடத்திற்கு நிதி ஒதுக்கீடு செய்தது, இருதய அறுவை சிகிச்சைக்கு நிதி உதவி பெற்றுத் தந்தது என்று தட்டுத் தடுமாறி பதின்மூன்று மாதத்து வேலையைப் பட்டியலிடும் முயற்சி...

பிரபுவுக்குத் தொகுதியில் தனிப்பட்ட முறையில் நல்ல செல்வாக்கு. நான்கு முறை எம்.பியாக இருந்து, நிறையச் செய்திருப்பதாக மக்களிடமே பேச்சு. அதனால்தான் சென்ற தேர்தலில் தனித்து நின்ற காங்கிரஸ் வேட்

பாளர்களில் தமிழகத்திலேயே அதிக வாக்குகளைப் (ஒரு லட்சத்துப் பத்தாயிரம்) பெற்றார்.

"இன்னமும் கூடுதலாகவே பெற வேண்டிய மனிதர். அதற்குள் குண்டு வெடிப்பு நிகழ்ந்து தொண்டாமுத்தூர், மேட்டுப்பாளையம், அவினாசி பகுதிகளில் எங்களுக்கு விழ வேண்டிய வோட்டு மாதனுக்கு திசைமாறிப் போனது!" என்று பிரபுவின் ஆதரவாளர்கள் இப்போதும் பேசுகிறார்கள். பிரபுவுக்கு மக்களிடம் உள்ள ஒரே குறைபாடு, ஜெயித்தபின் தொகுதிப் பக்கமே வருவதில்லை என்பதுதான். ஏன் அப்படி? அவரையே கேட்டோம்.

"இது உண்மையேயில்லை. தோல்வி அடைந்தும் கூட கடந்த மூன்றாண்டுகளாக அடிக்கடி தொகுதியில் சுற்றுப்பயணம் செய்து அவர்களின் பல பிரச்னைகளைத் தீர்த்து வைத்துள்ளேன். இங்குள்ள எம்.பி. – ஊட்டியிலேயே குடியிருக்கிற எம்.பி. – ஊட்டிப் பக்கமே எட்டிப் பார்க்கவில்லை தெரியுமா? இதை இந்தத் தொகுதி மக்கள் நன்றாகவே புரிந்து கொண்டு பேசுகிறார்கள். நிலையான ஆட்சியை காங்கிரஸ்தான் திரும்பவும் அமைக்க முடியும் என நம்புகிறார்கள். அது நான் பிரசாரத்திற்குப் போகும் போதே தெரிகிறது!" என்றார்.



• மாதன்



• பிரபு

**ஊ**ட்டி, கூடலூர், குன்னூர் பகுதிகளில் திடீர் திடீரென ஆர்க்கெஸ்ட்ரா முளைக்கிறது. இசை கேட்கக் கூடும் கூட்டத்தில் திடீரெனப் புகுந்து வாக்குகள் கேட்கிறார் பிரபு. இது புதுவித பிரசார உத்தி என்கின்றனர் காங்கிரஸார்.

மேட்டுப்பாளையம், தொண்டாமுத்தூர் பகுதிகளில் பி.ஜே.பி. வேட்பாளர் மாதன் மீது பெரிதாக எந்த அதிருப்தியும் இல்லை. கிராம மக்கள் நிறைந்த அவினாசிப்பக்கம் மக்கள் ஒரு படி மேலே போய் 'வாஜ்பாயை' புகழுகிறார்கள். அம்மாவின் 'கோர்ட், கேஸ், வாஜ்பாய்க்குக் கொடுத்த தொந்தரவு' பற்றியெல்லாம் பேசி 'தாமரைக்கே' வாக்களிக்கப் போவதாகவும் சிலர் உணர்ச்சிமயமாய்ப் பேசி நம்மை ஆச்சர்யமூட்டுகிறார்கள்.

ஆனால் குன்னூர், உதகைப் பக்கம் அவர் மீது அதிருப்திகள்.

"போன தடவை பி.ஜே.பிக்குத்தான் வோட்டுப் போட்டோம் சார். ஆனா அவர் தொகுதிப் பக்கம் நன்றி சொல்லக்கூட வரலை. இப்பவும் பஞ்சாயத்து வேலைகளையே தாம் செஞ்சதா பட்டியல் போடறார். கார்கிலுக்கு அதிக நிதி வசூல் செய்த மாவட்டம் (ஒரு கோடி ரூபாயாம்) எங்களுடையது. சட்டமன்றக் கொறடா, குண்டன் எம்.எல்.ஏ., பஞ்சாயத்து ஊராட்சிகள் கூட எட்டுத்திக்கும் நிறைய வசூல் செய்து கொடுத்தது. ஆனா எங்க தொகுதி எம்.பி. எதுவும் செய்யலை!"– இப்படி நம்மிடம் பேசினவர் சாட்சாத் பி.ஜே.பிக்காரர்தான்!

ஏன் இப்படி? மற்ற தொகுதியில் வராத அதிருப்தி தாம் வசிக்கும் ஊரிலேயே (ஊட்டி) ஏன் வரவேண்டும்? மாதனிடமே கேட்டோம்.

"அவங்களுக்கு எம் மேல எந்தக் குறையும் கண்டுபிடிக்க முடியலை. அதனால எதையாவது சொல்லித்தானே ஆக வேண்டும்? பதினொன்றரை வருஷ காலமா பதவியில் இருந்து விட்டு ஒன்றுமே செய்யாமல் பதின்மூன்று மாத காலமே பதவியில் இருந்த நான் 'ஊட்டியிலேயே இல்லை'ன்னு பிரசாரம் செய்ய றாங்கன்னா அவங்ககிட்ட பிரசாரம் செய்ய ஒண்ணுமில்லேன்னு அர்த்தம். போன தடவை நான் 'வீக்'காக இருந்த தொகுதியில் கூட (கூடலூர், குன்னூர், ஊட்டி) இப்ப மக்கள் எனக்கு நல்ல வரவேற்புக் கொடுக்கிறாங்க. அதுக்கு முபாரக், குண்டன், பொங்கலூர் பழனிச்சாமி எல்லாம் நல்ல ஒத்துழைப்புக் கொடுக்கிறார்கள். நிச்சயமா போன தடவை விட இந்த முறை ஒரு லட்சம் வாக்குகள் கூடுதலாகப் பெற்று வெற்றி பெறுவேன்ங்கற நம்பிக்கையும் இருக்கு!" என்றார்.

கட்டுரைத் தொகுப்பு :

**கேயெஸ்வி**




பலதரப்பட்ட, மூன்று தலைமுறை வாசகர்களை ஈர்க்கும் சக்தி, கல்கியிடம் எப்படி, எவ்வாறு தோன்றியது? வளர்ந்தது?

கல்கி தோற்றுவித்த உரைநடைதான் காரணம் என்ற சுலபமான பதில் ஒன்று இருக்கத்தான் செய்கிறது. அகராதியைத் தேட வைக்கும் கரடுமுரடான பதங்கள் இல்லாத எளிய நடை; அதில் நகைச்சுவை இழைகள்; தோளில் கையைப் போட்டுக் கொண்டு அந்தி நேரத்தில் காற்றாட கடற்கரையில் உலவிக் கொண்டே சல்லாபம் செய்யும் தோழமை... என்று அடுக்கிக் கொண்டே போகலாம்.

மேலும் சிந்தித்தால் கல்கித் தமிழின் தனித்தன்மைக்கு ஓர் இலக்கிய உத்தியும் காரணம் என்று தோன்றுகிறது. ஆனால் இது அறிவுபூர்வமாகச் செதுக்கப்படாமல், கல்கியின் ஆளுமையில் இயல்பாகவே கைவந்த உத்தி என்று எண்ணுகிறேன்.

பொதுவாகக் கவிதைகளில் அதிகமாகக் கையாளப்படும் யுக்தி – படிமங்கள் மூலம் வர்ணனைகளை மட்டுமின்றி உணர்வுகளையும் உணர்ச்சி மாற்றங்களையும் கூட விவரிக்காமலே படம் பிடிக்கின்ற யுக்தி!

# கல்கியின் படிமங்கள்

கௌரி ராம்நாராயண்

கண்ணால் காணும் காட்சியைத்தான் படிமம் என்று பொருள் கொள்கிறோம். இலக்கியத்திலும் இந்த visual imageதான் விரவிக் கிடக்கிறது. ஆனால் ஐந்து புலன்கள் வழியே நாம் அடையும் எல்லா அனுபவங்களுக்கும் படிமங்கள் உண்டு. ஙொய் என்ற சில்வண்டின் நாதமும், தூரத்தில் குரைக்கும் நாயும் உடனே இருளைக் குறித்து விடுகின்றன. கோயில் என்று எண்ணியவுடன் கற்பூர மணம் வீசுகிறது. ஒரு தாத்தா என்றோ ஒருநாள் பச்சை மாங்காயைக் கடித்து விடுகிறார். அதன் சுரீல் புளிப்பு அவரை வேறு ஒரு உலகுக்கே அழைத்துச் சென்று விடுகிறது. சிறுவயதில் மரமேறி, மாங்காய் திருடி, நண்பர்களுடன் காக்காய்க் கடி கடித்து உண்டு விளையாடிய நிகழ்ச்சிகள் மனத்தில் விரிகின்றன! அதே போல ஒரு பாட்டி ரோஜாப்பூவைத் தொடுத்துக் கொண்டிருக்கிறார். ஒரு மொட்டை, இதழ் நீவி மலர வைத்துப் புஷ்ப வரிசையில் சேர்க்கும்போது திடீரென்று அவருக்குத் தன் குழந்தையை அணைத்துக் கொஞ்சிய இனிய ஸ்பரிச உணர்வு ஏற்படுகிறது.

மிகவும் சிறந்த, கனிந்த எழுத்தாளர்களால் தான் ஒரே படிமத்தால் இரண்டு மூன்று புலனுணர்ச்சிகளைத் தூண்ட முடியும். அதுபோன்ற எழுத்துக்கள் காலத்தை வென்று மக்கள் இதயத்தில் இடம்பெறுகின்றன. அவற்றில் தீட்டப்பெற்ற கருத்துக்கள் பிற்காலத்திற்குப் பொருந்தா விட்டாலும், உணர்வுகள் ஜீவசக்தி குன்றாமல், மின்சாரம் பாய்ச்சிக் கொண்டே நிலைத்து நிற்கின்றன. பல நூற்றாண்டுகளாகப் படிக்கப்பட்டு, உலகின் பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு, தொடர்ந்து நடிக்கப்பட்டு, திரைப்படமாக்கப்பட்டு, புதுப்புது முறைகளில் பொருள் கற்பிக்கப்பட்டு வரும் ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் இதுபோன்ற படிமங்கள் தாம் உயிர்நாடியாகச் செயல்படுகின்றன என்று அறிஞர்கள் கணிக்கிறார்கள்.

பார்த்திபன் கனவிலிருந்து ஓர் உதாரணம்:

"மேற்குத் திசையில், சூரியன் அஸ்தமனமாகிக் கொண்டிருந்த காட்சி, அடிமரங்கள் வழியாகத் தெரிந்தது. மேல் வானம் முழுதும் பத்தரை மாற்றுத் தங்க விதானத்தைப் போல் தகதகவென்று பிரகாசித்தது. பார்த்துக் கொண்டிருக்கும்போதே தங்க நிறத்தின் சோபை மங்கிக் கொண்டு வந்தது. சற்று நேரத்திற்கெல்லாம் மேல் வானம் முழுதும் ஒரே ரத்தச் சிவப்பாக மாறிற்று."

இந்த வர்ணனையை என் மகனுக்குப் படித்துக் காட்டியபோது (அப்போது அவனுக்கு ஏழு வயது) "அய்யோ!" என்ற அலறலுடன் எழுந்து ஓடி விட்டான். சிவந்த வானம் அவனுக்கு போரின் பயங்கரங்களை அப்படியே படம்பிடித்துக் காட்டி விட்டது!

**வா**சகர் மனத்தைக் கவ்வும் காட்சிகளை கல்கி தொடக்க காலத்திலிருந்தே உபயோகித்திருக்கிறார். கற்பனைக்கதைகளில் மட்டுமல்லாமல் எல்லாவிதக் கட்டுரைகளிலும் அவற்றைத் தாராளமாகக் கலந்து தம் கருத்தை நம் மனத்தில் ஊடுருவச் செய்கிறார்.

ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் ராகமாலிகை விருத்தம் எப்படி இருந்தது என்றால்,

"மலைச்சுனையிலிருந்து கிளம்பும் அருவி சில இடங்களில் மதயானையின் நடையில் கம்பீரமாகப் போகிறது. சில இடங்களில் ஓடுவதே தெரியாமல் நிதானமாய்ப் போகின்றது. திடீரென்று ஓரிடத்தில் ஆகாசகங்கையைப் போல் கொட்டுகிறது. கொட்டும்போது கோடி கோடி நீர்த்துளிகள் சூரிய கிரணங்

களில் பளீர் பளீர் என்று பிரகாசிக்கின்றன. மலை அருவியானது ஒரு மூடுக்கு வரையில் வந்து திடீரென்று இன்னொரு பக்கம் திரும்பும் காட்சி வெகு ஆனந்தமானது. ஒரு ராகத்திலிருந்து இன்னொரு ராகத்திற்குத் திரும்பும்போது இந்த இன்பக் காட்சி நினைவு வருகிறது."

இதுபோல செவிவழி பாயும் அலைகளை, கண்ணால் காணும் காட்சிகளாக மாற்றி, மனத்தில் பதிய வைப்பதும் கல்கிக்கு கைவந்த கலை.

புறத் தோற்றத்தைப் படம்பிடித்து அதில் அகத்தின் நிலையை இனம் காட்டுவதிலும் அவர் வல்லவர்.

"பொன்னியின் செல்வ"னில் பூங்குழலியின் அபூர்வமான ஆளுமையை புரிய வைக்க அவர் நம்மை விண்மீன்கள் மினுக்கும் வேளையில், அலை ஓசை கர்ஜிக்கும் பின்னணியில், கோடிக்கரை சதுப்பு நிலத்திற்கு அழைத்துச் செல்கிறார். அங்கே திடீர் திடீர் என்று குப்குப்பென்று சீறும் தீப் பிழம்புகளை தன் காதலர்கள் என்று பூங்குழலி பைத்தியச் சிரிப்போடு அறிமுகப் படுத்துகிறாள். பிறகு விம்மி விம்மி அழுகிறாள். அந்த அமானுஷ்யக் காட்சியில் நாம் அந்த மங்கையின் அந்தராத்மாவின் கொந்தளிப்பைக் காண்கிறோம்.

அதே போல, வானதியின் சோகம் இழையோடும் சௌந்தரியத்தை அந்தி வானத்துக் காட்சியாக உருவகிக்கிறார் கல்கி.



**"மாப்பிள்ளைக்கு நல்ல பழக்க வழக்கமெல்லாம் இருக்குன்னு சொன்னீங்களே... என்னென்ன?"**

**"பெரியவங்களுக்கு முன்னாடி 'தம்'மடிக்க மாட்டாரு. தண்ணி அடிச்சா வண்டி ஓட்ட மாட்டாரு.. பலான படத்துக்குப் போனா 'ப்ளாக்'கிலே டிக்கெட் வாங்க மாட்டாரு."**

**– பெரியகுளம் ஆர். வேணுகோபால்**

தியாக பூமியில், நெடுங்கரை கிராம அக்கிரகாரத்தில் "நல்வரவு" "ஸ்ரீராம ஜெயம்" என்று அறிவிக்கும் வாசலைத் தாண்டி முன்கூடத்தில் பட வரிசைகள்; ஸ்ரீ ராமன், வெண்ணெய் உண்ணும் கண்ணன், குழலூதும் கோபாலன், மயிலேறிய முருகன். பூஜை அறையிலிருந்து பாடும் இளம்பெண் சம்பங்கி மலர்களை கோத்துக் கொண்டிருக்கிறாள்.

இந்தச் சிறிய காட்சியில் எவ்வளவு தகவல்கள்! ஆசார அனுஷ்டானமுள்ள, பக்தி செறிந்த, இசை அறிந்த, பார்ப்பனக் குடும்பம் என்ற தகவல், "எப்போ வருவாரோ எந்தன்கலி தீர" என்ற நந்தன் சரித்திரக் கீர்த்தனத்தில் சம்பு சாஸ்த்திரியின் உளப்பாங்கும், அவர் தீண்டாதாருக்கு உதவி செய்து அவப்பெயர் அடையப் போகும் செய்தி. "எப்போ வருவாரோ" என்று உருகும் சாவித்திரியின் இளவயது எதிர்பார்ப்பு. தனக்கு வரன் தேடச் சென்றிருக்கும் தந்தை எப்போது திரும்பி வந்து சித்தியின் கொடுமையிலிருந்து தன்னைக் காப்பாரோ என்ற தொனியும் இதில் ஒலிக்கிறது. பாவம். பிறகு எவ்வளவு நாள் அதே கேள்வியோடு கணவனையும் தந்தையையும் நினைத்து நினைத்து அவள் மனமுடைந்து விம்மப் போகிறாள்!

கல்கியின் செவிகள், அவரது கண்களை விட விரைவாகச் செயல்படுகின்றனவோ என்று தோன்றுகிறது. அவருடைய ஒளிப் பதிவுகளை, தக்க ஒலிப்பதிவுகள் இல்லாமல் காண்பது அரிது. அருவியோ ஆறோ வெறுமே பாய்வதில்லை. 'ஹோ" என்றும் 'சோ' என்றும் "சலசல – சளசள –சொட சொட – கலகல"வென்றும்தான் நர்த்தனம் ஆடுகின்றன. புள்ளினங்களின் கீதங்களை எத்தனைவிதமாக ஒலிக்கச் செய்கிறார்! நிசப்தமான நிலைக்களன் என்றால் எங்கிருந்தோ ஒரு குயிலோ ஒரு இலையின் சலசலப்போ அந்த அமைதியை அடிக் கோடிட்டுக் காட்டும்.

மேல்நாட்டு அறிஞர்கள் காட்சிப் படிமங்களைக் காட்டிலும் இந்த, 'செவிநுகர்ப் படிமங்களையே மேலாகக் கொண்டாடுகிறார்கள்.

"பார்த்திபன் கனவி"ல் படை கிளம்புகிறதா? அதைப் பார்க்கத் தேவையில்லை! இதோ கேளுங்கள்! "ரணபேரிகையுடன் குதிரைகள் கனைக்கும் சத்தம், வீரர்கள் ஒருவரை ஒருவர் கூவி அழைக்கும் குரல்,

அவர்கள் இடைஇடையே எழுப்பிய வீர முழக்கங்கள், வேல்களும் வாள்களும் ஒன்றோடொன்று உராயும் ஒலி, போருக்குப் புறப்படும் வீரர்களைத் தாய்மார்கள் வாழ்த்தும் குரல், காதலிகள் காதலருக்கு விடை கொடுக்கும் குரல், இவற்றுடன் வழக்கத்திற்கு முன்னமேயே துயில் நீங்கி எழுந்த பறவைகளின் கலகல சப்தமும் சேர்ந்து கேட்கிறது!"

இதற்கு முன்பே, இரவில் யுத்த பேரிகை ''தம்ம் தம்ம்'' என்று அதிர்ந்து, எட்டுத் திக்கிலும் பரவி, "அதம்ம் அதம்ம்" (அதாவது ஹதம், ஹதம், சர்வநாசம்) என்று எதிரொலித்தது. பிறகு "யுத்தம் யுத்தம்" என்றே ஒலிப்பதாகத் தோன்றியது!

சப்தங்களின் பட்டியல் மட்டும் படிமம் ஆக முடியாது. சப்தத்திற்கு உட்குறிப்பு என்ன என்று கேட்டால், ''அலை ஓசை''யில் நமக்கு பதில் கிடைக்கிறது. இந்த நாவலில் அலைகளின் ஒலியை தொடக்கத்திலிருந்து எப்படிப் பயன்படுத்தியிருக்கிறார் என்று ஒரு தனி ஆய்வுக் கட்டுரையே வரையலாம். சவுக்குத்தோப்பின் சலசலப்பில் திகில் கொள்ளும் ராஜம்மாளிடம் தொடங்கி, அந்த ஓசை பலவித பாவ அலைகளாக சுதாபாத்திரங்களின் அகத்தில் அல்லோலகல்லோலப்பட்டு, சுதந்திர இயக்க அலைகளாக முட்டி மோதி, தேசத்தைப் பிளக்கும் ராட்சத அலைகளாக நாசகார ஹிம்சைகளைச் செய்து விடுகின்றன.

சீதாவின் உள்ளத்தை இந்த அலை ஓசை எப்படியெல்லாம் அலைக்கழிக்கிறது? பாகிஸ்தானிலிருந்து தேசப் பிரிவினை செய்த காலத்தில் தப்பி வரும்போது, காது கேட்கும் சக்தியை தாற்காலிகமாக இழக்கும் சீதாவின் அகச் செவியில், எப்போதும் திரைகடலின் பேரிரைச்சல், காந்தி மகானின் அந்திம யாத்திரையின் போதுதான் அவள் அலை ஓசையிலிருந்து மீட்சி அடைகிறாள். "ஹரீ, தும ஹரோ" (ஹரீ, மக்களின் துயரை அகற்றுவாயாக) என்ற மீராவின் பாடல் இங்கு செவிவழிப் படிமமாக மாறி நம்மை முதலில் துக்க சாகரத்தில் தத்தளிக்கச் செய்து, பிறகு கருணையின் கரையில், சாந்தியின் எல்லையில், கொண்டு சேர்த்து விடுகிறது.

**நா**சி வழியே நாம் அடையும் அனுபவங்களை கல்கி எப்படி ஒலி – ஒளியோடு இணைக்கிறார் என்று பார்ப்போமா?

கலகலவென்று பாடும் பறவைகளுக்கு சலசலவென்று சுருதி கூட்டும் காவிரிக் கரையில், பசுமை படர்ந்த ஆலமரத்தின் அடியில் உள்ள குடிசையிலிருந்து வருவது – கம்பு வேகும் வாசனை! அந்த ஒரே மணத்தில் நாம் அதில் வாழ்பவர்களின் சமூக – பொருளாதார நிலை, வாழ்க்கை முறை, எளிமை, பண்பாடு என்று எவ்வளவோ விஷயங்களைத் தெரிந்து கொண்டு விடுகிறோம். அந்த கம்பு அடையை அரை வயிறு கூட உண்ண முடியாமல் பொன்னன் ஓட வேண்டியிருக்கிறது. அரசாங்க ஊழியம். மகாராஜாவுக்கு அவசரச் செய்தி. நிம்மதியாக, ஆனந்தமாக, மனைவி அன்புடன் வார்த்துப் போடும் அடையையும் இரைக் குழம்பையும் ருசி பார்க்கும் காலம் எங்கோ போய்விடுகிறது. அவசரச் செய்தி கொண்டு வந்த வீரனைத் தோணியிலேற்றும்போதே



''புது மானேஜர் வித்தியாசமான பேர்வழியா இருப்பார் போலிருக்கு?''

''ஏன்?''

''ட டயம், லஞ்ச் டயத்திலெல்லாம் லஞ்சம் வாங்கப்படமாட்டாதுன்னு போர்டு வச்சிருக்காரே.''

– ஓரியூர் கே. சேகர்

சோழ தேசம் முழுவதிலும் இனிமை வாழ்வுக்கு முற்றுப்புள்ளி.

அலைஓசையில் நாயகன் சௌந்தரராகவன் தாரிணியைக் குறித்துக் காதல்மயமான கனவுகளில் சஞ்சரிக்கிறான். "இந்த நாட்களில் அவன் எந்தப் பக்கம் பார்த்தாலும் தங்க ரேகைகள் படர்ந்திருக்கக் கண்டான். இடைவிடாமல் அவனுடைய செவிகளில் தேவலோகத்து மதுர வீணாகானம் பாய்ந்து கொண்டிருந்ததை உணர்ந்தான். பழைய டில்லி நகரத்தில் குப்பையும் கூளமும் துர்நாற்றமும் நிறைந்த குறுகிய வீதிகளில் அவன் நடந்த போது கூட மொகலாய மன்னர்கள் உபயோகித்த ஒப்பற்ற அத்தரின் வாசனையையும், அந்த மன்னர்களின் அந்தப்புர நாரீமணிகள் குளித்த பன்னீரின்

நறுமணத்தையும் கற்பனை உணர்ச்சியால் மோந்து அனுபவித்துக் கொண்டிருந்தான்."

எப்படி சாவித்திரி கோக்கும் சம்பங்கி அவளுடைய நிர்மலமான உள்ளத்தைக் குறிக்கிறதோ, அதே போல போதை தரும் அகிற்புகையின் நறுமணத்தினூடே நந்தினியின் பயங்கர மோகனத்தை மர்மத்தில் கரையும் நிழல் படிமமாக நுகர்கிறோம்.

பொதுவாக நாம் கண்களால் காணும் காட்சிகளையே நினைவு கொள்கிறோம். மற்ற புலன்களின் தாக்கங்களை கவனிப்பதில்லை.

ஆனால் கல்கியின் வர்ணனைகளில் எல்லாப் புலன்களின் தாக்கங்களும் இடம் பெற்று நம் இலக்கிய அனுபவத்திற்கு ஒரு முழுமை தருகின்றன.



"ஆபரேஷன்ல நான் பிழைச்சிடுவேனா டாக்டர்?"
"DEAD SURE! கவலைப் படாதீங்க!"

– சீர்காழி வி. ரேவதி

முக்கியமாக, அவர் காதல் வயப்பட்ட மாந்தரின் அனுபவங்களை எத்தனையோ விதமாக வெளிப்படுத்துகிறார்.

"சிவகாமியின் சபத"த்தில் தாமரைக் குளம் ஒரு முக்கிய படிமமாக விளங்குகிறது. தொடக்கத்தில் எழில் கொஞ்சும் அந்த காட்டுக்குளம் காதலுக்கு ஏற்ற ஆனந்த நிலைக்களனாகத் திகழ்கிறது. அந்தக் காதலை அப்படியே பிரதிபலிக்கிறது. முடிவில் அதே தாமரைக் குளம் சிதைந்த கனவுகளை இனம்காட்டுகிறது. அதற்கு எதிரில் இருந்த மரத்தடிப் பலகை – காதலர்கள் எவ்வளவோ முறை அருகில் அமர்ந்து மகிழ்ச்சிக் கனவுகளை பகிர்ந்து கொண்ட அதே பலகை – இப்போது "வெயிலிலே உலர்ந்து, மழையிலே நனைந்து, துண்டு துண்டாய்ப் பிளந்து கிடக்கிறது! சிதைந்து போன வாழ்க்கைக்கு இந்தப் பலகையே சரியான சின்னமாக விளங்குகிறது!" (மாமல்லர் கூற்று சிவகாமிக்கும் பொருந்துகிறது).

பத்து வருடங்களுக்கு முன்னால் ஒருமுறை, மண்டபப்பட்டு கிராமத்தில், அபூர்வ மணம் கமழும் மகிழ மரத்தடியில், மாமல்லரைத் தனியே காணும் வாய்ப்பு சிவகாமிக்குக் கிட்டுகிறது. அதுவரை அடக்கி அடக்கி வைத்திருந்த காதல், சொல் வெள்ளமாகப் பொங்குகிறது. அப்போது கூட தாமரைக் குளத்தை படிமமாக உபயோகித்துத்தான் கல்கி அவளுடைய கிளர்ச்சியுற்ற நிலையைக் காட்டுகிறார்.

"தடாகத்தில் ஓர் அழகிய தாமரை மொட்டு தண்ணீருக்கு மேலே தலைதூக்கி நின்றது. அதன் குவிந்த இதழ்களுக்குள்ளே நறுமணம் ததும்பிக் கொண்டிருந்தது. இரவெல்லாம் அந்த நறுமணம் வெளியில் வருவதற்கு முயன்று நாலாபுறமும் மோதிப் பார்த்து குமுறிக் கொண்டிருந்தது. உதய நேரத்தில் நறுமணத்தின் குமுறலும் மோதலும் அதிகமாயின. திடீரென்று கீழ்வானத்தில் ஒரு ஜோதி. உதயசூரியனின் அமுத கிரணங்கள் தடாகக் கரையிலிருந்த விருட்சங்களுக்கு இடையே நுழைந்து தாமரை மொட்டைத் தொட்டன. அந்த இனிய ஸ்பரிசத்தில் மொட்டு சிலிர்த்தது. இதழ்கள் விரிந்தன. இரவெலாம் உள்ளே விம்மிக் கொண்டிருந்த நறுமணம் விடுதலையடைந்து தடாகத்தையும் தடாகக் கரையையும் வானவெளியையும் நிறைத்தது."

– எல்லா புலன்களின் தாக்கமும் இடம் பெறும் வர்ணனை!

தமிழ் மொழியில் பல துறைகளில் முன்னோடியாகச் செயல்பட்ட கல்கி, பிரசாரத் தன்மை வாய்ந்தவை என்று தாமே கூறிய நூல்களில் – பொருட்செறிவு, உணர்ச்சிகளின் ஆழம், உயிரோட்டமுள்ள கதை மாந்தர், மற்றும் தனித்தன்மை வாய்ந்த உரைநடை போன்ற பல சிறப்புகளுக்காக இன்றும் போற்றப்பட்டு வருகிறார்.

பலவித படிமங்களின் சக்தியால் அவரது நூல்கள் இலக்கியத்தன்மை அடைந்து அழகுணர்ச்சியின் பெட்டகங்களாகவும் திகழ்கின்றன.

*(இலக்கியச் சிந்தனை அமைப்பில் ஆற்றிய உரை)*

# வாக்களிக்க வாருங்கள்!

**இனிய வாக்காளர்களே!**

★ அரசியல் என்பது அயோக்கியர்களின் புகலிடம்!

★ பொதுவாழ்வின் புனிதம் கெட்டுப் போய் விட்டது!

★ மக்கள் வரிப்பணத்தை கொள்ளையடிப்பதுதான் அரசியல்வாதிகளின் வேலை!

★ அரசியல் வாதிகள் அதிகார நாற்காலிக்காக கொள்கைகளை அடகு வைக்கும் பதவி வெறியர்கள்!

என விமர்சித்துவிட்டு நீங்கள் வாக்களிக்காமல் இருந்தால் என்ன நடக்கும்?



— அந்நிய செலாவணி மோசடியில் ஈடுபட்ட பொருளாதாரக் குற்றவாளிகளும்,

— அரசாங்கத்தின் கஜானாவைக் கொள்ளையடித்த, ஊழல் வழக்குகளில் குற்றவாளிகளாக நீதிமன்றங்களில் வழக்காடும் முன்னாள் அமைச்சர்களும்,

— அரசாங்கத்தில், நீதி மன்றங்களில் உயர்பதவிகளில் இருந்தபோது அரசாங்கத்தின் சொத்துகளை திருடிச் சென்ற முன்னாள் அரசு அதிகாரிகளும், முன்னாள் நீதிபதிகளும்,

— பதவி என்கிற மேல் துண்டுக்காக கொள்கை என்ற இடுப்பில் அணிந்திருந்த வேட்டியை விற்ற அதிகாரத் தரகர்களும் தான்

★ மீண்டும் நாடாளுமன்ற உறுப்பினர்களாக, அமைச்சர்களாக அதிகாரத்திற்கு வருவர்.

★ கடந்த தேர்தலில் 58% சதவிகிதம் பேர் வாக்களிக்கவே வரவில்லை.

★ இந்த முறை கண்டிப்பாக வாக்களித்து பாராளுமன்ற ஜனநாயகத்திற்கு வலு சேருங்கள்!

## தேர்தல் களத்தில் நிற்கும் கட்சிகளில்...

★ **எளிமை, உண்மை, சுயநலமின்மை, அர்ப்பணிப்பு, தேசப்பற்று, மக்கள் நலன்** மற்றும் **வெளிப்படையான செயல்பாடுகள்** எதனிடம் அதிகம் உள்ளதோ அதற்கு ஆதரவளியுங்கள்.

## தமிழ் மாநில காங்கிரஸ்

அதற்கு உறுதி அளிக்கிறது



வாக்களிப்பீர்! வெற்றிச் சின்னம்!

# சைக்கிள்

வெளியீடு : தமிழ் மாநில காங்கிரஸ்

எவ்ளோ
பெரிசு
பாருங்க....

அதை விட
பெரிசு
பாருங்க....

வாக்காளர்கள்




1999 செப்டெம்பர் 12
பிரமாதி ஆவணி 26
மலர் : 58
இதழ் : 7


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தமிழக வாக்காளர்களின் தனிப்பெரும் கடமை!

ஒருவரையொருவர் சாடிக் கொள்வதிலும் அகௌரவமான முறையில் ஏசிக் கொள்வதிலும் நமது தலைவர்கள் கட்சி எல்லைகளைக் கடந்து ஒற்றுமை காட்டுகிறார்கள்!

பிரமோத் மகாஜன் 'மோனிகா லூவின்ஸ்கி'யை மேற்கோளாக்கினால், காங்கிரஸ் பேச்சாளர் ஒருவர் பிரதமரின் நன்னடத்தையையே சந்தேகத்துக்குட்படுத்தி அவதூறு சுமத்துகிறார். பெர்னான்டஸ், சோனியாவை இழிவுபடுத்திப் பேசினால், சோனியாவோ வாஜ்பாய் பேரில் ஆதாரமற்ற ஊழல் குற்றச்சாட்டுகளைச் சுமத்துகிறார். ஜெயலலிதாவும் லாலு பிரசாத் யாதவும் வார்த்தைகளை அளக்காமல் கொட்டுவதில் போட்டி போடுகிறார்கள்.

வரலாறு காணாத இந்தத் தேர்தலில் பிரசாரத்தின்போது வரலாறு காணாத ஆபாசம் தலைவிரித்தாடியிருக்கிறது. கிளின்டன் மீது கண்டனத் தீர்மானம் கொண்டுவர முற்பட்ட போது, அது தொடர்பான செய்திகளை நமது நாளிதழ்கள் வெளியிட வேண்டியிருக்கிறதே என்று வருத்தம் ஏற்பட்டது. இன்றோ, உள்நாட்டுச் செய்திகளே, 'நாங்கள் கிளின்டன் விசாரணை செய்திக்கு எந்த வகையிலும் குறைந்துவிடவில்லை' என்பதுபோல் நாராசமாக ஒலிக்கின்றன!

படித்து, பகுத்தறியக் கூடிய வாக்காளர்களுக்கு மனக் கசப்பும் அதீதமான சோர்வும்




ஏற்படுத்துகிற சூழ்நிலை இது. எல்லா அரசியல்வாதிகளுமே குப்பைமேட்டுக்காரர்கள்தான் என்று வெறுத்துப் போய் முடிவுக்கு வந்து, தங்கள் வாக்கைச் செலுத்தாமல் வீணடிக்கிற அளவுக்கு விரக்தியை ஏற்படுத்தக்கூடிய சூழல்.

இந்த மனத் தளர்ச்சிக்கு இடங்கொடுப்பதன் மூலம் நாட்டின் எதிர்காலத்தை நாம் பலிகொடுத்து விடக் கூடாது.

பெர்னான்டஸும் பிரமோத் மகாஜனும் பேசியவை அகந்தை மிக்க, ரசக்குறைவான சொற்கள்.

அவர்களைக் கட்டுப்படுத்தும் வகையில் பிரதமரும் தேர்தல் கமிஷனும் எச்சரித்து ஆணையிட்டிருப்பதை வரவேற்கலாம்.

தேர்தல் என்று வந்துவிட்டால், உணர்ச்சிகள் பெருக்கெடுத்து ஓடுவது சகஜம்தான். ஆனால் அவற்றைக் கட்டுப்படுத்தி கௌரவமான முறையில் வெளியிடும் வழக்கத்தை நமது அரசியல்வாதிகள் மறந்து விட்டனர்.

சாதனையாகக் காட்டி வோட்டுக் கேட்க பி.ஜே.பியிடம் பெரிதாக எதுவும் இல்லை. காங்கிரஸ்-அ.தி.மு.க. போன்ற கட்சிகளின் நிலையோ கேட்கவே வேண்டாம்! தங்கள் பேரிலுள்ள ஊழல் குற்றச்சாட்டுகளையும் பிற பலவீனங்களையும் மூடி மறைப்பதற்கே இவர்கள் எதிரணியினர் பேரில் அவதூறு சேற்றை வாரி இறைக்க வேண்டியிருக்கிறது.

போபர்ஸ் ஊழலின் இருட்டு நிழல் அச்சுறுத்துவதால் சோனியா, 'பிரதமர் அலுவலகத்தில் ஊழல்' என்று அபாண்டம் சுமத்துகிறார்.

தமது பேரிலுள்ள வழக்குகளைச் சந்தித்து முடிவை ஏற்கத் துணிவில்லாத ஜெயலலிதா, கருணாநிதியையும் வாஜ்பாயையும் நாட்டு நலனில் அக்கறையில்லாத தீய சக்திகள் என்று வர்ணிக்கிறார்.

ஆட்சி வாய்ப்பு தரப்பட்டபோது தமது அக்கிரமங்களால் நாட்டை அதிர்ச்சியுறச் செய்தவர்




ஜெயலலிதா. காங்கிரஸ் கட்சியோ சாதனைகளைக் காட்டிலும் ஊழல்களில்தான் சிறந்திருக்கிறது. போதும் போதாததற்கு சோனியா 'தனி ஆட்சியா? கூட்டணி ஆட்சியா?' என்றே இன்னமும் தீர்மானித்தபாடில்லை! தினம் ஒருவிதமாகப் பேசுகிறார்.

இந்த இரண்டுங்கெட்டான் கூட்டணிதான் ஆட்சியில் பி.ஜே.பி. அமர்ந்ததை சகிக்க இயலாமல் அதைக் கவிழ்க்கச் சதி செய்தது. மாற்று அரசு அமைக்க இயலாமல், இப்போதைய தேர்தலுக்கு வழிவகுத்தும் இருக்கிறது.

ஊழலை வாழ்க்கை முறையாக்கிய ஒரு கட்சிக்கு அரசில் இடம்பெற வாய்ப்புத் தரப்பட்டால் எதற்குத்தான் அவர்கள் துணிய மாட்டார்கள்!

'தேர்தலில் வென்றால் யார் பிரதமர்?' என்ற கேள்விக்குப் பதில் கூற முடியாமல் மென்று விழுங்கும் ஒரு கட்சியை ஆட்சியில் அமர்த்தினால், அந்த ஆட்சியின் கதி என்னவாக இருக்கும்?

விரக்தியினாலோ சோம்பல் காரணமாகவோ வாக்களிக்காமல் தங்கள் வோட்டை வீணடிக்கும் வாக்காளர்கள் இந்த ஊழல்+ஊழல் கூட்டணியின் வெற்றி வாய்ப்புகளையே அதிகப்படுத்துவார்கள்.

இத்தனை அநாகரிகப் பிரசாரத்துக்கிடையிலும் பிரதமர் தமது கட்டுப்பாட்டையும் கண்ணியத்தையும் இழக்காமல் காத்து வருவது அவரது தலைமைப் பண்புக்கு நற்சான்று. அவரது கட்சிக்கு மீண்டுமொரு வாய்ப்புத் தர வாக்காளர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். அதிலும் தமிழக வாக்காளர்களின் பொறுப்புதான் அதிகம்.

ஜெயலலிதாவின் கரங்களைப் பலப்படுத்தி, பதின்மூன்று மாத காலம் பிளாக்மெயில் அரசு நடத்தவும் அதன் பின்னர் பி.ஜே.பி. ஆட்சியை வீம்புக்காகக் கவிழ்க்கவும் வழிவகுத்துத் தந்தவர்கள் தமிழக வாக்காளர்கள்தான். அதற்குப் பரிகாரமாக தமிழக வாக்காளர்கள் ஜெயலலிதாவைப் புறக்கணிக்க வேண்டிய தேர்தல் இது. ●

வீடுகள், நகைக் கடைகள், வங்கிகள், பெட்ரோல் பங்க் என எங்கெல்லாம் சாத்தியமோ, அங்கெல்லாம் கொள்ளைச் சம்பவங்கள் நடந்து வருகிற காலம் இது. இம்மாதிரியான நிகழ்வுகளிலிருந்து நமது உடைமைகளைப் பாதுகாத்துக் கொள்ள **உமா & கோ** நிறுவனம் வித்தியாசமான லாக்கர் ஒன்றை அறிமுகப் படுத்தியுள்ளது. இதைத் திருடனால் நிச்சயமாகத் திறக்க முடியாது என்று சவால் விட்டுக் கூறுகிறார் இதன் உரிமை யாளர் இராமகிருஷ்ணன்.



லாக்கரின் சாவியை நீங்கள் அதன் மேலே அல்லது அருகிலேயே கூட வைத்து விட்டுப் போனாலும் திருடனால் நிச்சயமாகத் திறக்க முடியாது என்று கூறுகிறார்!

இதென்ன மாயா ஜாலம்?

வேறு வழியில்லை; நம்பித்தான் ஆகவேண்டும்.

# திருடர்களை

உரிமையாளர் இராமகிருஷ்ணன் கூறுகிறார் :

"பூட்டுகளுக்குப் பெயர் போன ஊரான திண்டுக்கல் எங்களது சொந்த ஊராகும். 1956லிருந்து இந்த வியாபாரத்தை எனது தந்தையார் திரு நாச்சியப்ப செட்டியார் செய்து வந்தார். அவருக்கு உறுதுணையாக எனது சகோதரர் திரு சுப்ரமணியன் இருந்து வந்தார். 1994–ஆம் ஆண்டு எனது சகோதரர் மலேசியா சென்று பூட்டு வியாபாரத்தை கவனிக்க ஆரம்பித்தார். அப்போது நான் 'Bank of Madura'வில் பணிபுரிந்து வந்தேன். என் தந்தைக்கு உதவி செய்து இந்த வியாபாரத்தில் புதிய நுட்பத்துடன் மேம்படுத்த அந்த வங்கி வேலையை ராஜினாமா செய்து விட்டு, 1995லிருந்து முழுமூச்சாக இந்த வியாபாரத்தில் இறங்கி விட்டேன்.

"முன்பெல்லாம் பெரிய பணக்காரர்கள் வீட்டில் மட்டும்தான் லாக்கர்கள் இருக்கும். இன்று திருடர்கள் எல்லா தரப்பு வீட்டிலும் தங்கள் கைவரிசையக் காட்டி அவர்கள் சிரமப்பட்டு சேமித்த பொருள்களைத் திருடிச் செல்வதால் நடுத்தர மக்களும் தங்கள் பொருளைப் பாதுகாக்க லாக்கர் வாங்கிப் பயன் படுத்த வேண்டும் என்ற வகையில், புதிய தொழில்நுட்பத்துடன் உருவாக்கப்பட்டுள்ளது எங்களது இந்த லாக்கர்.

"இந்த லாக்கரில் பணம், நகைகள், பத்திரங்கள் போன்ற முக்கியமான பொருட்களை வைக்கலாம். இதனுடைய விலை ரூ. 3000 முதல் (அளவுக்கேற்ப) கிடைக்கிறது.

"இந்த லாக்கர் இரண்டு வகைகளில் கிடைக்கிறது. ஒன்று சுவரில் பதித்துக் கொள்ளும் வகையில் உள்ளது. இதனை நம் வீட்டில், நமக்கு வேண்டிய இடத்தில் பதித்துக் கொள்ளலாம். அதன் மேல் படத்தையோ, ஏதாவது அலங்காரப் பொருட்களையோ வைத்து விட்டால் லாக்கர் இருக்கும் இடத்தைத் திருடர்களால் நிச்சயம் கண்டுபிடிக்க முடியாது. மற்றொன்று எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் செல்லும் வகையில் உள்ளது.

"சில பேர் தங்களுடைய நகைகள், பத்திரங்கள் போன்றவற்றை வங்கி லாக்கர்களில் வைக்கிறார்கள். அங்கு பத்திரமாகத்தான் இருக்கும். ஆனால் நம் சௌகரியத்துக்குத் தகுந்தாற்போல் நினைத்த நேரத்தில் எடுக்க முடியாது. (உ.ம்:) ஒரு திருமண நிகழ்ச்சிக்குச் செல்ல வேண்டும் என்ற நேரத்தில் வங்கி திறந்திருக்காது. அதே லாக்கரை நம் வீட்டில் வைத்திருந்தால் எந்த நேரத்திலும் நாம் லாக்கரிலிருந்து நகையை எடுத்து அணிந்து செல்லலாம்!

"இந்த லாக்கரின் குறைந்தபட்ச அளவு 14 அங்குலம் அகலம் X 10 அங்குலம்

உயரம். இதனுடைய எடை 20 கிலோ. வாடிக்கையாளர்கள் விருப்பத்திற்கேற்ப பல அளவு களில் செய்து தருகிறோம். நகைக்கடைகள், வீடுகள், அலுவலகங்கள், பங்குச் சந்தை, ஆஸ்பத்திரி போன்ற இடங்களில் வைக்கலாம். வாடிக்கையாளர் விருப்பப் பட்டால் லாக்கரில் Fire Resistence செய்து தருகிறோம்.



''இந்த லாக்கர்களை உப யோகிக்கும் நபர்களால் மட்டுமே திறக்க முடியும். மற்றவர்களால் திறக்க முடியாது. வங்கிகளில் இணைப்புக் கணக்கு உள்ளது போல் நாங்கள் இணைப் புச் சாவி என்று ஒரு லாக்கர் வைத்திருக் கிறோம். இரண்டு நபர்கள் அவரவர் சாவி யைத் திறந்தால்தான் லாக்கர் திறக்கும். இல்லாவிட்டால் திறக்க முடியாது. இத னால் வியாபாரத்தில், குடும்பத்தில் சந்தேகம் இல்லாமல் இருக்கலாம். நாங்கள் தயாரிக்கும் சாவி, பூட்டுகளில் சில விதி முறைகள் உள்ளன. எப்படி 'ஆபரேட்' செய்ய வேண்டும் என்று அறிந்திருந்தால் மட்டுமே திறக்க முடியும்; இல்லையென் றால் பக்கத்திலே சாவி இருந்தும் கூடத் திருடன் திறக்க முடியாமல் வெறுத்துப் போய் போட்டு விட்டு ஓடி விடுவான்! அல்லது சாவிகள் அவனைத் திணற அடிப் பதற்குள் உரிமையாளர் ஓடி வந்து விடுவார்!

# தோற்கடிப்பீர்!

''பெட்ரோல் பங்கு களுக்கு என்றே சிறப்பாக ஒரு லாக்கரை வடி வமைத்திருக்கிறோம். ஒவ்வொரு பங்குகளி லும் அலுவலகம் போல் ஒன்று நிச்சயமாக இருக் கும். ஏதாவது ஒரு இடத் தில் இந்த லாக்கரைப் பொருத்தி இதனுடைய வாயை ஒரு புனல் போன்று வெளியில் வைக்கலாம். இதில் நாம் பணத்தைப் போடலாமே தவிர லாக்கரைத் திறக்கா மல் பணத்தை எடுக்க முடியாது. பெட்ரோல் பங்க்கில் கொள்ளையர் களிடமிருந்து பணத்தைப் பாதுகாக்க இது சிறப்பான வழியாகும். இந்த லாக் கரைப் பொருத்துவதன் மூலம் பெட்ரோல் பங்க்கு உரிமையாளர்கள் நிம்மதி யாகத் திருட்டுக் கவலையில்லாமல் இருக்கலாம்!



''இது மட்டுமல்லாமல் Iron safe, Wall safe, Strong room door போன்றவற்றையும் தயாரிக்கிறோம். பல கோயில்களுக்கு உண்டியல், . Strong room door செய்து கொடுத்திருக்கிறோம். எங்களுடைய தொழிற்சாலை திருவொற்றியூரில் உள் ளது. தூத்துக் குடியில் திரு. அலங்கார் ராஜ் அவர்களும் (தொலைபேசி எண் 330982/ 330983) திருப்பூரில் திரு. நாராயணன் அவர்களும் (தொலை பேசி எண் : 746625) அந்தப் பகுதியில் எங்களுடைய லாக்கர் விற்பனையைச் சிறப்பாகச் செய்து வருகிறார்கள்.''


**உமா அண்ட் கோ.,**
274 லிங்கிச் செட்டித் தெரு,
சென்னை — 1.
தொலைபேசி : 5244511
மொபைல் : 9840034334.
பேஜர் : 9632 707295

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

அலைமோதுகிறது.

சிதம்பரத்தை நெருங்கும் போது மணி ஏழாகி விடுகிறது. பயணத் திட்டப்படி மூன்று மணிக்கு வந்திருக்க வேண்டும்!

சிதம்பரத்தில் கலைஞர், ஜெயலலிதா பேசிய அதே இடத்தில்தான் மூப்பனாருக்கும் மேடை அமைத்திருந்தார்கள். மேடையிலிருந்து பார்த்தால் மூன்று பக்கமும் மக்கள் தலைகள்தான். ஆருத்ரா தரிசனம் அன்றுதானோ என்கிற அளவுக்கு திருவிழாக் கூட்டம் போல மக்கள் கூடியிருக்கிறார்கள்! தலைக்கு எண்ணெய் தடவக் கூட வசதியில்லாத கிராமத்து மக்கள். கையில் நீண்ட கழிகளுடனும், கண்களில் ஆவேசத்துடனும் தலித் இளைஞர்கள். திருமாவளவனையும், மூப்பனாரையும் பேச விடாமல் ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கிறது கூட்டம். அவர்களை அமைதிப்படுத்த மிகவும் பொறுமை தேவைப்படுகிறது. தம்முடைய தொகுதிக்கு எங்கே தலைவர் தாமதமாக வந்து பேச முடியாமல் போய்விடப் போகிறதோ என்று கவலைப்பட்டு, கடலூர் தொகுதி த.மா.கா. வேட்பாளர் வெங்கடேசன் சிதம்பரத்துக்கே வந்து விடுகிறார். மேடையில் காத்திருக்கும் அவரது முகத்தில் படபடப்பு தெரிகிறது. திருமாவளவன் பதினைந்து நிமிடம் கர்ஜித்து முடித்தவுடன், மூப்பனார் "நண்பர்களே..." என்று துவங்கி, "திருமாவளவன் பேசியதை வரிக்கு வரி ஒப்புக் கொள்கிறேன்" என்று சொல்லி முடிக்கிறார்.

பயணத்தின் தொடக்கத்தில், "பத்து நிமிடம் தலைவரோடு பேச நேரம் ஏற்பாடு செய்கிறேன்" என்று நம்மிடம் சொன்ன மூப்பனாரின் உதவியாளர், மக்கள் கடலில் நீந்திச் செல்லும் தலைவரிடம், எதுவும் பேச முடியாத நிலையிலிருப்பதைச் சொல்கிறார்.

இப்போது தமிழக மக்கள் முன் உள்ள முக்கியமான கேள்வி, 'மூன்றாவது அணி அமைத்துப் போட்டியிடும் மூப்பனார் எந்த அணியுடைய வோட்டுக்களைப் பிரித்து அவர்களுடைய வெற்றிக்கு முட்டுக்கட்டையாக இருக்கப் போகிறார்?' என்பதுதான்.

கிட்டத்தட்ட பதினைந்து தொகுதிகளில் வெற்றி வாய்ப்பை நிர்ணயிக்கும் பங்கு தங்கள் அணிக்கு இருப்பதாகச் சொல்கிறார்கள் த.மா.கா. பிரமுகர்கள்!

— ப்ரியன்

அட்டை மற்றும் வண்ணப்படங்கள் :
**வெங்கடேஷ்**




• கருத்தரங்க மேடையில்

# அந்தப் பொல்லாத மனிதர்..!

"ஆங்கில வழி கல்வி பயின்றவள் நான். கம்பராமாயணம் போன்ற இலக்கிய நூல்களை எடுத்துப் பார்க்கவே பயம்! மாணவ பருவத்தில் கல்கித் தமிழைப் படித்தோம் என் சகோதரரும் நானும்... அவ்வளவுதான்! புரியக் கூடிய தமிழில் எல்லாவற்றையும் சொல்லக் கூடிய ஒருத்தர் இருக்கிறாரே என்று ஒரே வியப்பு எங்களுக்கு. அந்தப் பொல்லாத மனிதர் கல்கி! - அவரை எங்கள் வீட்டில் அப்படித்தான் பிரியத்தோடு குறிப்பிடுவோம். என் தந்தை கே.ஆர். சீனிவாச அய்யங்கார் அவருக்கு வைத்த 'பட்டப் பெயர்' அது! - அந்தப் பொல்லாத மனிதர் கல்கி, தமது நவீன தமிழ் மூலம் எங்களைப் பண்டைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தி அதிலும் ஆர்வம் கொள்ளச் செய்துவிட்டார்; அதையும் ஆழ்ந்து படிக்கச் செய்து விட்டார்.



• பிரேமா நந்தகுமார்

- பேசியவர் டாக்டர் பிரேமா நந்தகுமார். உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், காஞ்சி மணி மொழியார் பேரவை, டாக்டர் மா. ராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையம் ஆகிய மூன்று அமைப்புகளும் இணைந்து சென்னை தரமணியில் நடத்திய இரு தின கல்கி நூற்றாண்டு கருத்தரங்கின் சிறப்புரையாளர் பிரேமா நந்தகுமார். ஒரு அழகான நாடகக் காட்சி போல் அமைந்திருந்தது அவர் உரை.

அது மட்டுமல்ல, கல்கி நூல்களின் பிரமாணத் திரட்டு ஒன்று கொண்டு வரப்பட வேண்டும் என்கிற உபயோகமான யோசனையையும் முன் வைத்தார்.

தொடக்க உரையாற்றிய, சென்னை வானொலியின் முன்னாள் இயக்குனர் விஜய திருவேங்கடம், அமரர் கல்கி இன்று இருந்திருந்தால் தமிழ் வழிக் கல்வி முறை எப்போதோ அமுலுக்கு வந்திருக்கும். தமிழிசைக்கு இயக்கம் நடத்தி ஆதரவு திரட்டியதுபோல் அவர் தமிழ் வழிக் கல்விக்கும் போராடியிருப்பார் என்று எடுத்துச் சொன்னார்.

தலைமையுரை ஆற்றிய முனைவர் சுந்தரமூர்த்தியோ, அமரர் கல்கியின் 'ஓ மாம்பழமே' கட்டுரையை முழுவதுமே படித்துக் காட்டி, அதன் மெலிதான நையாண்டிச் சுவையை இழை பிரித்து ஒரு ஆய்வே நடத்திக் காட்டினார்!

வாழ்த்துரை வழங்கிய தமிழ் வளர்ச்சித் துறை இயக்குனர் மா. இராசேந்திரன், கல்கி பிறந்த நூற்றாண்டைக் கொண்டாடுவது போல் அவர் பொது வாழ்வுக்கு வந்த நூற்றாண்டை மீண்டும் கொண்டாடினாலும் தகும் என்று களிப்போடு வாழ்த்தி, தலைமுறைகள் மாறினாலும் மாறாத வாசிப்பைப் பெற்ற அந்த அரிய எழுத்தாளருக்குப் புகழ் மாலை சூட்டினார்.

கவிஞர் தமிழன்பன் தந்தை பெரியாருக்கும் அமரர் கல்கிக்கும் இடையே கருத்து வேற்றுமையைக் கடந்த பரஸ்பர மரியாதையும் அன்பும் நிலவியதைச் சுட்டிக்காட்டி, தமிழர்கள் அனைவரும் ஏகமனதுடன் ஏற்ற எழுத்தாளர், இலக்கியவாதி அமரர் கல்கி என்று பேசினார்.

இரு நாள் கருத்தரங்கில் அனல் பறக்கும் விவாதங்களும் கனல் தெறிக்கும் கருத்து மோதல்களும் இடம்பெற்றாலும் கல்கி தமது எழுத்துக்களால் மனித மனங்களை உயர்வடையச் செய்தார் என்ற இறுதித் தீர்ப்பு வலுவாக வழங்கப்பட்டது. வழங்கியவர் முனைவர் பொற்கோ. சென்னை மட்டுமின்றி தமிழகமெங்குமிருந்து தமிழறிஞர்களும் கல்வியாளர்களும் (முனைவர் இளவரசு, முனைவர் சிற்பி பாலசுப்ரமணியன், முனைவர் ச. மெய்யப்பன், பெ.சு. மணி) பங்கேற்று அமரர் கல்கிக்குச் சிறப்புச் செய்த விழாவாகவே இக் கருத்தரங்கு அமைந்தது.

— நட. நி

'**பெ**ரும் புகழ் பெற்ற இந்தியப் பெண்மணிகள்' குறித்து கேள்விகள் தயார் செய்தனர் சென்னை தரமணியில் உள்ள டாக்டர் தர்மாம்பாள் அரசு பாலி டெக்னிக் மகளிர் கல்லூரியைச் சேர்ந்த மாணவிகள்.

''இந்திரா காந்திக்கு ஈடான தலைவர் யார் சார்? தைரியம், ராஜதந்திரம் இரண்டிலுமே அவங்களை அடிச்சிக்க யாருமே கிடையாது'' என்று தீர்மானமாகச் சொன்னார் மீனாட்சி. ''ஒலிம்பிக்ஸில் கிட்டத் தட்ட வெண்கலப் பதக்க லெவலுக்கு வந்து உலக அளவில் தடகளப் பிரிவில் இந்தியாவைப் பற்றி பேச வைத்த பி.டி. உஷாதான் என் மனதைக் கவர்ந்தவர்-'' இது பிரியதர்ஷினியின் கருத்து.

''எனக்கென்னவோ டாக்டர் முத்து லட்சுமி ரெட்டியின் வரலாறைக் கேட்ட போதே புல்லரிச்சுது. என்ன மாதிரி ஒரு கால கட்டத்தில் எப்படிப்பட்டதொரு கல்விச் சாதனையை செய்து பெண் குலத்தைப் பெருமைப்பட வச்சிருக்காங்க!'' என்று வியந்து பாராட்டினார் ஜெயந்தி. ''எல்லாம் சரிதான். ஆனால் முழுக்க முழுக்க ஏழைகள் மற்றும் நோயாளிகளின் சேவைக்காகவே



• பிரியதர்ஷினி



• ஜெயந்தி

# ''எங்களுக்கு ரோல் மாடலாக நிறையப் பெண்மணிகள்!''



• வித்யா



• மீனாட்சி

தமது வாழ்நாளை அர்ப்பணித்த மதர் தெரஸாவை நினைச்சாலே ரொம்பப் பெருமையாக இருக்கு'' என்றார் வித்யா.

''என்னதான் சமத்துவம் பேசினாலும் பெண்கள் முன்னேற்றத்தை மனப்பூர்வமா ஆதரிக்கிறவங்க குறைவாகத்தான் இருக்கிறாங்க'' என்ற ஜெயந்தியை ஆதரித்தார் மீனாட்சி– ''அதுவும் சில குறிப்பிட்ட துறைகளில் நாம நுழைஞ்சா இன்னமும் கூட ஆதரவு கிடைப்பதில்லை'' என்றார். ''பெண்களுக்கான இட ஒதுக்கீடு விஷயத்திலேயே பார்க்கிறோமே அரசியல் கட்சிகள் இரட்டை வேடம் போடுவதை'' என்ற வித்யாவிடம், ''இதெல்லாம் உண்மைன்னாலும் பாஸிடிவான விஷயங்களும் இருக்கே!'' என்று நினைவூட்டினார் பிரியதர்ஷினி.

''உண்மைதான். கிட்டத்தட்ட எல்லாத் துறைகளிலுமே எங்களுக்கு ரோல் மாடலாக விளங்கும் தகுதி பெற்ற பெண் மணிகள் இப்ப நம் நாட்டிலேயே இருக்காங்க. இந்த உற்சாகம் ஒண்ணு போதும் நாங்களெல்லாம் வருங்காலத்தில் சாதனை படைக்க!'' என்றார்கள் நால்வரும் தன்னம்பிக்கையோடு.

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்து தேர்ந்தெடுக்க வேண்டிய பதில்கள் அடங்கிய தொகுப்பும் உள்ளன. அத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ. 200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல்லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என்பதும் தெரிந்த விஷயம்தானே?

கடைசி தேதி: **20.9.99**

— **ஜி.எஸ்.எஸ்.**

படங்கள்: **ஸ்ரீஹரி**

# குவிஸ் கூப்பன் – 6

1. எவரெஸ்ட் சிகரத்தை அடைந்த முதல் இந்தியப் பெண்மணி யார்?

☐ நீலம் குப்தா ☐ பச்சேந்த்ரி பால்
☐ மல்லேஸ்வரி

2. சலாம் பாம்பே, மிஸிஸிபி மசாலா போன்ற படங்களை இயக்கி உலகின் கவனத்தை ஈர்த்தவர் யார்?

☐ மீரா நாயர் ☐ கல்பனா லாஜ்மி
☐ சாயி பரஞ்சபே.

3. இந்தியாவின் முதல் பெண் மேயரான கலோசனா மோடி எந்தப் பகுதிக்கு மேயராக விளங்கினார்?

☐ சண்டிகர் ☐ அகமதாபாத் ☐ பம்பாய்

4. தமது முதல் ஆங்கில நாவலுக்காக புக்கர் பரிசு பெற்றவர் யார்?

☐ ஷோபா டே ☐ அருந்ததி ராய்
☐ கமலா தாஸ்

5. இங்கிலீஷ் கால்வாயைக் கடந்த முதல் இந்தியப் பெண்மணி யார்?

☐ ஆர்த்தி சாஹா ☐ உஷா மாதவன்
☐ நிஷா மில்லட்

6. குமாரி சந்திரலேகா எந்தத் துறையில் பெரும் புகழ் பெற்றிருக்கிறார்?

☐ தகவல் தொடர்புப் புரட்சி ☐ நவீன நாட்டியம் ☐ அணுசக்தி விஞ்ஞானம்

7. வெளிநாட்டில் பிறந்தாலும் இந்தியக் குடியுரிமை பெற்றார் இந்த நோபல் பரிசு பெற்றவர். யார்?

☐ அன்னி பெசண்ட் ☐ சோனியா காந்தி
☐ அன்னை தெரஸா

8. லீலா சேத் என்ற பெண்மணிக்குக் கிடைத்துள்ள பெருமை எது?

☐ இந்தியாவின் முதல் பெண் உயர் நீதிமன்ற நீதிபதி ☐ முதல் பெண் ஆளுனர் ☐ இந்தியாவின் முதல் பெண் டாக்டர்

பெயர்: ..............................................

முகவரி: ..............................................

..............................................

..............................................

## மறுபிறவி

கோவை ஞானியைத் தெரியாத இலக்கியவாதிகளும் சிந்தனையாளர்களும் இருக்கவே முடியாது. தமிழில் மெய்யியல், பொருளியல், மார்க்சியக் கட்டுரைகள், விரிவான விமர்சனங்கள், இலக்கியத் திறனாய்வு, இயற்கை வேளாண்மை குறித்த ஆராய்ச்சி நூல்கள் என்று ஏராளமாக எழுதிக் கொண்டிருக்கும் இலக்கியவாதி. இந்த அறுபத்தைந்தாவது வயதிலும் படிப்பு, எழுத்து, இலக்கியவாதிகளுடன் கலந்துரையாடல், பத்திரிகைகள், நூல் வெளியீடு என்று சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருப்பவர்.

இவரது கட்டுரைகளைப் படித்துப் பிரமித்து நேரில்



# இருளையே வெளிச்சமாக்கிக் கொண்டவர்!

பார்த்துப் பாராட்ட வருபவர்கள் அதிர்ந்து போகும் ஒரு விஷயம், இவர் தமது இரு கண்களும் பழுதுபட்டதால் பார்வையிழந்தவர் என்பது!

பார்வையற்றும் எழுத்து, படிப்பு, தேடல், கலை-இலக்கியங்கள் குறித்த விரிவான விமர்சனங்கள் எல்லாம் எப்படி சாத்யமாகின்றன? எப்போது நேர்ந்தது பார்வையிழப்பு?

நாம் விவரம் கேட்டபோது சட்டென்று மறுத்தார். தமது சொந்தப் பிரச்னையைப் பேசி சுயபச்சாதாபம் கொள்ளவோ மற்றவர் இரக்கப் பார்வையைத் தம் மீது படச் செய்யவோ விரும்பாத மனிதர். நீண்ட வற்புறுத்தலுக்குப் பிறகே சிறிது சிறிதாய்ப் பேசத் துவங்கினார்!

"பதினொரு வருடம் முன்பு ஒரு ஞாயிற்றுக் கிழமை. வழக்கம்போல் காலையில் படித்துக் கொண்டிருந்தேன். திடீரென கரிய நிற எழுத்துக்கள் மறைந்து புத்தகப் பரப்பு மட்டும் வெளிச்சமாகக் கூசியது. மறுநாள் ஒரு டாக்டரிடம் சென்றேன். சோதித்து விட்டு 'கண்ணாடியை மாற்றுங்கள்' என்றார். அப்படியே செய்தேன். ஒரு மாதம் கூட ஆகவில்லை. புத்தகத்தில் சிறிய எழுத்துக்களை எல்லாம் படிக்கவே முடியவில்லை. பிறகுதான் புகழ்பெற்ற கண் மருத்துவர் ராமமூர்த்தியிடம் சென்றேன். அவர் சோதித்துப்

**கோவை ஞானி**

பார்த்துவிட்டு 'சர்க்கரை அளவின் கடுமையினால் கண்ணின் மிக முக்கிய பகுதியான 'ரெட்டினா' பாதிக்கப்பட்டிருப்பதாகக் கூறி, முன்பே கவனித்திருக்க வேண்டும் என்றார். என்றாலும் மறுநாளே லேசர் மருத்துவம் செய்தார். என் காலதாமத அணுகுமுறையினால் மருத்துவம் பயன்தரவில்லை!"

பெரியவர் ஞானிக்கு சிறுவயதிலேயே இடது கண் பார்வை கிடையாது. விளையாட்டில் கம்பு பட்டு பழுதாகிப் போன நிலையிலேயே பள்ளிப்படிப்பு, கல்லூரிப் படிப்பு, ஆசிரியப் பணி, இலக்கியப் பணி எல்லாமே ஆற்றியிருக்கிறார். பணி ஓய்வு பெறுவதற்கு நான்கு வருடம் முன்பே



**"போன ஜென்மத்துல மனைவியா இருந்தவள்தான் இப்ப எனக்கு காதலியா அமைஞ்சுருக்கா!"**
**"எதை வச்சு சொல்ற?"**
**"பீச்சுக்கு வர கொஞ்சம் லேட்டானா கூட சந்தேகப்பட்டு பொறிஞ்சு தள்ளிடறா!"**

**– அம்பை தேவா**

இரண்டாவது கண் பார்வையும் இப்படி பரிபூரணமாய்ப் போய்விட, பள்ளியிலிருந்து கட்டாய ஓய்வு பெற்றாராம். பள்ளித் தலைமையாசிரியர் அன்பு மிகுதியில் 'இனியிருப்பது நான்கு ஆண்டுகள். அந்த நாட்களில் உதவிக்கு வேறு ஏதாவது வேலையற்ற இளைஞரை வைத்துப் பாடம் எடுக்க வைத்து, ஒரு பகுதி சம்பளத்தைக் கொடுத்து விடலாமே!' என்றெல்லாம் கூட ஆலோசனை தந்தாராம். அதில் ஞானிக்கு கடுகளவும் உடன்பாடில்லை.

"அதெப்படி இன்னோர் இளைஞர் உழைத்து அதில் நான் குளிர் காய்வது? அதுவும் கரண்டிப் பிழைப்பதுதானே?" – என்கிறார் சட்டென்று.

"பார்வை திரும்பக் கிடைக்க வாய்ப்பில்லை என மருத்துவ நிபுணர்கள் உறுதிபடக் கூறியபோது உலகமே இருண்டு போயிருக்குமே? சூன்யம் கவிழ்ந்திருக்குமே? இனி பிழைத்து என்ன செய்ய என்கிற விரக்தி உள்ளூரத் தழுவியிருக்குமே?" என வினவினால் "இல்லவே இல்லை" என்கிறார்.

"இனி பார்வை வர வாய்ப்பே இல்லை என்பதற்கு ஆதாரமான விளக்கங்களை டாக்டர் என் முன் விவரித்தபோது எனக்குள் சிறு அதிர்ச்சி ஏற்பட்டது என்னவோ உண்மைதான். அது ஒரு நிமிடம் நீண்டிருந்தாலே அதிகம். 'எனக்கினி பார்வை இல்லை' என்கிற உண்மையை மறுநிமிடமே ஏற்றுக் கொண்டு விட்டேன். அழவில்லை. கண்ணீர் விடவில்லை. தொடர்ந்து படிக்கவும் எழுதவும் நான் எதிர்பார்த்திருந்த ஓய்வுக்கான வாய்ப்பு நான்காண்டுகளுக்கு முன்பே இப்படிக் கிடைத்ததாக எண்ணி திடகாத்திரம் கொண்டேன். படிக்க, நான் சொல்வதை எழுத ஓர் உதவியாளரை வைத்துக் கொண்டேன். உதவியாளர் சாந்தாராம் எனக்குள் ஒருவரானார்.

"அப்போது என்னை வந்து பார்த்த பல நண்பர்கள் கண்ணீர் விட்டனர். ஒருவர் என்முன் 'விவிலியத்தைத்' தாங்கி உருக்கமாக பிரார்த்தனை செய்தார். மேல்மருவத்தூருக்கு வருமாறு இன்னொருவர் வற்புறுத்தினார். 'மேல்மருவத்தூருக்கு வருகிறேன். அதே சமயம் யார் காலிலும் விழமாட்டேன். எனக்குள் எந்த எதிர்பார்ப்பும் இல்லை. பழுதுபட்ட 'ரெட்டினாவை' உயிர்ப்பிக்க உங்கள் முயற்சி பலிக்காது; போய் வந்து பிறகும் எனக்குப் பார்வை வரவில்லையே என்பதற்காக நீங்கள் வருந்தக் கூடாது' என்றும் சொன்னேன். அப்படி கோயில் குளத்துக்குப் போய் கண்பார்வை திரும்பக் கிடைத்தால் எனக்குத்தான் அது பெரும் பிரச்னை. 'எப்படி இது சாத்தியம்?' என்ற முறையிலும் பிரச்னை. கடவுள் நம்பிக்கையை நான் கைவிட்டு எத்தனையோ ஆண்டுகள் ஆகி விட்டன. இனி கடவுளைத் தேடுவதென்பது என்னால் முடியாது' என்றும் நண்பரிடம் வலியுறுத்திச் சொன்னேன். அவர் பேசாது விட்டு விட்டார்...!"

"இதை நீங்கள் ஒரு பெரும் இழப்பாக உணரவில்லையா?" என்று கேட்டால் அதையும் பலமாக மறுக்கிறார்.

"ஊனம் என்பது உடலில் ஒரு புலனின் குறைபாடு. எனக்குக் கண்பார்வை இல்லை

என்றாலும் வாழ்க்கை பற்றிய சரியான பார்வையை எனக்குள் நான் கொண்டிருக்கிறேன். உலகம், வரலாறு, சமூக வாழ்க்கை என்றெல்லாம் என் பார்வை விரிந்து கொண்டேயிருக்கிறது. இந்தப் பார்வையை மார்க்சியத்திற்குள்ளிருந்தும் என் படிப்பறிவு, அறிஞர் தொடர்பு, வாழ்வியல் அனுபவங்கள் வழியாகவும் நான் பெற்றுக் கொண்டேன். கண் முதலிய எல்லா புலன்களையும் சரியாகப் பெற்றிருக்கும் பலருக்கும் இத்தகைய பார்வை இல்லை. வெளிச்சம் இல்லை. பணம், அதிகாரம், ஆணவம் என்று எத்தனையோ வழிகளில் அவர்கள் ஊனத்தோடுதானே வாழ்கிறார்கள்!

"கண் பார்வை சரியாக இருந்த காலத்தில் இயற்கையின் பேரழகையும், நண்பர்கள், உறவினர்கள் மற்றும் மாணவர்கள் பல ஆயிரக்கணக்கானோரின் முகப் பொலிவையும் நான் கண்டிருக்கிறேன். இவை அனைத்தையும் இன்றும் என் நினைவிலிருந்து விரித்துப் பார்த்துக் கொள்கிறேன். இரண்டொரு கணங்கள் எனக்குள் தடுமாறத்தான் செய்கிறேன். என் மகனின், என் பேரனின் முக அழகைப் பார்க்க முடியவில்லையே என்ற கவலை அது. எனினும் அதுவும் எனக்குள் ஊனமாக நின்று விடுவதில்லை. நண்பர்கள் உதவியோடு படிக்கிறேன். தெரிந்து கொள்கிறேன். கருத்தரங்குகளுக்குச் செல்கிறேன். தொடர்ந்து நூல்கள், பத்திரிகைகள் வெளியிடுகிறேன். பல திசைகளிலிருந்தும் இன்று நம் முன் புதிய அறிவு கொட்டப்படுவதையும் அறிகிறேன். இவற்றில் பெரும்பகுதியை நான் அரிய முடிவதில்லை. எனினும் இன்னும் நான் எடுத்துச் சொல்வதற்கு எத்தனையோ உள்ளன எனவும் உணர்கிறேன்!

"நீங்கள் சொல்லுவது போல் இதனை மறுபிறவி என்றும் சொல்ல மாட்டேன். இப்பிறவியின் தொடர்ச்சியேதான் இதுவும். என்னைப் பொறுத்த வரை பிறந்தது முதலே கண்பார்வை அறவே இல்லாதவர்கள் பற்றிச் சிந்திக்கும் பொழுதுதான் எனக்குள் பெரும் கவலை மூள்கிறது. இந்த உலகை அவர்கள் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்? பிழைப்பதற்கு ஏதாவது வழி கண்டறிவதோடு அவர்கள் வாழ்க்கை சுருங்கித்தான் போக வேண்டுமா? பிரபஞ்சம் என்ற பேரியக்கத்தை இவர்கள் எப்படி உணர்ந்து கொள்கிறார்கள்? இவர்களுக்கு தத்துவ சிந்தனை சாத்தியம்தானா? என்றெல்லாம் கவலையுறுகிறேன். வாழ்க்கை பற்றிய தத்துவப் பார்வைதான் எல்லாவகை ஊனங்களையும் களைந்து கொள்வதற்கான ஒரே வழி. பொருளுக்காக, அதிகாரத்திற்காக அலைபவர்கள்தான் தங்கள் ஊனத்தை மறைத்துக் கொள்வதோடு பிறரையும் ஊனப்படுத்துபவர்கள்!"

சந்திப்பு, படம்: **கா.சு. வேலாயுதன்**



## சிலை அசத்தல்! விலையும்தான்!

இந்தப் பிள்ளையாரின் விலை நாற்பது லட்சம். "அப்படியென்ன விசேஷம்?" என்றபோது, "பஞ்சலோகத்தால் ஆன இதன் உயரம் ஏழு அடி. எடை 1.5 டன். நடனமாடும் கணபதி சிலைகளில் உலகிலேயே இதுதான் பெரியது!" என்றார்கள். பத்து சதவிகிதம் தள்ளுபடி தரவும் தயாராய் இருக்கிறார்களாம்.

சரி, இவ்வளவு விலை கொடுத்து இதை யார் வாங்குவார்கள்? தமிழ்நாடு கைத்திறத் தொழில்கள் வளர்ச்சிக் கழகமான பூம்புகார் நிறுவனத்தைப் போல் நாமும் காத்திருந்துதான் பார்க்க வேண்டும்!

– சி.எம்.

படம் : ஸ்ரீஹரி

## போட்டிக் கதை - 3

"ஏலே மச்சப் பயலை பார்த்தீகளா?" செவப்பி கிழவியின் குரல் உறங்கிக் கொண்டிருந்த நாயையும் உசுப்பி விட்டது.

''என்ன ஆத்தா, உன் புள்ளயப் பார்க்காம தவிச்சுப்புட்டயாக்கும்? நீ பெத்த கழுதைக்கு உன் நினைப்பு இல்லையே ஆத்தா!'' செல்லாயி.

''புள்ள, அவனைச் சொல்லி குத்தமில்லை. தறுதலை கெட்ட மூதேவி போல ராசாங்கம், ஜாதிப் பெயரால நம்ம பயலுகளை கெடுத்துப்புட்டு அலையுறாம்லே."

பக்கத்து வீட்டு மூக்கையா அவர்கள் வீட்டின் வழி சென்றார்.

"ஏலே மூக்கையா..." என்ற செவப்பி கிழவியின் குரல் கேட்டு மூக்கையா திரும்பினார்.

"என்ன ஆத்தா?"

"என் மகனை கெடுத்துப்புட்டியேலே. அவன் உன்னால தாம்லே உருப்படி இல்லாம ஆயிட்டான்."

"ஆத்தா, நம்ம ராசாங்கம் அண்ணாச்சி நம்ம சாதிக்காக எப்படியெல்லாம் பாடு படுதாருன்னு தெரியும்ல?"

''அண்ணே, அந்த நாயை செருப்பால அடிக்கனும்னே. நம்ம சாதிக்கார புள்ளக படிக்கிறதுக்கு உதவுனானா? இல்லை, நம்ம சாதிப் பொண்ணுக நாலு பேரு கழுத்தில தாலி ஏற உதவுனானா? இல்லையே. அந்த சனியன் எப்படா நம்ம சாதிக் காரங்க அடிபடுவாங்க, தான்



பிரச்னைல இறங்கலாம்ன்னு நினைச்சுக்கிட்டு இருக்கு. நீ வேற..." செல்லாயி.

"தாயீ சொன்னா சரி தான். நீ படிச்சவ. உனக்குத் தெரியாதா?'' மூக்கை யாவுக்கு செல்லாயியின் படிப்பின் மீது மரியாதை இருந் ததால் அவளை மறுத் துப் பேசவில்லை.

"செல்லாயீ, அவ னைப் பார்த்தா வரச் சொல்லு

## ராஜலட்சுமி

(அறிமுக எழுத்தாளர்)

தேன் தாயீ" என்று சொல்லிவிட்டுக் கிளம் பினார்.

"ஆத்தா, அந்தக் கழுதை வரும். நீ சாப் பிட வா ஆத்தா!" செல்லாயி தன் தாயை அழைத்தாள்.

சுடலை அப்பொழுதுதான் வந்தான். ஆத்தாவின் முகத்தில் மகிழ்ச்சி அரும்பியது.

"ஏலே, எங்கலே போயிட்டே? உன்னைக் காணாம ஆத்தா எவ்வளவு சங்கடப்பட் டேன்னு தெரியுமாலே..." - வாஞ்சையுடன் மகனை வருடியபடி சொன்னாள்.

"இல்லை ஆத்தா, நம்ம ராசாங்கம் அண்ணாச்சி கூப்பிட்டாக. அவுககூடத் தான் அலைஞ்சேன். நம்ம சாதிக்காரக மாநாடு நடக்குதுல்ல, அதுக்குத்தான்."

"ஏலே அந்த சவம் மதிகெட்டு அலை யுதுன்னா உனக்கெங்கலே புத்தி போச்சு?" - இது செல்லாயி.

"இல்லைக்கா, வந்து..."

"ஏலே, வந்து சாப்பிட உக்காருலே. ஆத்தா உனக்காகச் சாப்பிடாம உக்காந்து இருக்கும்லே..." செவப்பி.

மூவரும் அமர்ந்து சாப்பிட்டனர்.

"ஏலே, சாதிங்கிறது கேட்கிறப்ப பிறர்ட்ட சொல்லனும்லே. அத விட்டு, சொல்றதுனாலே பிறரைக் கேக்க வைக்கக் கூடாதுலே!" செல்லாயி தம்பிக்கு புத்திமதி சொன்னாள்.

"ஏலே, அவ சொல்றத கேளுலே. அந்த மகராசிய நான் பெத்ததுக்கு சந்தோசப் படுதம்லே. ஆனா ஆத்தா உன்னைய பார்த்துத்தாம்லே பயப்படுதேம்லே. அந்தச் சனியனை விட்டு வாலே..."

"ஆத்தா! என்ன சொன்னாலும் அவருதான் நம்ம சாதிக்காகப் பாடுபடுறாரு. அவரைப் போய்க்கிட்டு..."

"ஆத்தா அவனைச் சொல்லி குத்த மில்லை. எல்லாம் அந்தச் சவம் செய்ற வேலை ஆத்தா!" என்றாள் செல்லாயி.

"ஆத்தா வர்றேன்!" - சுடலை கிளம் பினான்.

"இது என்னைக்குத்தான் திருந்துமோ..." - ஆத்தா வருத்தப்பட்டு கண்கலங்கினாள்.

சாதிய மாநாட்டிற்கு அந்த ஊரிலிருந்தும் மக்களை ஏற்றிச் செல்வதற்காய் வண்டி வந்தது. சுடலையும் மாநாட்டிற்குக் கிளம் பினான்.

"ஏலே, இது உனக்கு வேணாம்லே. அந்த நாயோட சேர்ந்து சிரழியாதலே" என்றாள் செல்லாயி.

"ஏலே, செல்லாயி சொல்றதுல என்னலே தப்பு இருக்கு?" – செவப்பி கிழவி.

"ஆத்தா நான் கிளம்புறேன். அங்க அண்ணாச்சி எனக்காகக் காத்துக் கிடப்பாக. நீ வேற என்னைய விட மாட்டே போலிருக்கே..."

"ஆத்தா, அத போகாதன்னு சொன்னாலும் போகத்தான் செய்யும். அத பத்திரமா போயிட்டு வரச் சொல்லு ஆத்தா."

"ஏலே பத்திரமா போயிட்டு வாலே!" என்று ஆத்தா விடைகொடுத்து அனுப்பினாள்.

மனசுக்கு பாசத்தைச் சுமந்தபடியால் அந்த இரண்டு பெண்களும் தங்கள் ஒற்றை உறவுக்காய் பயத்தினை அணைத்தபடி காத்திருந்தனர்.

முதல் நாள் மாநாடு முடிந்தவுடன் திரும்பிய மூக்கையா ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் வந்திருந்த மக்கள் கூட்டத்தைப் பற்றிப் பெருமையாகச் சொன்னார். இரண்டாவது நாள் மாநாடு முடிந்து அவர்களது ஊர்க்காரர்கள் இரவில் திரும்பி வருவதான செய்தியை மூக்கையா சொன்னார்.

"ஏ புள்ள, அந்த மச்சப்பய பத்திரமா வந்திடுவானுல்லே?" செவப்பி கிழவி பதற்றத்துடன் செல்லாயியிடம் வினவினாள்.

"ஆத்தா உன் மகன் தொடையில பெரிய அளவுல மச்சம் இருக்குங்கிறதுனால அவன மச்சப்பயங்கிறியாக்கும்?"

"சொன்னாலும், சொல்லாட்டினும் அவன் மச்சப்பயதான். அவன் தொடையில இருக்கிறாப்புல ஊருல எவனுக்கு மச்சம் இருக்குன்னு சொல்லு பார்ப்போம்?" பெருமை பீறிட கிழவி வினவினாள்.

"அவன் இன்னைக்கு வீட்டுக்கு வந்துப் புடுவான். இன்னைக்கு மாநாடு முடிஞ்சு ஊருக்குத் திரும்புறாகளாமுலே!"

"அவன் வந்தா போதும்லே. அந்த மாரியாத்தா அவனைக் காப்பாத்துவாலே..."

அவர்களது ஊருக்கு வண்டி வந்தது. ஆனால் அது ஆட்களை மட்டுமல்ல. கலவரத்தையும் சுமந்து வந்தது.

"நம்ம சாதிக்காரப் பய ஒருத்தனை வெட்டிப் போட்டுட்டாங்களாம்லே!" ஊரெங்கும் காட்டுத் தீயென விஷயம் பரவியது.

விசாரித்துப் பார்ப்பதற்காய்ச் சென்றிருந்த மூக்கையா பரபரப்போடு திரும்பி வந்தார், "ஏ புள்ள செல்லாயி, நம்ம சுடலையைக் காணோம்லே" என்றபடி.

"செல்லாயி. இவன் என்னமுலே பேசுறான்?" செவப்பி கிழவி முழுவதுமாய்ப் பரவிய பயத்தின் ரேகைகளைப் பதித்தபடி பேசினாள்.

"ஆத்தா அங்க போயி பார்ப்போம். அப்புறமா உண்மை விளங்கும்..."

"செல்லாயி சொல்றதும் சரிதாம் ஆத்தா!" என்றார் மூக்கையா.

செல்லாயியின் மனதுக்குள்ளும் தம்பியின் பிரிவு வருத்தத்தை அளித்திருந்தது. அவளது மனசுக்குள் அவள் கதறிய கண்ணீரையும், உதறிய வார்த்தைகளையும் உணரும் தகுதியில்லாமல் அந்த மண்ணும் இருந்தது.



"தலைவர் நீண்ட நாளா ஆராய்ச்சி செஞ்சு இப்பதான் உபயோகமா ஒண்ணு கண்டுபிடிச்சிருக்கார்!"

"என்னது?"

"விரல்ல வச்ச மையை எப்படி அழிக்கறதுன்னு!"

— புளியரை கணேசன்



"இன்னும் நிறைய இங்கிலீஸ் எழுத்து கண்டுபிடிக்கணும், அப்பா!"

"எதுக்குடா?"

"வெறும் இருபத்தாறு எழுத்தை வெச்சுக் கிட்டு எழுதினா பாஸ் பண்ணவே முடியல!"

— தாரை மா. மகேஷ்ப்ரியன்

அந்த ஊர் மீண்டுமோர் கலவரத்துக் காய்த் தயாரானது.

"ஏலே நம்ம பயல வெட்டின அந்த அவுசாரி மக்க இருக்கற பக்கத்து ஊரையெல்லாம் வெட்டிச் சாய்க்கணும்லே" - இளம் ரத்தம் ஒன்று சூட்டோடு பேசியது. அந்தக் கலவர பூமியும் கண்களுக்குப் பார்வையாய் வந்தது.

அங்கு கழுத்து வெட்டப்பட்ட முண்டம் ஒன்றும், அரைகுறையாய்க் கருகிய நிலையில் முகம் ஒன்றும் தனித்தனியாய் கிடந்தது.

செல்லாயி தொடை மச்சத்தைப் பார்த்து அது தன் தம்பிதான் என்பதை உணர்ந்தாள்.

"ஏ புள்ள அது உன் தம்பியான்னு ஒரு வார்த்தை சொல்லு. இவன் உயிர பறிச்ச அந்த சாதிக்கார நாய்களை வெட்டிச் சாய்க்கிறோம்!" மனசுகளின் கொதிப்பு உதடுகளில் உஷ்ணமான வார்த்தைகளைச் சுமந்து வந்தது.

அவளது வார்த்தைக்காய் அவளது சாதிய இளசுகள் ஏந்திய அரிவாள்களும், வேல்கம்புகளும் காத்திருந்தன. ஆனால் செல்லாயியோ, "இவன் என் தம்பி இல்ல" என்றாள்.

"என்ன புள்ள, மூக்கையா நேத்தைக்கு உன் தம்பிய பார்த்திருக்காரு. இன்னைக்கு அவன்தான் ஊருக்குத் திரும்பல. நீ வேறே இல்லைன்னு சொன்னா என்ன அர்த்தம்?" கிழம் ஒன்று கேட்டது.

"என் தம்பி முதல் நாள் கூட்டம் முடிஞ்சதும் மும்பை போறதா வீட்ல சொல்லிட்டுத்தான் வந்தான்."

"அவள்தான் இல்லைங்கிறால. பின்ன எதுக்கு நின்னுக்கிட்டிருக்கிங்க? கிளம்புங்க!" என மக்களைத் திரும்பும்படி கட்டளையிட்டு, "டெட்பாடியை போஸ்ட் மார்டத்துக்கு அனுப்புங்க!" என காவல் துறையினரிடமும் சொல்லிவிட்டு போலீஸ் உயர் அதிகாரி சென்றார்.

செல்லாயி கூட்டத்திலிருந்து தனியாகப் பிரிந்து சென்று செவப்பி கிழவியிடம் கதறி அழுதாள். இருவரையும் அழுகை அணைத்துக் கொண்டது.

"செல்லாயி, அவன் உன் தம்பிதானே? அந்தத் தொடை மச்சம் உன் தம்பிக்குதான உண்டு?" என்றார் மூக்கையா.

"ஆமா அண்ணாச்சி, இவன் என் தம்பின்னு சொன்னா நம்ம சாதி சனமெல்லாம் அரிவாளைத் தூக்கிக்கிட்டு அடுத்த சாதிக்கார தம்பிகளை வெட்டப் போகும். இவன் பிறப்புல இருந்து இறப்பு வரைக்கும் சாதின்னு அலைஞ்சான். சாகையிலாவது இந்த மண்ணுக்காகச் சாகட்டுமே. இந்த மண்ணுல இன்னுமொரு இரத்த சேதம் ஏற்பட இவன் நம்ம சாதிங்கிறது காரணமாகும். அதான் அனாதைப் பிணமா போகட்டும்!" அழுகையை அடக்க முடியாததால் கேவிக் கேவி அழுதாள்.

"அவ படிச்சவ ஆத்தா, அந்த சாதிக்காரங்களோட மனசையும், சாதிய வெறியையும் படிச்சவ..." - மூக்கையாவின் அந்த வரிகள் செவப்பி கிழவிக்கும் கூட கடலையை அனாதை ஆக்கியது. ○

## தாம்பூலப் பையில் தேர்தல் பிரசாரம்!

திருச்சியில் ஒரு கல்யாணத்திற்குச் சென்று தாம்பூலப் பை வாங்கியபோது, அதன் ஒரு பக்கத்தில் "தாமரைப் பூ" படம் போட்டு அடியில் 'அரங்கராஜன் குமாரமங்கலத்திற்கு வாக்களிக்கவும்" என இருந்தது. வியந்து போன நான், பெண்ணைப் பெற்றவரிடம் சந்தேகத்துடன்,

"எனக்குத் தெரிந்து நீங்கள் பாரதீய ஜனதா இல்லையே... பிறகு எப்படி?" என்று கேட்டேன்.

அவர், "அதுவா... நான் என் பெண் கல்யாணத்துக்கு தாம்பூலப் பை போட விருப்பதை வேட்பாளர் அறிந்து கொண்டு என்னை அணுகி, அதன் செலவைத் தாம் ஏற்பதாகவும்; ஒரு பக்கத்தில் தமது சின்னத்திற்கு வாக்களிக்க வேண்டிக் கொள்கிறேன் என்றும் கூறினார். வலிய வந்த உதவியை ஏன் தட்டிக் கழிக்க வேண்டும் என நானும் சம்மதித்து ஏற்றுக் கொண்டேன்..." என்றார்.

இதில் யார் சாமர்த்தியசாலி?

— 'திலீப்'

# பொன்னியின் செல்வன்






முப்பத்தாறாம் அத்தியாயம்

## இருளில் ஓர் உருவம்

**கல்கி கலெக்ஷன்**

சக்கரவர்த்தி என்று அழைக்கப்பட்ட சிறுவன் கொடுத்த வாளை நந்தினி வாங்கிக்கொண்டாள். அதை மார்போடு அணைத்துத் தழுவிக்கொண்டாள். பின்னர் அச்சிறுவனையும் தூக்கி எடுத்து அவனையும் சேர்த்து மார்புடன் அணைத்துத் தழுவிக் கொண்டாள். அவளுடைய கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பொழிந்தது.

மற்றவர்கள் சற்று நேரம் வரை இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டு திகைத்து நின்றார்கள்.

ரவிதாஸன் முதலில் திகைப்பு நீங்கப் பெற்றுக் கூறினான்:-

"தேவி! சக்கரவர்த்தி நம்முடைய கோரிக்கையை நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை. புரிந்து கொள்ளாமல் தங்களிடம் வாளைக் கொடுத்து விட்டார். மறுபடியும் விளக்கமாகச் சொல்லி..."

நந்தினி அவனைத் தடுத்து நிறுத்தினாள். தழுதழுத்த குரலில் கூறினாள்:

"இல்லை, ஐயா, இல்லை! சக்கரவர்த்தி நன்றாய்ப் புரிந்துகொண்டுதான் வாளை என்னிடம் கொடுத்தார். என் கண்ணீரைப்

**அமரர் கல்கி**

பார்த்து நீங்கள் கலங்க வேண்டாம். வீர பாண்டிய சக்கரவர்த்தியின் படு கொலைக்குப் பழி வாங்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததை நினைத்துக் களிப்பு மிகுதியினால் கண்ணீர் விடுகிறேன்!" என்றாள்.

"தேவி! யோசித்துப் பாருங்கள்! நாங்கள் இத்தனை பேர் ஆபத்துதவிப் படையினர் உயிரோடிருக்கும்போது..." என்று சோமன் சாம்பவன் தொடங்கியதை நந்தினி தடுத்து நிறுத்தினாள்.

"யோசிக்க வேண்டியதே இல்லை. அந்தப் பொறுப்பு என்னுடையதுதான். உங்களுக்கும் வேலையில்லாமற் போகவில்லை. உங்களில் பாதிப் பேர் சக்கரவர்த்தியைப் பத்திரமாகப் பஞ்சபாண்டவர் மலைக்குக் கொண்டு போய்ச் சேருங்கள். மற்றவர்கள் கடம்பூருக்கு வாருங்கள். சம்புவரையன் மாளிகைக்குள் வரக்கூடியவர்கள் வாருங்கள். மற்றவர்கள் வெளியில் சித்தமாகக் காத்திருங்கள். வேகமாகச் செல்லக்கூடிய குதிரைகளுடன் காத்திருங்கள். காரியம் வெற்றிகரமாக முடிந்த பின், கூடுமானால் எல்லாரும் உயிருடன் தப்பித்துச் செல்ல வேண்டும் அல்லவா?" என்றாள் நந்தினி.

ரவிதாஸன் முன் வந்து, "அம்மணி! ஒரு விஷயம் சொல்ல மறந்து போய்விட்டது. அதைச் சொல்ல அனுமதிக்க வேண்டும்" என்றான்.

"சொல்லுங்கள், ஐயா! சீக்கிரம் சொல்லுங்கள்! பழுவேட்டரையர் கொள்ளிடக் கரையில் நடக்கும் காளாமுகர்களின் மகா சங்கத்துக்குப் போயிருக்கிறார். அவர் திரும்பி வந்துவிடுவதற்குள்ளே நான் அரண்மனை போய்ச் சேர வேண்டும்!" என்றாள் நந்தினி.

"நமது முதற் பகைவன் ஆதித்த கரிகாலன், கடம்பூர் சம்புவரையன் மாளிகைக்கு வந்து சேர்வான் என்று சொன்னீர்கள் அல்லவா? அது அவ்வளவு நிச்சயமில்லை" என்றான் ரவிதாஸன்.

"எந்தக் காரணத்தைக் கொண்டு அவ்விதம் சொல்கிறீர்!" என்று கேட்டாள் நந்தினி.

"தகுந்த காரணத்தைக் கொண்டுதான் சொல்கிறேன். கடம்பூர் மாளிகைக்கு எக்காரணத்தைக் கொண்டும் வர வேண்டாம் என்று ஆதித்த கரிகாலனுக்கு ஓலை போகிறது. பழையாறை இளைய பிராட்டியும் முதன்மந்திரி அநிருத்தரும் அவ்விதம் செய்தி அனுப்பியிருக்கிறார்கள்..."

"அந்த விவரம் எனக்குத் தெரியாது என்றா நினைத்தீர்?"

"தெரிந்திருந்தும் அவன் கடம்பூருக்கு வருவான் என்று எதிர்பார்க்கிறீர்களா?"

"ஆம்; அவசியம் எதிர்பார்க்கிறேன். ஆதித்த கரிகாலருடைய இயல்பு அந்தப் பழையாறைப் பெண் பாம்புக்குத் தெரியாது; அன்பில் பிரம்ம ராட்சதனுக்கும் தெரியாது; மாய மந்திர வித்தைகளில் தேர்ந்த உமக்குக் கூடத் தெரியவில்லை. எந்தக் காரியத்தையாவது செய்ய வேண்டாம் என்று யாரேனும் தடுத்தால், அதைத்தான் ஆதித்த கரிகாலர் கட்டாயமாகச் செய்வார். அது எனக்குத் தெரியும்; நிச்சயமாகத் தெரியும். ஆதித்த கரிகாலர் அருள்மொழி வர்மனைப் போன்ற எடுப்பார் கைப்பிள்ளை அல்ல. மதுராந்தகனைப் போன்ற பயங் கொள்ளிப் பேதை அல்ல. கடம்பூருக்கு வர வேண்டாமென்று தமக்கையும் முதன்மந்திரியும் செய்தி அனுப்பியிருப்பதனாலேயே கட்டாயம் ஆதித்த கரிகாலர் கடம்பூருக்கு வந்து சேருவார்!" என்றாள் நந்தினி.

"தேவி! அதையும் தாங்கள் பூரணமாக நம்பியிருக்க வேண்டாம். அவர்கள் அனுப்பிய செய்தி காஞ்சிக்குப் போய்ச் சேராது!" என்றான் ரவிதாஸன்.

"என்ன சொல்லுகிறீர், ஐயா! சற்று விளக்கமாகச் சொல்லும்!" என்றாள் நந்தினி. அவளுடைய குரலில் இப்போது பரபரப்புத் தொனித்தது.

"தேவி! ஆதித்த கரிகாலனுக்குச் செய்தி யார் மூலமாக அனுப்பப்பட்டிருக்கிறது என்பதும் தங்களுக்குத் தெரியுமா?" என்று ரவிதாஸன் கேட்டான்.

"நிச்சயமாகத் தெரியாது; ஆனால் ஊகிக்க முடியும்."

"நல்லது; ஊகிக்க வேண்டிய அவசியமில்லை. அவனை நாங்கள் பிடித்துக்

கொண்டே வந்திருக்கிறோம். சக்கரவர்த்தி மழைக்கு ஒதுங்கியிருந்த மண்டபத்தில் அவனும் இருந்தான். நம்முடைய இரக சியங்கள் எல்லாம் அவனுக்குத் தெரியும். அவனை மேலே உயிருடன் போக விடு வது நமக்கு நாமே சர்வநாசத்தைத் தேடிக் கொள்வதாகும். இடும்பன்காரி! எங்கே, அந்த ஒற்றனை இங்கே அழைத்துக் கொண்டு வா!!" என்றான் ரவிதாஸன்.

இடும்பன்காரி பள்ளிப்படைக் கோவிலை நோக்கிப் போனான். அவ னுடன் இன்னும் இரண்டு பேரும் போனார்கள். நந்தினி அந்தத் திசையை



உற்று நோக்கத் தொடங்கினாள். இத்தனை நேரமும் கடுகடுவென்று இருந்த அவளுடைய முகத்தில் இப்போது மறுபடியும் மோகனப் புன்னகை தவழ்ந்தது.


டும்பன்காரியும் இன்னும் இரண்டு பேரும் வந்தியத்தேவனை நெருங்கினார்கள். அலுத்துச் சலித்துப் போய் அரைத் தூக்கமாக உட்கார்ந்திருந்த அந்த வீரன் மீது திடீரென்று பாய்ந்தார்கள். வந்தியத்தேவன் அவர்களோடு மல்யுத்தம் செய்யலாமா என்று ஒரு கணம் உத்தேசித்தான். பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். என்னதான் செய்கிறார்களோ பார்க்கலாம் என்று சும்மா இருந்தான். ஒரு பெரிய கயிற்றினால் அவனுடைய கைகளைச் சேர்த்து உடம்போடு கட்டினார்கள். பிறகு அவனுடைய இரு தோள்களையும் இரண்டு பேர் பிடித்து நடத்தி அழைத்துக்கொண்டு வந்து நந்தினியின் முன்னால் நிறுத்தினார்கள்.

வந்தியத்தேவன் நந்தினியைப் பார்த்துப் புன்னகை புரிந்தான்.

நந்தினியின் முகத்தில் எவ்வித மாறுதலும் இப்போது தெரியவில்லை. அமைதி குடிகொண்டிருந்தது.

"ஐயா! மறுபடியும்..." என்று ஆரம்பித்தான்.

"ஆம், தேவி! மறுபடியும் வந்து விட்டேன்! ஆனால் நானாக வரவில்லை!" என்று சொல்லிச் சுற்றிலுமுள்ளவர்களை நோக்கினான்.

நந்தினியின் அருகில் இருந்த சிறுவன் "அம்மா! இவன்தான் என்னை இருட்டில் பிசாசு விழுங்காமல் காப்பாற்றியவன். இவனை ஏன் கட்டிப் போட்டிருக்கிறது?" என்று கேட்டான்.

வந்தியத்தேவன் சிறுவனைப் பார்த்து "குழந்தை! சும்மா இரு! பெரியவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போது குறுக்கே பேசக் கூடாது. பேசினால் உன்னைப் புலி விழுங்கி விடும்!" என்றான்.

"புலியை நான் விழுங்கி விடுவேன்!" என்றான் சிறுவன்.

"மீனால் புலியை விழுங்க முடியுமா?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

அவனைச் சுற்றிலும் இருந்தவர்களின் கண்டங்களிலிருந்து ஒரு பயங்கரமான உறுமல் சத்தம் வெளி வந்தது. அது வந்தியத்தேவனைக் கூட ஒருகணம் மெய்சிலிர்க்கச் செய்தது.

ரவிதாஸன் உரத்த குரலில் "தேவி! கேட்டீர்களா? இவனை இனி உயிருடன் தப்பிச் செல்ல விட முடியாது. முன் இரண்டு தடவைகளில் தங்கள் விருப்பத்துக்காக இவனை உயிருடன் தப்பிச் செல்ல விட்டோம். இனிமேல் அப்படி இவனை விட முடியாது" என்றான்.

வந்தியத்தேவன், "மந்திரவாதி! இது என்ன இப்படிப் பெரிய பொய்யாகச் சொல்லுகிறாய்? நீயா என்னை உயிருடன் விட்டாய்? நான் அல்லவா உன்னைத் தப்பிப் போக விட்டேன்? தேவி! இந்த மந்திரவாதியைக் கொஞ்சம் கவனித்துப் பார்த்துச் சொல்லுங்கள்! இவன் உண்மையில் ரவிதாஸன்தானா? அல்லது ரவிதாஸனுடைய பிசாசா?" என்று கேட்டான்.

ரவிதாஸன் பயங்கரமாகச் சிரித்தான். "ஆம்; நான் பிசாசுதான்! உன்னுடைய இரத்தத்தை இன்று குடிக்கப் போகிறேன்" என்றான்.

மீண்டும் அங்கிருந்தவர்களின் தொண்டைகளிலிருந்து பயங்கர உறுமல் குரல் வெளியாயிற்று.

இதற்குள் சிறுவன், "அம்மா! இவனிடம் ஒரு நல்ல குதிரை இருக்கிறது. அதை எனக்குக் கொடுக்கச் சொல்லுங்கள்!" என்றான்.

"குழந்தை! நீ என்னுடன் வந்துவிடு! உன்னை என் குதிரையின் மேல் ஏற்றி அழைத்துக்கொண்டு போகிறேன்" என்றான் வந்தியத்தேவன்.

ரவிதாஸன் வந்தியத்தேவனை நோக்கிக் கோரமாக விழித்து, "அடே! வாயை மூடிக் கொண்டிரு!" என்று சொல்லிவிட்டு, நந்தினியைப் பார்த்து, "தேவி! சீக்கிரம் கட்டளையிடுங்கள்!" என்றான்.

நந்தினி நிதானமாக "இவர் எப்படி இங்கு வந்தார்? எப்போது வந்தார்?" என்று கேட்டாள்.

"சக்கரவர்த்தி மழைக்கு ஒதுங்கியிருந்த மண்டபத்திலிருந்து அவரை இந்த ஒற்றன் எடுத்துக்கொண்டு ஓடிவிடப் பார்த்தான். நல்லசமயத்தில் போய் நாங்கள் தடுத்துப் பிடித்துக்கொண்டோம். ஒருகணம் தாமதித்திருந்தால் விபரீதமாய்ப் போயிருக்கும்" என்றான் ரவிதாஸன்.

"ஐயா! இவர்கள் சொல்வது உண்மையா?" என்று நந்தினி கேட்டாள்.

"தங்களைச் சேர்ந்தவர்கள் உண்மை சொல்லக் கூடியவர்களா என்பது தங்களுக்குத்தானே தெரியும்? எனக்கு எப்படித் தெரியும், தேவி?" என்றான் வந்தியத்தேவன்.

நந்தினியின் முகத்தில் தோன்றிய புன்னகை மின்னலைப் போல் மறைந்தது. அவள் ரவிதாஸனைப் பார்த்து, "ஐயா! நீங்கள் எல்லாரும் சற்று அப்பால் சென்றிருங்கள். நான் இவரிடம் சில விஷயங்கள் தனியாகக் கேட்டு அறிய வேண்டும்!" என்றாள்.

"தேவி! நேரம் ஆகிறது. அபாயம் நெருங்குகிறது. இந்த வேளையில்..." என்று ரவிதாஸன் கூறுவதற்குள், நந்தினி கடுமையான குரலில், "சற்று முன் நாம் செய்து கொண்ட நிபந்தனையை நினைவு படுத்திக் கொள்ளுங்கள். மறுவார்த்தை சொல்லாமல் உடனே அகன்று செல்லுங்கள். சக்கரவர்த்தியையும் அப்பால் அழைத்துப் போங்கள்!" என்று கூறி, சிறுவனுடைய காதில் "குமாரா! சற்று அவர்களுடன் நகர்ந்து போ! உனக்கு இவரிடமிருந்து குதிரை வாங்கித் தருகிறேன்" என்றாள்.

ரவிதாஸன் முதலியவர்கள் பின்னர் மறுவார்த்தை பேசாமல் அந்தச் சிறுவனையும் அழைத்துக்கொண்டு அவசரமாக அப்பால் போனார்கள்.

நந்தினி வந்தியத்தேவனை இலேசான தீவர்த்தி வெளிச்சத்தில் ஊடுருவிப் பார்த்து, "ஐயா! உமக்கும் எனக்கும் ஏதோ ஒரு துவந்தம் இருப்பதாகத் தோன்றுகிறது!" என்றாள்.

"அம்மணி! அந்தத் துவந்தம் மிகப் பொல்லாததாயிருக்கிறது; மிகக் கெட்டியாகவும் இருக்கிறது. என் உடம்பையும் கைகளையும் சேர்த்து இறுக்கிக் கட்டியிருக்கிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"உம்முடைய விளையாட்டுப் பேச்சைக் கொஞ்சம் நிறுத்தி வைத்துக்கொள்ளுங்கள். வேண்டுமென்று இங்கு வந்தீரா! தற்செயலாக வந்தீரா?"

"வேண்டுமென்றும் வரவில்லை; தற்செயலாகவும் வரவில்லை. தங்களுடைய ஆட்கள்தான் பலவந்தமாக என்னை இங்கே கொண்டு வந்து சேர்த்தார்கள். இல்லாவிடில், இத்தனை நேரம் கொள்ளிடக் கரையை அடைந்திருப்பேன்."

"என்னைப் பார்க்கும்படி நேர்ந்ததில் உமக்கு அவ்வளவு கஷ்டம் என்று தெரிகிறது. என்னைப் பிரிந்து போவதற்கு அவ்வளவு ஆவல் என்றும் தெரிகிறது."

"தங்களைப் பார்க்க நேர்ந்ததில் எனக்குக் கஷ்டம் இல்லை, தேவி! தங்களைப் பிரிந்து போவதற்குத்தான் உண்மையில் வருத்தமாயிருக்கிறது. தாங்கள் மட்டும் அனுமதி கொடுங்கள்; ஒரு பக்கத்தில் அந்தக் கிழட்டுப் பழுவேட்டரையரிடமும் இன்னொரு பக்கத்தில் இந்தப் பயங்கர மந்திரவாதிகளிடமும் அகப்பட்டுக் கொண்டு தாங்கள் திண்டாடுகிறீர்கள். ஒரு வார்த்தை சொல்லுங்கள். இவர்களிடமிருந்தெல்லாம் தங்களை விடுதலை செய்து அழைத்துப் போகிறேன்..."

"எங்கே அழைத்துப் போவீர்கள்!"

"இலங்கைத் தீவின் காடுகளில் அநாதையைப் போல் அலைந்து கொண்டிருக்கும் தங்கள் அன்னையிடம் அழைத்துப் போய் விடுகிறேன்" என்றான் வந்தியத்தேவன்.

நந்தினி ஏமாற்றம் தொனிக்க ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

"நானும் அப்படி அநாதையாக அலைய வேண்டும் என்று விரும்புகிறீரா? ஒருவேளை அத்தகைய காலம் வந்தாலும் வரலாம். அப்போது அன்னையிடம் அழைத்துப் போக உம்முடைய உதவியை

அவசியம் நாடுவேன். அதற்கு முன்னால், என்னுடைய எண்ணம் நிறைவேற வேண்டும். அது நிறைவேறுவதற்கு உதவி செய்வீரா?" என்று கேட்டான்.



"அம்மணி! தங்கள் மனத்திற் கொண்ட எண்ணம் என்னவென்று தெரிந்தால் அல்லவா அதற்கு உதவி செய்வதைப் பற்றி நான் சொல்ல முடியும்?'' என்றான் வந்தியத்தேவன்.

''உண்மையான பிரியம் உள்ளவர்கள் இப்படிச் சொல்ல மாட்டார்கள். எண்ணம் என்னவென்பதைத் தெரிந்து கொள்ளாமலே அதை நிறைவேற்றுவதற்கு உதவி செய்ய முன் வருவார்கள்."

''பிரியமுள்ளவர்கள் சமயத்தில் எச்சரிக்கை செய்து ஆபத்திலிருந்து காப்பாற்ற முயல்வார்கள். அம்மணி! தங்களை இந்தக் கிராதகர்கள் ஏதோ சூழ்ச்சி செய்து பெரிய அபாயத்தில் சிக்க வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய காரியத்துக்கு உங்களை உபயோகப்படுத்திக் கொள்ளப் பார்க்கிறார்கள்..."

"நீர் கூறுவது தவறு! நான்தான் இவர்களை என்னுடைய காரியத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்ளப் பார்க்கிறேன்! இதை நீர் நிச்சயமாகத் தெரிந்து கொள்ளும்."

"ஒரு சிறு குழந்தையை எந்தக் காட்டிலிருந்தோ பிடித்துக்கொண்டு வந்து தங்களை ஏமாற்றுகிறார்கள்..."

"குழந்தை எதற்காக என்று உமக்குத் தெரியுமா?"

"பாண்டியன் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்துப் பட்டம் கட்டுவதற்காக..." என்றான்.

''மறுபடியும் தவறாகச் சொல்கிறீர். பாண்டியன் சிம்மாதனத்தில் ஏற்றி வைக்க மட்டும் அல்ல; துங்கபத்திரையிலிருந்து இலங்கை வரையில் பரந்து கிடக்கும் சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாதனத்தில் அமர்த்தி முடி சூட்டுவதற்காக!"

"அம்மம்மா! யாருடைய உதவியைக் கொண்டு இந்த மகத்தான காரியத்தைச் சாதிக்கப் போகிறீர்கள்? இதோ சுற்றிலும் நிற்கிறார்களே? – இந்த நரிக் கூட்டத்தின் உதவியைக் கொண்டா? சோழ சாம்ராஜ்யத்தின் இருபது லட்சம் வீராதி வீரர்கள் கொண்ட மாபெருஞ் சேனையை, பகலில் வளைகளில் ஒளிந்திருந்து இரவு நேரத்தில் வெளிப்பட்டு வரும் இந்தப் பத்து இருபது நரிகளின் துணை கொண்டு வென்று விடுவீர்களா?"

"நான் இவர்களை மட்டும் நம்பியிருக்கவில்லை! இதோ என் கையிலுள்ள வாளை நம்பியிருக்கிறேன். இதன் உதவியினால் என் மனத்தில் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றுவேன்."

"அம்மணி! அந்த வாளைத் தாங்கள் ஒருநாளும் உபயோகப்படுத்தப் போவதில்லை. அதற்கு வேண்டிய பலம் தங்கள் கையிலும் இல்லை; தங்கள் நெஞ்சிலும் இல்லை!"

"ஏன் அப்படிச் சொல்கிறீர்?"

''ஏதோ என் மனத்தில் தோன்றியதைக் கூறினேன்."

"நீர் சொல்வது முற்றும் தவறு என்று இந்த இடத்திலேயே என்னால் நிரூபித்துக் காட்ட முடியும்."

"அப்படியானால் நான் பாக்கியசாலிதான். தங்கள் திருக்கரத்தினால் வெட்டுப்பட்டுச் சாவதற்குக் கொடுத்து வைக்க வேண்டாமா?'' என்று கூறி வந்தியத்தேவன் வெட்டுப்படுவதற்கு ஆயத்தமாவது போல் கழுத்தை வளைத்துத் தரையைப் பார்த்துக் கொண்டு நின்றான்.

''என் திருக்கரத்தினால் வெட்டுப்படுவதற்குத் தானா ஆசைப்படுகிறீர்? கிரீடம் சூட்டப்படுவதற்கு விரும்பவில்லையா?" என்றாள் நந்தினி.

வந்தியத்தேவன் நிமிர்ந்து பார்த்து, "தங்கள் வசமுள்ள கிரீடத்தை எத்தனை பேருக்குத்தான் சூட்டுவீர்கள்?" என்று வினவினான்.

"அது என்னுடைய இஷ்டம். முடிவாக யாருக்குச் சூட்ட வேண்டுமென்று பிரியப்படுகிறேனோ, அவருடைய சிரஸில் சூட்டுவேன்."

''அப்படியானால், இந்தச் சிறு பிள்ளையின் கதி என்ன ஆவது?"

''அவனுக்கு முடி சூட்டுவதும் சூட்டாததும் என் இஷ்டந்தானே?"

"தேவி! தங்களுக்கு யாருக்கு இஷ்டமோ அவருக்கு முடி சூட்டுங்கள். எனக்கு வேண்டியதில்லை."

"ஏன்?"

"என்னுடைய சிரஸிலுள்ள சுருட்டை மயிரின் அழகைப் பற்றிப் பலரும் சொல்லியிருக்கிறார்கள். கிரீடம் வைத்துக் கொண்டு அந்த அழகைக் கெடுத்துக் கொள்ள நான் விரும்பவில்லை."

"உமது வேடிக்கைப் பேச்சை நீர் விட மாட்டீர். நல்லது, ஐயா! பொன்னியின் செல்வன் கடலில் விழுந்து இறந்த செய்தியைக் கேட்டதும் இளையபிராட்டி என்ன செய்தாள்? ரொம்ப துக்கப்பட்டாளா?'' என்று நந்தினி திடீரென்று பேச்சை மாற்றிக் கேட்டாள்.

வந்தியத்தேவன் சிறிது திகைத்து விட்டு, "பின்னே துக்கமில்லாமல் இருக்குமா? ஸ்திரீகள் எல்லோருமே இதயமற்றவர்களாக இருப்பார்களா?" என்றான்.

"அந்தக் கொடும்பாளூர்ப் பெண் ஓடையில் விழுந்து உயிரை விடப் பார்த்தாளாமே? அது உண்மையா? அவளை யார் எடுத்துக் காப்பாற்றினார்கள்?" என்று கேட்டாள்.

உடனே வானதிக்கு நேர்ந்த ஆபத்தைக் குறித்து வந்தியத்தேவனுக்கு ஞாபகம் வந்தது. அவளுடைய கதி என்ன ஆயிற்றோ என்ற நினைவில் மூழ்கி வந்தியத்தேவன் கேள்விக்குப் பதில் சொல்லாமலிருந்தான்.

நந்தினி குரலைக் கடுமைப்படுத்திக்கொண்டு "சரி; அதையெல்லாம் பற்றி நீர் ஒன்றும் சொல்ல மாட்டீர். எனக்குத் தெரியும். ஆதித்த கரிகாலர் கடம்பூர் மாளிகைக்கு வராதபடி நீர் தடுக்கப் போகிறீரா?" என்று கேட்டாள்.

"தடுப்பதற்குப் பிரயத்தனம் செய்வேன்" என்றான் வந்தியத்தேவன்.

"உம்மால் அது முடியாது என்று நான் சொல்லுகிறேன்."

"என்னால் முடியும் என்று நானும் சொல்லவில்லை, தேவி! பிரயத்தனம் செய்வேன் என்றுதான் சொன்னேன். இளவரசர் ஒன்று செய்ய நினைத்து விட்டால், அதை மாற்றுவது எளிதன்று."

''ஆதித்த கரிகாலரின் இயல்பை நீர் நன்றாய் அறிந்து கொண்டிருக்கிறீர்."



"என்னைவிட அதிகமாகத் தாங்கள் அறிந்திருக்கிறீர்கள்."

"நல்லது; நான் எவ்வளவுதான் சொன்னாலும் நீர் என் கட்சியில் சேர மாட்டீர். என் எதிரியின் கட்சியில்தான் இருப்பீர். அப்படித்தானே?"

"அம்மணி! தங்கள் எதிரி யார்?"

"என் எதிரி யார்? பழையாறை இளவரசிதான்! வேறு யார்?"

"அது தங்கள் மனோ கற்பனை! தேவி! தங்களுக்கு ஒரு உண்மையை, முக்கியமான உண்மையை, தெரிவிக்க விரும்புகிறேன்..."

"போதும், போதும்! நீர் உண்மை என்று சொல்ல ஆரம்பித்தால் அது வடி கட்டின கோட்டைப் பொய்யாயிருக்கும். எனக்குத் தெரியாதா? உமது உண்மையை நீரே வைத்துக் கொள்ளும்!" என்று நந்தினி குரோதத்துடன் கூறிவிட்டு, கையைத் தட்டினாள். ரவிதாஸன் முதலியவர்கள் உடனே நெருங்கி வர ஆரம்பித்தார்கள்.

வந்தியத்தேவன் தனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைத் தான் சரியாக உபயோகப்படுத்திக் கொள்ளவில்லை என்பதை உணர்ந்தான். இந்த ராட்சஸி என்னைக் கொன்று விடும்படிதான் இவர்களுக்குக் கட்டளையிடப் போகிறாள். கடவுளே! எத்தகைய சாவு! போர்க்களத்தில் எதிரிகளுடன் போராடி வீர மரணம் அடையக் கூடாதா? இப்படியா என் தலையில் எழுதியிருந்தது?

ரவிதாஸன் கோஷ்டியார் அருகில் வந்து சூழ்ந்துகொண்டார்கள்.

இரையை நெருங்கிய ஓநாய்க் கூட்டம் உறுமுவதுபோல் அவர்கள் உறுமிக் கொண்டிருந்தார்கள்.

"ராணி! தாங்கள் என்னதான் சொன்னாலும் இவன் வழிக்கு வர மாட்டான் என்று எனக்குத் தெரியும். தாங்கள் உடனே புறப்படுங்கள். இவனை நாங்கள் இந்தப் புண்ணிய ஸ்தலத்தில் பலி கொடுத்து விட்டுக் கிளம்புகிறோம்'' என்றான் ரவிதாஸன்.

"மந்திரவாதி! ஜாக்கிரதை! என்னுடைய விருப்பம் அதுவன்று. இவரை உங்களில் யாரும் எதுவும் செய்யக் கூடாது. இவரை எவனாவது தொட்டால் அவனை நானே இந்தக் கத்தியினால் வெட்டிக் கொன்று பழி வாங்குவேன்!'' என்று நந்தினி கர்ஜித்தாள்.

ரவிதாஸன் முதலியோர் திகைத்து நின்றார்கள்.

"இவரால் எனக்கு இன்னும் பல காரியம் ஆக வேண்டியிருக்கிறது. தெரிகிறதா? நான் இதோ புறப்படுகிறேன். நீங்களும் புறப்படுங்கள். இவர் அவருக்கு விருப்பமான வழியில் போகட்டும். யாரும் இவரைத் தடை செய்ய வேண்டாம்!'' என்றாள் நந்தினி.

ரவிதாஸன் "தேவி! ஒரு விண்ணப்பம்! தங்கள் சித்தப்படி செய்யக் காத்திருக்கிறோம். ஆனால் இவனிடம் குதிரை இருக்கிறது. இவனை முதலில் போக விடுவது நல்லதா? கொஞ்சம் யோசித்துச் சொல்லுங்கள்!" என்றான்.

''நல்லது; இவரை அந்தப் பள்ளிப் படைக் கோவில் தூணுடன் சேர்த்துக் கட்டி விடுங்கள். கட்டை அவிழ்த்துக் கொண்டு புறப்பட இவருக்குச் சிறிது நேரம் ஆகும். அதற்குள் இந்தப் பள்ளிப் படைக் காட்டை நீங்கள் தாண்டிப் போய் விடலாம்'' என்றாள்.

வந்தியத்தேவன் பள்ளிப் படைத் தூணுடன் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தான். சற்றுத் தூரத்தில் அவன் குதிரை ஒரு மரத்தில் கட்டப்பட்டிருந்தது.

நந்தினி பல்லக்கில் ஏறிக்கொண்டு போய் விட்டாள்.

சிம்மாதனத்தை இரண்டு ஆட்கள் தூக்கிச் சென்றார்கள்.

ரவிதாஸன் கோஷ்டியார் சிறுவனை அழைத்துக்கொண்டு விரைந்து போய் விட்டார்கள்.

அவர்களுடன் சென்ற தீவர்த்தியின்

வெளிச்சமும் சிறிது சிறிதாக மங்கி மறைந்து விட்டது.

வந்தியத்தேவனைச் சுற்றிலும் கன்னங் கரிய காரிருள் சூழ்ந்தது.

சிறிது நேரத்துக்கு முன்னால் அங்கு பார்த்த காட்சிகள், நடந்த நிகழ்ச்சிகள்



எல்லாம் கனவோ எனத் தோன்றியது.

இருட்டில் ராட்சத வௌவால்கள் சடபடவென்று தங்கள் அகன்ற சிறகுகளை அடித்துக்கொண்டன.

ஊமைக்கோட்டான்கள் உறுமின.

நரிகள் அகோரமான குரலில் முறை வைத்து ஊளையிட்டன.

ஊளையிட்டுக் கொண்டே அவை நெருங்கி நெருங்கி வருவதுபோல் வந்தியத் தேவனுக்கு உணர்ச்சி ஏற்பட்டது.

காட்டில் இனந் தெரியாத உருவங்கள் பல நடமாடின.

கடம்பூர் மாளிகையில் அவன் கண்ட கனவு நினைவுக்கு வந்தது.

ஆயிரம் நரிகள் வந்து தன்னைச் சூழ்ந்துகொண்டு பிடுங்கித் தின்னப் போவதாக எண்ணி நடுங்கினான்.

அவசர அவசரமாகக் கட்டுக்களை அவிழ்த்துக் கொள்ளப் பார்த்தான். இலேசில் அக்கட்டுக்கள் அவிழ்கிற விதமாகத் தெரியவில்லை.

வெளிச்சம் இருந்தால் கட்டுக்களை அவிழ்ப்பது சிறிது சுலபமாயிருக்கும்.

ஆனால் வெளிச்சம் என்ற அறிகுறியே அங்கு இல்லை.

மின்னல் வெளிச்சமும் இல்லை; மின்மினி வெளிச்சங்கூட இல்லை.

வானத்தில் ஒருவேளை மேகங்கள் அகன்று நட்சத்திரங்கள் தோன்றியிருந்தாலும் அவற்றின் வெளிச்சம் அந்தக் காட்டுக்குள் நுழைய இடமில்லை.

ஆகா! அது என்ன சத்தம்?

காட்டில் எத்தனையோ ஜந்துக்கள் நடமாடும். அதில் என்ன அதிசயம்?

இல்லை; இது மனிதனுடைய காலடிச் சத்தம் மாதிரி இருக்கிறதே!

குதிரை இலேசாகக் கனைத்தது. கால்களை மாற்றி மாற்றி வைத்து அவஸ்தைப் பட்டது. ஒருவேளை புலி, கிலி வருகிறதா என்ன?

வந்தியத்தேவன் கட்டை அவிழ்க்க அவசரப்பட்டான். பயனில்லை.

அதோ ஒரு உருவம். அந்தக் காரிருளில் ஒரு கரிய நிழல் போன்ற உருவம். மனித உருவமா? அல்லது... வேறு என்னவாயிருக்க முடியும்?

அது நெருங்கி நெருங்கி வந்தது.

வந்தியத்தேவன் தன்னுடைய மனோதைரியம் முழுவதையும் சேகரித்துக் கொண்டான்.

தன்னுடைய தேகத்தின் பலம் முழுவதையும் காலில் சேர்த்துக் கொண்டான்.

ஓங்கி ஒரு உதை விட்டான்!

"வீல்" என்ற சத்தமிட்டுக் கொண்டு அந்த உருவம் பின்னால் தாவிச் சென்றது.

சிறிது தூரம் பின்னால் சென்றதும் "டணார்" என்று ஒரு சத்தம். பள்ளிப்படைச் சுவரில் அது மோதிக் கொண்டது போலும்!

பின்னர் அங்கேயே அந்த உருவம் சிறிது நேரம் நின்றது. பள்ளிப்படைச் சுவரில் சாய்ந்துகொண்டு நிற்பதாகத் தோன்றியது.

இருட்டில் விவரம் தெரியா விட்டாலும் அந்த உருவம் தன்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பது போல் வந்தியத்தேவனுக்கு உணர்ச்சி ஏற்பட்டது.

கட்டுக்களை அவிழ்த்துக் கொள்வதற்கு மேலும் அவசரமாக அவன் முயன்றான். அந்த மந்திரவாதிப் பிசாசுகள் இவ்வளவு பலமாக முடிச்சுக்களைப் போட்டு விட்டன! ஆகட்டும்; மறுதடவை அந்த ரவிதாஸனைப் பார்க்கும்போது சொல்லிக் கொடுக்கலாம்!

அந்த உருவம் இடம் விட்டுப் பெயர்ந்தது. பள்ளிப்படைக்குள்ளே போவது போலத் தோன்றியது.

சிறிது நேரத்துக்கெல்லாம் பள்ளிப் படைக் கோவிலுக்குள் கூழாங் கற்கள் மோதுவது போன்ற 'டண்' 'டண்' சத்தம் சிலமுறை கேட்டது.

கோவில் வாசலில் வெளிச்சம்.

அதோ அந்த உருவம் கையில் ஒரு சுழுந்தைப் பிடித்துக்கொண்டு கோவிலுக்கு வெளியே வருகிறது.

தன்னை நோக்கி வருகிறது.

அது ஒரு காளாமுக வீர சைவனின் உருவம். நீண்ட தாடியும் சடை முடியும் மண்டை ஓட்டு மாலையும் அணிந்த பயங்கரமான உருவம்.

வந்தியத்தேவன் அருகில் வந்து வெளிச்சத்தைத் தூக்கிப் பிடித்து அவனை உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றது.

(தொடரும்)

# அமரர் கல்கி

**கல்கி முதல் இதழில், பத்திரிகையின் நோக்கம் பற்றி அமரர் கல்கி எழுதியது இது...**

# உபய குசலோபரி

புதிய பத்திரிகைக்கு எழுத ஆரம்பிக்கும்போது, முதன் முதலில் நேயர்களிடம் கொஞ்சம் க்ஷேம லாபம் விசாரிக்கலாமென்று நினைத்தேன். "உபயகுசலோபரி" என்று போடுவதற்காக 'உ' என்னும் முதல் எழுத்தை எழுதினேனோ இல்லையோ, பின்னாலிருந்து "நல்லவேளை! பிள்ளையார் சுழி போட்டாயா? எங்கே என்னை மறந்து விடுகிறாயோ என்று பார்த்தேன்" என்னும் குரல் கேட்டது.

ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தேன்; சாக்ஷாத் விநாயகக் கடவுள் நின்று கொண்டிருந்தார்.

"வரவேணும், வரவேணும்! தங்களை எதிர்பார்த்துக் கொண்டுதானிருந்தேன்" என்று எழுந்து நின்றேன். விநாயகர் முன் பக்கம் வந்தார்.

புதிய காரியாலயத்தில் மகா கணபதியை எழுந்தருளச் சொல்வதற்கு வேண்டிய வசதி ஒன்றும் கிடையாது. அவரையும் பார்த்து, பழைய மேஜை நாற்காலிகளையும் பரிதாபத்துடன் நோக்கினேன்.

"நான் உட்கார்ந்து விடவில்லை; பயப்பட வேண்டாம்" என்றார் பகவான்.

"தங்களுக்கு உட்கார அவகாசம் ஏது? என்னைப்போல் இன்னும் எத்தனையோ பேர்; எல்லாருக்கும் ஒத்தாசை செய்தாக வேண்டுமல்லவா?" என்றேன்.

"ஆமாம்; சமயா சமயம் தெரியாமல் ஏதாவது சிரம சாத்தியமான காரியத்தை ஆரம்பித்து விடுவது; அப்புறம் என்னை ஒத்தாசைக்குக் கூப்பிடுவது. இதுவே தொழிலாய்ப் போயிற்று."

"நான் கூப்பிடவில்லையே, ஸ்வாமி!"

"பிள்ளையார் சுழிதான் போட்டு விட்டாயே, அப்பா!"

"அடாடா! அது பிள்ளையார் சுழி இல்லையே!"

"என்ன, பிள்ளையார் சுழி இல்லையா? அப்படியானால், என்னை எதிர்பார்த்ததாகச் சொன்னாயே, அது எப்படி?"

"பெரியவர்களின் வாக்கிலே எனக்கு நம்பிக்கையுண்டு, ஸ்வாமி!"

"பெரியவர்கள் என்ன சொல்லியிருக்கிறார்கள்?"

"திருவள்ளுவரின் திருக்குறள் தேவரீருக்குக் கரதலாமலகமாயிற்றே; அந்தத் தமிழ்





க
ல்
கி
க
லெ
க்
ஷ
ன்

மறையிலே,

'குடி செய்வ லென்னு மொருவற்குத்
தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்'

என்று சொல்லி யிருக்கிறதன்றோ? இந்தக் குறள் வாக்கின்படி, நான் செய்ய வேண்டிய முயற்சியை நான் செய்தால், துணியை வரிந்து கட்டிக்கொண்டு ஓடி வந்து ஒத்தாசை செய்ய வேண்டியது தங்களுடைய பொறுப்பு அல்லவா?''

''பொறுப்பென்றால், அதிலும் தராதரம் கிடையாதா? எப்பேர்ப்பட்ட பாரமான பொறுப்பை என் தலையிலே சுமத்தப் பார்க்கிறாய்? என்னைக் கேட்டிருந்தாயானால்...''

''அதுதான் கேட்கவில்லையே, ஸ்வாமி!''

''கேட்காவிட்டால் போ! மேற்குத் திசையில் ஒரு பயங்கரமான யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது. அது கிட்டக் கிட்ட நெருங்கி வந்துகொண்டிருக்கிறது என்றாவது கேள்விப் பட்டிருக்கிறாயோ, இல்லையோ?''

''ஆகா...!''

''அதன் பயனாகக் காகிதத்துக்கு அசாத்திய கிராக்கி, நமக்கு வரும் கற்பூரத்தை மடிப்பதற்குக் கூடக் காகிதம் அகப்படுவதில்லையென்று தெரியுமோ, இல்லையோ?''

''தெரிந்துதானிருக்கிறது. காகித விலை ஒன்றுக்கு நாலு மடங்குதான்; இன்னும், அச்சு இயந்திரங்கள் விலை கிராக்கி; மை விலை கிராக்கி; மரச்சாமான்கள் விலை கிராக்கி...''

''இவ்வளவெல்லாம் தெரிந்திருந்தும் இப்போது போய் என்னத்துக்காகப் பத்திரிகை ஆரம்பிக்கிறாய்? கையிலே காலணா அரையணா இருந்தால் இறுக்கி முடிந்து கொள்வதை விட்டு விட்டு...?''

கொஞ்சம் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. என் பையில் அப்போது ஒரு அரையணாவும், காலணாவும் இருந்தது பகவானுக்கு எப்படித் தெரிந்தது என்றுதான். மெதுவாய் சமாளித்துக் கொண்டு, ''காலணாவும் அரையணாவும் யாருக்கு வேண்டும், ஸ்வாமி! தங்கள் அனுக்கிரகத்தினால், தங்கப் பவுனாகவே வந்து குவிகிறது!'' என்றேன்.

''தங்கப் பவுனா? திருடப் போக வேண்டியதான்...''

''அமெரிக்காவுக்கா? மார்ஷனீக் தீவுக்கா?'' என்று கேட்டேன்.

''வர வர, நமக்கு பக்தர்கள் சாத்தும் ஸ்வர்ண புஷ்ப தக்ஷிணை கூடக் காகிதமாக வருகிறதே அப்பா!''

''கொஞ்சம் அதிகப்படி காகிதத்தை இப்படித் தள்ளி விடலாமே? இந்தக் காகித கிராக்கி காலத்தில்...''

''விளையாட வேண்டாம். இவ்வளவு கஷ்டங்களும் இடையூறுகளும் இருப்பது தெரிந்திருந்தும் என்னத்திற்காக இப்போது போய்ப் புதிய பத்திரிகை ஆரம்பிக்கிறாய்? சொல் சீக்கிரம்!'' என்று விநாயகர் கெடுபிடி செய்தார்.

''எல்லாம் தங்களுடைய மாமா... மாயக் கண்ணன் இருக்கிறாரே... அவருடைய கீதையின் உபதேசத்தைப் பின் பற்ற வேண்டுமென்றுதான், ஸ்வாமி! ஒவ்வொருவரும் அவரவர்களுடைய ஸ்வதர்மத்தையே கடைப் பிடிக்க வேண்டுமென்று கண்ணபிரான் சொல்லியிருக்கிறார் அல்லவா? நல்ல காரியங்களுக்கு வரும் விக்கினங்களை நிவர்த்திப்பது எப்படித் தங்களுடைய ஸ்வதர்மமோ, அப்படியே, வெள்ளைத் தாள்களைக் கறுப்புத் தாள்களாக்குவதும் அடியேனுடைய ஸ்வதர்மம். தங்களால் அடியார்களுடைய கஷ்டங்களை நிவர்த்திப்பதற்குப் போகாமலிருக்க முடியாது. காகித கிராக்கி, அச்சு கிராக்கி என்றெல்லாம் பார்த்தால் சரிப்படுமா? தமிழ் வேதம் என்ன சொல்கிறது?

'துன்ப முறவரினுஞ் செய்க
துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை'

என்று தெய்வப் புலவர்...''

''நிறுத்து'' என்றார் விநாயகர். ''உனக்காக ஏதாவது தெரிந்தால் சொல்லு; அவர் சொன்னார் இவர் சொன்னார் என்று கதை வளர்த்தாதே'' என்றார்.

நான் பேசாமலிருந்தேன்.

''உன்னுடைய பத்திரிகையின் நோக்கங்கள் என்ன?'' என்று கணபதிராயர் கேட்டார்.

''ஸ்வாமி! தப்பில்லாமல் சரியாகப் பேசினால் பேசுங்கள்; இல்லாவிடில் வாயை மூடிக் கொண்டிருங்கள்'' என்றேன்.

''என்ன தப்பு?'' என்று கணபதி கேட்டார்.

"இது தமிழ் மக்களுடைய பத்திரிகை; தாங்கள் 'உன்னுடைய பத்திரிகை' என்று சொன்னது தப்பு" என்றேன்.

''அப்படியே யிருக்கட்டும்; இந்தத் தமிழர் பத்திரிகையின் நோக்கங்கள் என்ன? புதிதாய்ப் பத்திரிகை ஆரம்பிக்கிறவர்கள் எல்லாம் இதைச் சொல்வது சம்பிரதாய மாயிற்றே?'' என்றார் விநாயகர்.

"நானும் சொல்கிறேன், ஸ்வாமி! இந்தப் பத்திரிகைக்கு மூன்று நோக்கங்கள் உண்டு. முதலாவது நோக்கம், தேச நன்மை...''

"இரண்டாவது?"

"இரண்டாவது, தேச நன்மை."

"மூன்றாவது?"

"மூன்றாவதும் தேச நன்மைதான்!"

"இவ்வளவுதானா? வேறு நோக்கம் ஒன்றுமே கிடையாதா? தமிழ் பாஷையைக் காப்பாற்றும் நோக்கம்கூட இல்லையா?"

"தமிழ் பாஷை நன்றாய்த்தானே இருக்கிறது, ஸ்வாமி! அதைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் ஒன்றுமே காணோமே? நம்மைத்தான் தமிழ்த்தாய் காப்பாற்ற வேண்டும்!"

"கலைகளுக்குப் புத்துயிர் அளிக்கும் நோக்கம் அணுவளவும் கிடையாதா?"

''கலைகளுக்கும் அப்படி ஒன்றும் நேர்ந்து விடவில்லையே, ஸ்வாமி! புத்துயிர் அளிக்க வேண்டிய அவசியம் என்ன? கலைகளை நாம் அநுபவிப்பதுதானே அவசியமா யிருக்கிறது?"

"ரொம்ப சந்தோஷம், அப்பா! நான் உனக்கு வேண்டிய உதவி செய்வதென்று தீர்மானித்து விட்டேன். காரியாலயத்தில் சில்லறை வேலைகள் செய்ய என்னுடைய வாகனத்தை வேண்டுமானால் அனுப்பி வைக்கட்டுமா?"

"வேண்டவே வேண்டாம்; ஸ்வாமி! எவ்வளவோ கஷ்டப்பட்டு, நான் சேர்த்திருக்கும் காகிதத்தைத் தங்கள் அருமை வாகனம் சாப்பிட்டு விட்டால் நான் என்ன செய்கிறது?" என்று கேட்டேன்.

"சரி! அப்படியானால் நான் போய் வருகிறேன். பத்திரிகை வெளியானதும் முதல் பிரதி நமக்கு அனுப்பி விடு; ஞாபகமிருக்கட்டும்'' என்று சொல்லிவிட்டு, விநாயகக் கடவுள் எழுந்திருந்து சென்றார்.

"ஸ்வாமி! ஸ்வாமி!" என்று கூப்பிட்டேன்.

விநாயகர் திரும்பிப் பார்த்தார்.

''சந்தாப் பணம் கொடுக்காமல் போகிறீர்களே?" என்றேன்.

ஸ்ரீ கணபதி திரும்பி வந்தார். தும்பிக்கையினுள்ளிருந்து மூன்று கொழுக்கட்டைகளை ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணி வைத்தார். கொழுக்கட்டைகளை விண்டு பார்த்தால், ஒவ்வொன்றுக்குள்ளும் ஒவ்வொரு ரூபாய் இருந்தது.

"ரொம்ப வந்தனம்'' என்றேன்.

கொஞ்ச தூரம் போனவர் மறுபடியும் திரும்பி வந்து, "நம்முடைய தம்பி எந்த விஷயத்துக்கும் போட்டிக்கு வருகிறவனாயிற்றே! எனக்குப் பத்திரிகை படிக்கக் கிடைக்காமல் அவன் கொண்டு போய் விடுவான். அவனுக்கும் ஒரு சந்தா கட்டி விடுகிறேன்" என்று சொல்லி மறுபடியும் மூன்று கொழுக்கட்டைகளை வைத்தார்.

"ரொம்ப ரொம்ப வந்தனம்" என்றேன்.

• • •

நேயர் ஸ்ரீ சந்தேக ஸ்வாமி அவர்களுக்கு ரொம்ப ரொம்ப ஆத்திரம் வந்து கொண்டிருப்பது எனக்குத் தெரிகிறது. "இதெல்லாம் என்ன கதை? விநாயகர் வரவாவது? சந்தா செலுத்தவாவது? முதல் இதழிலேயே இவ்வளவு பொய்யும் புனைசுருட்டுமா?" என்று அவர் கோபமாய்க் கேட்பது என் காதில் விழுகிறது.

தயவு செய்து அவருக்குச் சௌகரியப்படும்போது நமது காரியாலயத்துக்கு விஜயம் செய்து, நமது சந்தாதாரர் ரிஜிஸ்டரைப் புரட்டிப் பார்க்கும்படி ரொம்பவும் கேட்டுக் கொள்கிறேன். மற்றுமுள்ள நேயர்களையும் அவ்வாறே வேண்டிக் கொள்கிறேன்.

அப்படி விஜயம் செய்யும் அன்பர்கள் சந்தாதாரர் புத்தகத்தின் தலைப்பில் பின் வரும் பதிவுகளைப் பார்ப்பார்கள்:-

**1. ஸ்ரீ. ஆர். விநாயகம் பிள்ளை, எம்.ஏ.பி.எல்., 93, வடக்குத் தெரு, சிதம்பரம்.**

**2. ஸ்ரீ.க.நா. சுப்பிரமண்யம், ஆணிக்காரன் தெரு, சிதம்பரம்.**

**(கல்கி, ஆகஸ்ட் 1, 1941)**



# கண்ணோடு காண்பதெல்லாம்

தம்பிடமிருந்து சோனாலி பிரிந்ததற்குக் காரணமான பிரவீண், ருசிதா காதலர்களுக்கு விரட்டி விரட்டி தொல்லை கொடுக்கிறார் அர்ஜுன். நாம் எதிர்பார்த்த மாதிரியே சோனாலி திரும்பக் கிடைத்துவிட, அர்ஜுன் வில்லன் ரோலிலிருந்து வாபஸ். மங்களம்.

இப்படி பத்தியமான கதை! கொஞ்சம் தாளிப்பு என்று சொன்னால் அர்ஜுன் தான்!

தேர்தலில் சீட் கிடைத்த வேட்பாளர் தொகுதியை வலம்வருகிற மாதிரி, அர்ஜுன் படம் முழுக்க ஒரு ரவுண்ட்-அப் கொடுத்திருக்கிறார் பாருங்கள், உண்மையிலேயே அசத்தல். கம்பீரம், நிதானம் இரண்டையும் மிக்ஸ் பண்ணி இவர் அடிக்கும் வில்லன் லூட்டியில் மனசு 'கதக், கதக்' என்கிறது. 'ஆக்ஷன் கிங்' என்ற பட்டத்திற்கு மிகப் பொருத்தமாய் அர்ஜுன்.

அறிமுகம் பிரவீண், அறிமுகம் ருசிதா. படம் முழுக்க, மழையில் நனைந்த ஆட்டுக்குட்டி மாதிரி அர்ஜுனுக்கு பயப்படவே இரண்டு பேருக்கும் நேரம் சரியாக இருக்கிறது. பயந்து பயந்து அலுத்துப் போய் கொஞ்சம் காதலித்து விட்டுத் திரும்புகிறார்கள்!

பிரவீண் வைஜெயந்தி மாலாவின் மகன் என்பது 'டைட்டில்' கொசுறுச் செய்தி.

படத்தோடு ஒட்டாமல் இருந்தாலும், மணிவண்ணனின் காமெடி, ஏசி யில்லாத தியேட்டரில், ஃபேனுக்குக் கீழே இடம்கிடைத்த மாதிரி குளுமை.

தேவாவின் இசையில் 'இருபது வயது வரை', 'தாஜ்மகால் ஒன்று' ஆகிய இரண்டு பாடல்கள் இனிமை.

காதலில் வித்தியாசமான ஒரு 'டச்' கொடுத்துக் கதையை நகர்த்திச் சென்ற டைரக்டர், க்ளைமாக்ஸில் கோட்டை விட்டிருக்கிறார்.

மெயின் ஹீரோயின் என்றாலும், சோனாலி பிந்தரே இரண்டு பாடல்களிலும், இரண்டு காட்சிகளிலும் மட்டுமே ஆஜர்! அவரைப் பார்க்கவே டிக்கெட் வாங்கிப் போகத் தயாராயிருக்கும் ரசிகர்களுக்குக்கூட ஏமாற்றம்!

— கே.பி.எஸ்.



• வண்டிக்காரர் ரவி



• யுவராஜ்

**இது 'மினரல் வாட்டர்' காலம். ஒரு லிட்டர் பாலின் விலையை விட அதிக விலைகொடுத்து ஒரு லிட்டர் தண்ணீர் வாங்கிக் குடிக்கிற காலம். இது ஒருபுறம். ''மழைக் காலமா? எந்தத் தண்ணீரானாலும் காய்ச்சி வடிகட்டித்தான் குடிக்கவேண்டும்'' என்று மாநகராட்சிகளே அறிவுரை கூறுவது இன்னொருபுறம். இந்த இரண்டு புறங்களையும் தவிர, மூன்றாவது புறமும் ஒன்று இருக்கிறது. அதுதான் அங்கங்கே இருக்கிற சாதாரண டீக்கடைகளில் வழங்கப்படும் குடிநீர். அது எப்படிப்பட்டது? உதாரணத்துக்கு தாம்பரத்தில் ஒரு ரவுண்ட் அடித்தோம்.**

தாம்பரத்திலுள்ள நூற்றுக்கணக்கான டீக்கடைகளுக்கும், சிறிய ஓட்டல்களுக்கும் தண்ணீர் சப்ளை செய்வது தாம்பரம் ரங்கனாதபுரத்திலுள்ள ஒரு கிணறு. குண்டும் குழியுமான ரோடு, பக்கத்திலேயே ஓடுகிற சாக்கடை, சுத்தம் செய்யப்படாமல் பாசிபடர்ந்த நீர்ப்பரப்பு. போதாக்குறைக்கு கிணற்றைச் சுற்றி துணிகளைத் துவைப்பது, குழந்தைகளைக் குளிப்பாட்டுவது என சகலவிதமான பணிகளும்!

இந்தக் கிணற்றிலிருந்துதான் பதினைந்து இருபது மாட்டு வண்டிகளில் – பேரல்களில் நீரெடுத்து கடை கடையாக ஊற்றுகிறார்கள் வண்டிக்காரர்கள். ஒரு பேரல் தண்ணீர் விலை இருபதிலிருந்து முப்பது ரூபாய் வரை.

வண்டிக்காரர் கே. மணி சொல்கிறார் : "முந்தி கிணத்தை சுத்தம் பண்ணிக்கிட்டுத்தான் இருந்தாங்க. இப்போ பண்றதே இல்லை. அதுக்கு நாங்க என்ன பண்ண முடியும்? எங்களுக்கு இதுதான் பொழைப்பு. வெயில் காலம் வந்துருச்சுன்னா இந்தக் கிணத்துலயும் தண்ணி எடுக்க முடியாது. முனிசிபாலிட்டிக்காரங்களும், ஊர்க்காரங்களும் தண்ணி எடுக்க விட மாட்டாங்க. வேற எடத்துக்குத்தான் போகணும்!"

இன்னொரு வண்டிக்காரர் ரவி, "நான் அடுத்த தெருவுலதான் இருக்கேன். எனக்கு ரெண்டு பொம்பளைப் பசங்க. நான் ஓட்டுறதோ வாடகை வண்டி. வண்டி வாடகை, மாட்டுக்குத் தீனி எல்லாம் போக கையில அம்பது நூறு நின்னாலே பெரிய விஷயம். இத நம்பித்தான் பொழப்பு ஓடுது" என்றார்.

வண்டிக்காரர்கள் கையோடு ராட்டினமும் கயிறும் கொண்டு வந்து விடுகிறார்கள். ஆழமான கிணற்றில் வாளிவாளியாய் நீரை இறைத்திறைத்து, பேரல்களில் நிரப்பிக் கடைகளுக்குக் கொண்டு போகிறார்கள்.

தாம்பரத்தில் டீக்கடை வைத்திருக்கும் யுவராஜ், "எங்களுக்கு வண்டிக்காரங்கதான் தண்ணி ஊத்தறாங்க. ரெண்டு பேரல் நாப்பது ரூபா. தண்ணிக்கு வேற வழி?" என்கிறார்.



• பாசிபடர்ந்த கிணறு

அந்தப் பகுதி கவுன்சிலர் வி. முத்து (அ.தி.மு.க.), "அந்தக் கெணத்துத் தண்ணி பாதுகாக்கப்பட்ட குடிநீர் இல்லைதான். நான் கவுன்சிலரா வந்தப்புறம்தான் தூர் கூட வாராம இருந்த கிணத்தை, ஆளுங்கள

வச்சு தூர் வாரினேன். அதுக்கு முன்னாடி கிணத்தைச் சுத்தி சாக்கடையும், சகதியுமா இருக்கும். 97-ல் ஒரு தீர்மானம் போட்டு, நாப்பதாயிரம் ரூபா செலவுல கிணத்தை சுத்தி ஒரு காம்பவுண்டு சுவர் எழுப்பினேன். இப்பவும் அப்பப்போ கிணத்தைச் சுத்தம் பண்ணிக்கிட்டுத்தான் இருக்கோம். தாம்பரம் நகராட்சிக்கு பிளீச்சிங் பவுடர் மாதிரி, கிளீனிங் சமாசாரமெல்லாம் வரத்தான் செய்யுது. ஆனா எங்க போகுதுன்னு தெரிய மாட்டேங்குது. கமிஷனர்ட்ட போய் இந்த மாதிரி கிணத்தைச் சுத்தம் பண்ண பிளீச்சிங் பவுடர் வேணும்னு கேட்டா, அவரு எஸ்.ஓவை (சானிட்டரி ஆபீசர்) கூப்பிட்டுச் சொல்வாரு. எஸ்.ஓ. மத்தியானம் வாங்கம்பாரு. அப்புறம் நாளைக்கிம்பாரு. நான் பொறுத்துப் பொறுத்துப் பார்த்துட்டு, பாக்கெட்லருந்து ரூபா எடுத்துக் குடுத்து ப்ளீச்சிங் பவுடர் வாங்கி சுத்தம் பண்ணச் சொல்லுவேன். சமயத்துல சுத்தம் பண்றவங்களே நாம திட்றோம்கறதுக்காக கைக் காசைப் போட்டு பிளீச்சிங் பவுடர் வாங்கிடுவாங்க. கிணத்துல இருக்கிற பாசியை ஊர்க்காரங்களும், கட்சித் தொண்டர்களும்தான் எடுத்து சுத்தம் பண்ணுவாங்க. சமயத்துல வண்டிக்காரங்களையே எறங்கி சுத்தம் பண்ணச் சொல்லுவேன். பொதுமக்களுக்காகத்தான் பொதுக்குழிப்பிடத்துக்குத் தண்ணி போகுது. அது சரி. இன்னொரு பைப்பு வழியா ஒரு பெரிய ஓட்டலுக்கே தண்ணி போகுது. அது தான் ஏன்னு தெரியலை. இன்னும் கொஞ்சம் செலவு பண்ணி, கிணத்துக்கு ஒரு மூடி போட்டு, குழாய் போட்டு, நல்லா பராமரிச்சா தைரியமா கிணத்துத் தண்ணியைக் குடிக்கப் பயன்படுத்தலாம்!" என்றார்.


• வி. முத்து (கவுன்சிலர்)


• கே. மணி

• மாட்டு வண்டியில் பயணமாகும் குடிநீர்

இது பற்றி, தாம்பரம் நகராட்சி கமிஷனர் பாலசுப்ரமணியனிடம் கேட்டபோது, "அந்தக் கிணற்றை நாங்கள் அடிக்கடி சுத்தப்படுத்திக் கொண்டுதான் இருக்கிறோம். பிளீச்சிங் பவுடரெல்லாம் நிறைய இருக்கிறது. சம்பந்தப்பட்ட எஸ்.ஓவை விசாரிக்கிறேன்!" என்றார்.

# டீக்கடைகளா? ஜாக்கிரதை!

பாதுகாக்கப்படாத, அசுத்தமான நீரால் ஏற்படக்கூடிய பாதிப்புகளைப் பற்றி எந்த அக்கறையும் இல்லாமல் தாம்பரத்தில் டீக்கடை வியாபாரம் கனஜோராகத்தான் நடந்து கொண்டிருக்கிறது. நகராட்சியின் சுகாதார அலுவலருக்கு இதெல்லாம் தெரியாமலா இருக்க முடியும்!

— கே. பாலசுப்ரமணியன்

படங்கள் : எம். சண்முகம்

# இரகசியங்கள் சொல்வதற்கு அல்ல...

ஈஸ்வர்

1

திருநெல்வேலி சிவசங்கரன் சுப்ரமணியன் என்ற மணி-சாப், மாதுங்காவின் அந்தப் பழைய, பல மாடிக் குடியிருப்பின் முன், தன்னுடைய 89ம் வருட பத்மினி - ப்ரீமியரை நிறுத்தி, கார் கதவைத் திறந்த பொழுது மணி எட்டு, பத்து. கண்ணில் பட்ட பெயர், மங்கிய வெளிர்-நீல, மஹாலட்சுமி அபார்ட்மெண்ட்ஸ்.

அங்கங்கே கவலையான முகங்கள், இரண்டாவது மாடி பால்கனியைப் பார்த்தவாறு குசுகுசுத்துக் கொண்டிருந்தன. மூன்று போலீஸ், கட்டடத்தைப் பாது காத்துக் கொண்டிருந்தது. உள்ளே போக, வர முயன்று கொண்டிருந்தவர்களை, மராத்தியிலும், இந்தியிலுமாக, மிரட்டுவதிலும், விரட்டுவதிலும் மும்முரமாயிருந்தது.

பயிற்சி பெற்ற போலீஸ் உடம்பின் மிடுக்கு இருந்தாலும் மணியின் முகத்தில், அதை மீறி சற்று நளினமான நாகரிகம் இருந்தது. இவனிடம் ஏதோ இருக்கிறது என்கிற மாதிரி கூர்மைமிகு கண்கள்.

வாயிலில் நிற்கும் போலீஸ் சல்யூட் வைத்தது.

"ஊப்பர் சாப்... ஃப்ளேட் நம்பர் சாத்."

மணி அவசரப்படவில்லை. நிதானமாக அந்த வீதியின் நீள அகலங்களில் அவன் பார்வை வியாபித்தது. எதிர்த்திசை அபார்ட்மெண்ட்சையும் ஒரு அலசல்.

மும்பையில் இது இந்த மாதத்தின் மூன்றாவது கொலை. கடந்த இரண்டு மாதங்களில் ஐந்தாவது, அமைதியான கொலை.

இந்த முறை ஏதோ ஒரு பாலக்காட்டுப் பாட்டி. பிள்ளை துபாயில். பல வருடங்களுக்கு முன்னர் பம்பாயில் குடியேற்றம். இப்பொழுது மும்பையிலேயே கடைசி மூச்சைக் கஷ்டப்பட்டு விட்டிருக்கிறாள்.

தனிமை வாசம். கொலையின் நோக்கம்...? உடைமைகள் ஏதேனும் காணாமல் போயிருக்கின்றனவா? சொல்வதற்கு, கூட ஆட்கள் யாரும் கிடையாது. துபாய் பையன் வந்த பிறகே தெரியும்.

வயர்லெஸ்ஸில் மணிக்கு முன் கூட்டியே தகவல் வந்துவிட்டது. கடந்த முறைகள் போல், அவன் இந்த முறை கடைசியாகக் கூப்பிடப்படவில்லை. முன் கூட்டியே தகவல். முதலில் அவன் அங்கு வந்து விட வேண்டும். மேலிடத்து விருப்பம்.

டி.எஸ்.பியும், மாதுங்கா இன்ஸ்பெக்டரும் ஏற்கெனவே இருந்தார்கள் அங்கே. டி.எஸ்.பி, பூனாக்காரன். இளம் வயதை, இலேசாகக் கடந்து கொண்டு இருக்கின்றவன். விவரமானவன். சிவசேனாவின்

செல்லப்பிள்ளை என்று, சில முன்னாள் போலீஸ் வட்டாரங்கள், காங்கிரஸ் காதில் கிசுகிசுக்கும் அளவுக்கு, பத்திரிகை பிரபலம் உள்ளவன். ஆனால் கிருஷ்ணா கமிஷன் ரிப்போர்ட், அது இது என்று எதிலும் மாட்டிக் கொள்ளாதவன். டி.எஸ்.பி. மல்ஹோத்ரா ராம்குமார் ஆங்கிலத்தை அழகாகப் பேசுவான். அவனுடைய உயரம், மிடுக்கு, நிறம், ஆங்கில உச்சரிப்பு இவற்றிற்காகவே அவனுக்கு ஏராளமான விசிறிகள் உண்டு.

மணி-சாப்புடன் சேர்ந்து அவனும் செயல்பட வேண்டும் என்ற, மஹாராஷ்டிர அரசின் ஆணைதான், இந்தமுறை அவனுக்குக் கொஞ்சம் கசப்பாக இருந்தது. மணியின் மீது அவனுக்குப் பொறாமையோ, கசப்போ கிடையாது. இது மணிக்கும் தெரியும்.

ஏழாம் எண் ஃப்ளாட், வாசலிலேயே மல்ஹோத்ரா நின்று கொண்டிருந்தான்.

"வழக்கம் போலதான். உயிரு போயி இருபது மணி நேரத்துக்கு மேல ஆகியிருக்கலாம். டாக்டர் உள்ள இருக்காரு."

"மரணத்துக்குக் காரணம்...?"

"அதுவும் வழக்கம் போலத்தான். விஷ ஊசிதான். சைலண்ட் டெத், பட்



எ க்ருயல் மர்டர்."

"பையனுக்கு சொல்லியாச்சா...?"

"ம்... துபாய்ல சார்ட்டட் அக்கௌண்டண்டா இருக்கான். பெரிய எண்ணெய்க் கிணறு கம்பெனி, சொந்தக்கார ஷேக்குக்கு, கிட்டத்தட்ட, கூடப் பொறந்தவன் மாதிரி ஆயிட்டவனாம். நாளைக்கே அவனை ஏதாவது ஒரு ஏர்லைன்சுல போட்டு, இந்தியாவுக்கு அனுப்பறது இனிமே அந்த ஷேக்கோட கடமையாம்."

மல்ஹோத்ரா இலேசாகப் புன்னகைத்தவாறே சொன்னான். சிரிப்பில் அழகாகவும், புன்னகைத்தால் மந்தஹாசமாகவும் இருந்தான்.

மும்பைக்கு என்ன ஆயிற்று...? ஒரேயடியாக, தாத்தாக்களும், பாட்டிகளுமாக, பரலோகம் போய்க் கொண்டு இருக்கிறார்கள்? தப்பு, தப்பு. அனுப்பப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். அதுவும் அதிக வலி இல்லாமல்.

முதலில் ஒரு பஞ்சாப் சிங். இடம் முலண்ட்.

இரண்டாவதாக ஒரு மராட்டியப் பாட்டி. தாராவி பக்கம்.

இவை போன மாதம்.

மூன்றாவது ஒரு பார்ஸிப் பெண்மணி. இதே மாதுங்காவில்.

நான்காவது ஒரு கன்னடக் கிழவர். இடம் முலண்ட்.

ஐந்தாவது இதோ... ஒரு பாலக்காட்டுப் பாட்டி. இடம், இதோ, மாதுங்காவில்தான்.

ஏதோ, எங்கோ ஒரு லிங்க் இருக்க வேண்டும். எங்கே, என்ன என்றுதான் புரியவில்லை.

விசித்திரமாக இருந்தது. கொலையுண்ட அனைவருமே, அறுபத்தி ஐந்து, எழுபத்தைந்து தாண்டியவர்கள். வெவ்வேறு மாநிலத்துக்காரர்கள். வெவ்வேறு மொழி வேறு. இரண்டு, மூன்று மாமாங்கங்களாக பம்பாய் ரேஷன் கார்டில் ஏற்கெனவே பதிவானவர்கள். குறிப்பாக, மும்பையில் தனியாக வசிப்பவர்கள்.

பஞ்சாப் சிங்கின் மகன் கனடாவில் இருந்து ஓடி வந்திருந்தான். மராட்டியப் பாட்டிக்கு சிட்னியில் இருந்து ஒரு பேரன் வந்து, மௌனமாகக் கண்ணீர் விட்டு விட்டுப் போனான். தாய் தந்தை இறந்த பிறகு, பாட்டியிடம் வளர்ந்தவன். பாசம், நன்றி மறவாது, பாட்டிக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தான். இனிமேல் கல்யாணத்திற்கு அவனுக்கு யார் இந்தியப் பெண் பார்க்கப் போகிறார்கள் என்று வருந்தியவன்.

பார்ஸிப் பாட்டிக்கு இரண்டும் பெண்கள். இருவருமே நியூஜெர்ஸியில் எம்.எஸ். படித்து, டாக்டர்களாக இருந்தவர்கள். கன்னடத்துக் கிழவரின் மகன் லண்டனில் புறநகர்ப் பகுதியில் ஒரு 'இந்தியா காபி ஹவுஸ்' நடத்திக் கொண்டு இருக்கிறவர்.

"வந்தவர்கள் அனைவருமே, பிறகு

**"நம்ம கேடி கபாலி ரொம்ப நல்லவம்பா"**

**"எப்படிச் சொல்றீங்க?"**

**"அவனோட ஜுரிஸ்டிக்ஷன்ல இருந்து ரிடையர் ஆன போலீசுக்கெல்லாம் 'மாமூல் பென்ஷன்'கூட அனுப்பறானே!"**





**"டி.வி பார்த்துக்கிட்டிருந்த பையன் ஏன் திமர்னு எழுந்து போயிட்டான்?"**

**"நிகழ்ச்சியின் இறுதியில் ஒரு கேள்வி கேட்கப்படும்னு அறிவிப்பாளர் சொன்னதும் பயந்துட்டான்!"**

**— சீர்காழி ரேவதி**

சொன்ன ஒரே பதில். லாஸ்ட் டைம் பார்த்தது எல்லாம் அப்படியேதான் இருக்கு. ஒண்ணும் காணாம போனா மாதிரி தெரியலை...

"டி.எஸ்.பி சார்... எப்படியாவது கண்டு பிடியுங்க... எங்களுக்கு லீவு, விசா எல்லாம் ப்ராப்ளம்... தொழிலை விட்டு ரொம்ப நாள் இங்கே இருக்க முடியாது..."

எல்லோரும், வந்த வேகத்தில் பறந்தும் விட்டார்கள். இனி இருந்து, அழுது என்ன பயன், என்பதாலா? அல்லது இந்தியப் போலீஸ் மீது அவ்வளவுதான் நம்பிக்கையா அல்லது அவ்வளவு நம்பிக்கையா?

விந்தையாக இருந்தது. பின்னணி கிட்டத் தட்ட ஒரே மாதிரிதான். ரொம்ப மூர்க்கத்தனம் இல்லாத கொலைகள். மண்டை தாக்கப்பட்டு, நெஞ்சில் குண்டு பாய்ந்து, உடல் கன்னாபின்னாவென்று குத்திக் கிழிக்கப்பட்டு, தலை வேறு, கைகால் வேறு என்று அறுக்கப்பட்டு, முகம் சிதைக்கப்பட்டு, என்றெல்லாம் கோரங்கள் கிடையாது. அமைதி வழி. படுக்கையில் தூங்குவதைப் போல். லேசான வலி விஷ ஊசிதான்.

கொலைகளின் நோக்கந்தான் புரிபடவில்லை. மாநிலச் சண்டைகளுக்கு வழி வகுக்கவா...? நேஷனல் இன்டகரேஷன் கவுன்சிலில் பஞ்சாப், கன்னட, கேரள முதல்வர்கள், மஹாராஷ்டிர முதல்வர் மீது பாயவா...? எதற்காக இந்தக் கொலைகள்?

மணி, டில்லியில் இருந்து மும்பைக்கு வந்ததே இதற்காக அல்ல. அவனது மத்தியப் புலனாய்வுத் துறைக்கு ஏற்கெனவே மூச்சு முட்டும் அளவுக்கு ஏரானமான சிக்கலான வழக்குகள் இருந்தன. மாநில எல்லைகளைத் தாண்டும் வழக்குகள் கூடவே உண்டு. இந்தியப் பொருளாதாரத்தையே ஆட்டி வைக்கும், பொருளாதாரக் குற்றங்களின் நீளமான வரிசை அவனுக்குப் பரந்த அறிவைத் தந்திருந்தது.

ஹர்ஷத் மேத்தா வழக்கு, ஜெயின் டைரி, யூரியா ஊழல் வழக்கு, கால்நடைத் தீவன ஊழல், சுடுகாட்டு ஊழல், போஃபர்ஸ் வழக்கு, தமிழக அந்நியச் செலாவணி வழக்கு என்று இவை நீள நீள, மத்தியப் புலனாய்வுத் துறையின் இளைஞர் பட்டாளத்தின் குற்றவியல் அனுபவமும் நீள ஆரம்பித்தது.

மணியின் திறமைக்குச் சவாலாக ஒரு சில வழக்குகள் அவனிடம் தள்ளி விடப் பட்டிருந்தன. முதலில் அவன் மும்பைக்குப் போக வேண்டும். மும்பையைக் கெட்டியாகப் பிடித்து உலுக்கி, அடித்தளத்தையே ஆட்டி வரும் கறுப்புச் சந்தை நிழல் அரசை அடையாளம் கண்டு, வலு இழக்கச் செய்ய வேண்டும்.

அவனுக்கு சகல சௌகரியங்களையும் மராத்திய அரசு செய்து கொடுக்கும். தேவைப்பட்டால் அங்கு நடக்கும் எந்தக் குற்றத்தின் பின்னணியையும் ஆராய அவனுக்கு, மத்திய அரசின் அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. தவிரவும் சில வழக்குகளில் அவனுக்கு, நேரிடையாக சில நீதிமன்றங்களுக்கு, சில அறிக்கைகள் தயார் செய்து அனுப்ப வேண்டிய உத்தரவும் இருந்தது.



**"உங்களைக் கட்டிக்கொண்டு என்ன சுகத்தைக் கண்டேன்? ஒரு புடைவை உண்டா, நகை நட்டு உண்டா, டீவி உண்டா, ஃப்ரிட்ஜ் உண்டான்னு கேட்டு சண்டை போட முடியாமல் எல்லாத்தையும் நீங்களாவே வாங்கிக் கொடுத்து விடுறீங்களே, நியாமா?"**

**— ப. மீனாட்சி**

சூழலுக்கு ஏற்ப, தேவைப்பட்டால், மாநிலக் காவல்துறைக்கு துணையாக உடனடியாகச் செயலில் இறங்கவும், மாநிலக் காவல்துறை அவனுக்கு உறுதுணையாக உதவவும், தேவையான இரகசிய சுற்றறிக்கைகள் அதிகாரபூர்வமாக, சம்பந்தப்பட்டவர்களுக்கு அறிவிக்கப்பட்டு இருந்தன.

மணிக்கு இப்பொழுது பழைய நான்கு கேஸ்களும் அத்துபடி ஆகியிருந்தன. முதல் இரண்டு வரை அவன் தலையிடவில்லை. வேறு வேலைகளில் மும்முரமாக இருந்தான். மூன்றாவது கேசின்போதுகூட பின்னரே அவன் ஒத்துழைப்பு கோரப்பட்டது. ஏதோ உள் உணர்வின் உந்துதலால், பழைய இரண்டு கொலைகளுக்குப் பின்னர், மூன்றாவதாக அந்தப் பார்ஸிப் பாட்டி

**''சிஸ்டர், நேத்து ஆபரேஷன் செய்துக்கிட்ட பேஷண்ட் எல்லாரையும் கூட்டி வாங்க. ஸ்கேன் எடுத்துப் பாக்கணும்.''**

**''ஏன் டாக்டர்?''**

**''நேத்திலேருந்து என் மூக்குக் கண்ணாடியைக் காணோம்!''**

**– ஓரியூர் கே. சேகர்**

● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

வீட்டுக்கு வந்த மணி, அப்பொழுதே மல்ஹோத்ராவிடம் வேண்டுகோள் விடுத்திருந்தான்.

''மிஸ்டர்... மல்ஹோத்ரா... ஒரு சின்ன ரிக்வஸ்ட்... போஸ்ட்மார்ட்டம் முடிஞ்சு, பாடி ஆஸ்பத்திரியை விட்டுக் கிளம்பி, வீட்டுக்கு வந்து, மயானம் போறவரை, கொலையானவங்களுக்குக் கடைசி மரியாதை செலுத்த வர்ற எல்லார்கிட்டயும், ஒரு ரெஜிஸ்தர்ல, கையெழுத்து, அவங்க அட்ரஸ், வேலை விவரம் வாங்கிக்குங்க...''

ஆனால் அவனும் மல்ஹோத்ராவும் எதிர்பார்த்தபடியே அதற்கு ஒரு பெரிய கூக்குரலே எழுந்தது.

''இது என்ன புதுப் பழக்கம்? கண்டோலன்ஸ் ரெஜிஸ்தர்ல கையெழுத்தா...? போலீசுக்குப் புத்தி இருக்குதா, இல்லியா? சாவை, மத ரீதியா நடத்தி வைக்குற பண்டிட்ஜிங்ககூட கையெழுத்துப் போட்டு இருக்காங்க... இது என்ன இந்து சமய எதிர்ப்பு நாடா...? இல்லை, இங்கிலாந்து அரசா? சாவுக்கு வர்றவங்ககிட்ட இப்பவே கண்டோலன்ஸ் ரெஜிஸ்தரும் போட்டு, கையெழுத்தும் வாங்கியாச்சு. இனிமே இத்தாலிய ஆட்சிதான்'' – சில பத்திரிகைகள் கிண்டலாகக் கண்டனம் தெரிவித்து இருந்தன.

இது எந்த வகையிலும் புத்திசாலித்தனமாகப் படாததால் மல்ஹோத்ராவே சற்று எரிச்சலடைந்திருந்தான்.

இப்பொழுது இந்தப் பாலக்காட்டுப் பாட்டி.

''போட்டோ எல்லாம் எடுத்தாச்சா?'' மணி வினவ, மல்ஹோத்ரா, ''ம், ம்,'' என்றான்.

''லாஸ்ட் டைம், மாதிரியே இந்த முறையும் கண்டோலன்ஸ் ரெஜிஸ்தர் போட்ருங்க...''

''தேவையா மிஸ்டர் மணி? போலீஸ்காரங்க எங்களை, பத்திரிகைல கிழி கிழின்னு கிழிக்கிறாங்க...''

''அவங்க, அவங்களோட வேலையச் செய்யறாங்க. நாம நம்ம வேலையைச் செய்வோம்...''

''இல்ல மிஸ்டர், மணி...''

''மிஸ்டர் மல்ஹோத்ரா... ப்ளீஸ்.''

''மணி சாப்... இங்கே இதுகூட ஒரு சென்சிடிவ்வான விஷயம். தாமரையா, குல்லாவான்னு, எல்லாக் காரியத்தையும் பார்க்க ஆரம்பிச்சிட்டாங்க... வெவகாரமா போயிடும்... மும்பை அந்த நெலைக்குத் தள்ளப்பட்டாச்சி...''

வீட்டை ஆராய்ந்து கொண்டே வந்த மணி நின்றான்.

''எனக்கும் புரியாம இல்ல மிஸ்டர் மல்ஹோத்ரா... இன்னைக்குத் தேதில இதோ, இது அஞ்சாவது கொலை... ஒரு தடயமும் இதுவரை கெடைக்கலை... ஏன், எதுக்கு இந்தக் கொலைகன்னே புரியலை... நாம, புத்திசாலிங்ககூட, அதிமேதாவிங்ககூட எல்லாம் போர் நடத்த வேண்டியிருக்கு. க்ளீனா, கொலையை செய்யறாங்க... ஒரு தடயம் மிச்சமாகறதில்ல. ரொம்ப உஷாராயிட்டாங்க... நமக்கு ஏதாவது ஒரு முனை வேணும்... அதுக்காகத்தான் ப்ளீஸ்... சரி, லாஸ்ட் ட்ரையல்னு வச்சிப் போம்...''

''ஓகே... மிஸ்டர் மணி... இட் வில் பி டன்.''

ஏற்கெனவே அந்தப் பூனாக்காரனால், ஒரு மில்லி மீட்டர்கூட விடாமல் ஆராயப்பட்டுவிட்ட அந்த, பாலக்காட்டுப் பாட்டியின் வீட்டை, மணியின் திட்சண்யமான கண்கள், பூச்சியைப் பிடிக்கும் பல்லிபோல் தேடின...

இதோ இது...?

அது ஒரு கம்ப்யூட்டர் ஸ்டேட்மெண்ட். மேஜையில் இருந்த ஒரு கல்கி இதழின் ஏதோ ஒரு பக்கத்தில், கொஞ்சம் கசங்கலாக மடித்து வைக்கப்பட்டிருந்தது. என்னவாக இருக்கும் இது...?

(தொடரும்)



# "இன்னும் என்ன செய்யணும்?"

**ம**ரத்துல காய்கள் காய்க்கும். செடிகள்ல? பூ பூக்கும். புதர்ல? பூச்சி பொட்டு வாடகை குடுக்காம குடியிருக்கும்.

இந்த ட்ரைவ் – இன் – உட்லண்ட்ஸ் மரம், செடி, புதர்கள்ல மட்டும் எப்பவும் ஜோடிகள் மட்டுமே காய்த்து, பூத்து, குடியிருக்கறதைப் பார்க்கறப்ப, பலவிதமான கேள்விகள் வருது. (சும்மாருங்கப்பா, கிழவிகளுக்கு மட்டும்தான் சமூக அக்கறை இருக்கணுமான்ன?)

முதல் விஷயம், இந்தப் பொண்ணுங்களும் பையன்களும் வீட்ல சொல்லிட்டு வந்திருப்பாங்களா?

2. அனாமத்துக்கு அவ்ளோ சேர், டேபிள்ஸ் இருக்கறப்ப, கஷ்டப்பட்டுண்டு ஏன் புதர்கள்ல ஒண்டி உட்காரணும்?

3. ஐஸ் க்ரீம் ஐஸ்க்ரீமா விழுங்கறாங்களே, ஜலதோஷம் பிடிக்காதா? த்ரோட் கெட்டுப் போகாதா?

4. ரகசியக் கலந்துரையாடல் நடத்தட்டும்; தப்பில்லை. கும்மிருட்டுல கலந்துரையாடினாத்தான் சுவாரசியமா? நேரத்துல வீடு போய்ச் சேராட்டா, பேரண்ட்ஸ் கவலைப் பட மாட்டாங்களா?

5. நாளைக்கு அவனை/அவனை கல்யாணம் பண்ணிக்க முடியாம போனா இந்த ஞாபகங்களைக் குழி தோண்டிப் புதைக்க, ட்ரைவ் இன்காரங்க மரத்தடில ஒரு சென்டிமீட்டர் இடமாவது தருவாங்களான்னு கேட்டுப் பார்த்தாங்களா?

• • •

**ஜோக் அல்ல; சம்பவம்**

**ஒ**ரு பாலிடீஷியன் ஒரு ஸ்லம் ஏரியால வோட்டுக் கேட்கப் போனார்.

"உங்களுக்கு எலக்ட்ரிஸிடி வசதி பண்ணிக் குடுத்திருக்கேன். வாட்டர் சப்ளைக்கு ஏற்பாடு பண்ணியிருக்கேன். அன்பளிப்பா வீட்டுக்கு ஃபைவ் ஹண்ட்ரட் ரூபீஸ் தந்திருக்கேன். ஆளுக்கொரு எவர்சில்வர் குடம் கொடுத்திருக்கேன். பொதுவான இடத்துல வைக்க டீவி வாங்கிக் கொடுத்திருக்கேன். எனக்கு வோட்டுப் போட இன்னும் நான் என்ன செய்யணும்?"

குடியிருப்பு வாசியோட பதில்: "எலெக்‌ஷன் முடியறவரைக்குமாவது நீங்க உங்க தலைவரை மாத்திக்க மாட்டேன்னு உறுதி குடுக்கணும்!"

• • •

**எ**ல்லா சபாக்களும் டிசம்பர்ல செய்யறதை கிருஷ்ணகான சபா ஆகஸ்ட்ல செய்துடுது – அதான் பட்டமளிப்பு! இந்த வருஷம் வயலினிஸ்ட் டி. ருக்மிணிக்கு 'சங்கீத சூடாமணி' அவார்ட்! (இவர் குருவோட சன் போன வருஷம் இதே அவார்டை வாங்கியிருக்கார்!)

ருக்மிணியோட ஸ்டூடன்ட்செல்லாம் சேர்ந்து குருவுக்குச் சமர்ப்பணமா ஒரு டபுள் காஸெட் போட்டிருக்காங்க. ருக்மிணியோட லைவ் ரெகார்டிங்ஸ் தொகுப்பு.

ஏற்கெனவே ஒருமுறை சொன்னேன் லைவ் ரெகார்டிங்ஸ் ஸ்டூடியோ காஸெட்டைவிட பெட்டர்னு. இதுவும் அப்படித்தான் ரொம்ப இனிமையாயிருக்கு. ஆனா பல கச்சேரிகள்லேர்ந்து கட் பண்ணிப் பண்ணிச் சேர்த்ததால ஒரோரு இடம்க்கு ஒரோரு பக்க வாத்யம் அமைஞ்சு... விநோதமா இருக்கு!

பட், ஸ்டூடன்ட்ஸ் ஒரு டீச்சருக்கு இப்படி மரியாதை பண்ணிருக்கறது – டச்சிங்!

— கமி

# பஹ்ரைன் மன்னருக்குப் பயந்து...

குவைத் நகரில், அரசாங்கத்துக்குச் சொந்தமான ஓர் அரங்கில்தான் நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது. திடீரென்று ஒருநாள், அரண்மனையின் அதிகாரி ஒருவர், "இனி, இந்த அரங்கத்துக்கான வாடகை தர வேண்டியதில்லை; இலவசமாகவே உங்களுக்கு அரங்கம் வழங்கப்படுகிறது. இது மன்னரின் உத்தரவு" என்றார். இது மட்டுமா? இதுவரை உங்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வாடகையும் திருப்பித் தரப்படும்" என்றபோது நான் ஆச்சரியத்தில் திக்குமுக்காடிப் போனேன். காரணம், மன்னரின் இந்த உத்தரவின் பேரில் அரசாங்க கஜானாவிலிருந்து திருப்பித் தரப்பட வேண்டிய பணம் எவ்வளவு தெரியுமா? சுமார் ஒன்பது லட்ச ரூபாய்!

விஷயம் இத்துடன் முடியவில்லை. மன்னர் என்னை கௌரவிக்கும் விதமாக, அரண்மனையில் எனக்கும், என் குழுவினருக்கும் ஒரு விருந்து அளிக்க விரும்புவதாகத் தகவல் அனுப்பினார். நானும் அவரது அழைப்பை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டேன். குவைத் நாட்டில் ஒரு இந்தியரை கௌரவப்படுத்துகிற ஒரு நிகழ்ச்சி என்றால், அதில் குவைத் நாட்டுக்கான இந்தியத் தூதரும் கலந்து கொள்ளுவதுதானே முறை? ஆனால், அரண்மனையிலிருந்து அப்போது, குவைத்தில் இந்தியத் தூதராக இருந்த ஜமால் என்கிற அதிகாரிக்கு அழைப்பு அனுப்பப்படவில்லை. அவர் என்னிடம் இது பற்றிக் குறைபட்டுக் கொண்டார். தமக்கும், அரண்மனையிலிருந்து அழைப்பு விடுக்க ஏற்பாடு செய்ய முடியுமா?" என்று கேட்டார். நான் இதுபற்றி அரண்மனை அதிகாரிகளுடன் பேசிய போது, 'இது மன்னர் அளிக்கிற விருந்து. எனவே, தூதரக அதிகாரி கலந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. எனவே அழைப்பு அனுப்பப்படவில்லை' என்று கூறி விட்டனர்.

விருந்து நாளன்று மன்னரின் அரண்மனைக்கு நான், என் மனைவி, என் குழு உறுப்பினர்கள் என்று எல்லோரும் சென்றோம். பெரிய ஹால். எட்டு பேர் அமர்ந்து சாப்பிடக்கூடிய அளவுக்கு பிரம்மாண்டமான டைனிங் டேபிள்கள், வேலைபாடு அமைந்த பெரிய நாற்காலிகள், அலங்கார விளக்குகள் என்று கனஜோராக விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சாப்பிட உட்கார்ந்த எனக்குப் பெரும் அதிர்ச்சி! எல்லாமே அசைவ உணவுகள்தான்! நானும் என் மனைவியும் சுத்த சைவம்! தலையைத் திருப்பினால், அடுத்த டேபிளில், பதப்படுத்தப்பட்ட கோழி, ஆடு... இன்ன பிற. எனக்கும், என் மனைவிக்கும் குமட்டிக்கொண்டு வந்தது. மன்னர் முன்னிலையில், இந்த இக்கட்டான சூழ்நிலையினை எப்படிச் சமாளிப்பது என்று ஸ்தம்பித்துப் போனேன்!

சில விநாடிகளில் சுதாரித்துக்கொண்டு, மெதுவாக, மன்னரிடம் "இத்தனை ஐட்டங்கள் செய்யப்பட்டிருந்தாலும், இதில் எதையும் நான் சாப்பிட முடியாத நிலையில் இருக்கிறேன். காரணம் நான் சுத்த சைவம்!" என்றேன். மன்னரும் மிகவும் தர்ம சங்கடமாகவே உணர்ந்தார். சாப்பிட உட்கார்ந்த பின், மறுபடி சைவ உணவு சமைத்துப் பரிமாறுவது என்பது சீக்கிரத்தில் முடியும் வேலை இல்லையே! நானே ஒரு ஆலோசனையும் சொன்னேன். "பழ வகைகளை எங்களுக்குச் சாப்பிடக் கொடுங்கள். அது போதும்" என்றேன். அதன்படி வாழைப் பழம், அன்னாசி, ஆப்பிள் என்று விதம் விதமான பழங்களை அழகாக நறுக்கித் தட்டுகளில் போட்டு எடுத்துக்கொண்டு வந்து எங்களுக்குச் சாப்பிடக் கொடுத்தார்கள். ஒருவழியாக சாப்பிட்டு முடித்தோம்.

விருந்துக்குப் பின், மிகவும் விலை உயர்ந்த வைர நெக்லஸ் ஒன்றை என்னிடம் கொடுத்து, "இது உங்கள் மனைவிக்கு என் பரிசு" என்றார். ஆனால் நான் "மன்னிக்க வேண்டும் மன்னரே! உங்கள் விருந்து எங்களுக்கு அளிக்கப்பட்ட பெரும் அங்கீகாரம். அதற்கு மேலும் இதுபோன்ற பரிசுப்



# மேஜிக் நிபுணர் கே. லால்

பரிசுகளையும்விட, உங்கள் மனதில் நீங்காமல், நிரந்தரமான இடம் கிடைப்பதையே பெரிய கௌரவமாக நினைக்கிறேன்'' என்றதும், ஓரளவு சமாதானமடைந்தார் குவைத் மன்னர்.

அப்படியும் விடாமல், என் குழுவினர் ஒவ்வொருவருக்கும் சுமார் பதினைந்தாயிரம் ரூபாய் அளவுக்கு ரொக்கப் பரிசு அளித்தார். என்னையும் கட்டாயப்படுத்தி, கைக் கடிகாரம் கொடுத்தார். தவிர, அவருடன் கூட்டாக இணைந்து, இந்தியாவில் தொழில் தொடங்க முழு ஒத்துழைப்புத் தரவும் முன் வந்தார். அதன்படி, சிறிய கார் உற்பத்தி செய்யும் திட்டம் உருவானது என்றாலும், அதே காலகட்டத்தில் இந்திராஜியின் மகன் சஞ்சய் காந்தியும், சிறிய கார் (மாருதி) தயாரிப்புப் பணியில் ஈடுபட்டிருந்ததால், அரசு தரப்பிலிருந்து, எங்களுக்குச் சரியானபடி ஒத்துழைப்புக் கிடைக்கவில்லை. திட்டம் கைவிடப்பட்டது.

மாருதி கார் திட்டத்தின் காரணமாக சிறிய கார் தயாரிக்கும் திட்டம் காணாமல் போனது என்பதற்காக, நான் மேஜிக் ஷோவில் பழி தீர்த்துக் கொள்ளுகிறேன். (எப்படித் தெரியுமா?) மேடையில், பார்வையாளர்கள் முன்னால் ஒரு மாருதி காரை நிறுத்தி, கண்ணிமைக்கும் நேரத்தில் அதை மறையச் செய்து விடுகிறேன்!

பொருள்களை வாங்குவது என்பது என்னைப் பொறுத்தவரை நியாயமானது இல்லை. எனவே, தயவு செய்து, இந்த நெக்லஸைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்'' என்றேன் மன்னரிடம்.

அதைத் தொடர்ந்து நான் அளித்த விளக்கமே, அரசரின் கோபத்தைத் தணித்தது. ''நான் ஒரு கலைஞன். உங்களைப் போன்ற பெரும்புள்ளிகளின் பாராட்டு வார்த்தைகள் தான், எங்களுக்கு உற்சாகமூட்டும் டானிக். எனவே, உங்கள் பாராட்டுக்களையே நான் பெரும் கௌரவமாகக் கருதுகிறேன். விலையுயர்ந்த பரிசுகளை நீங்கள் பலருக்கும் அளித்திருப்பீர்கள். நான் இந்தப் பரிசை வாங்கிக் கொண்டால், நீங்கள் அத்துடன் என்னை மறந்து விடுவீர்கள். ஆனால், நான் இந்தப் பரிசை ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், உங்களிடமிருந்து பரிசினை வாங்கிக் கொள்ள மறுத்துவிட்ட இந்த மேஜிக் கலைஞர் லாலை, நீங்கள் ஆயுசுக்கும் மறக்க மாட்டீர்கள். எனக்கு விலையுயர்ந்த வேறு எந்தப்

என்னுடைய மாயாஜால நிகழ்ச்சியில் 'வாட்டர் ஆஃப் இந்தியா' என்று ஓர் ஐட்டம் இடம் பெறும். சிறு குடம்போல ஒரு பாத்திரம் இருக்கும். அதனுள்ளே, இந்தியாவின் பல்வேறு மாநிலங்களிலிருந்தும் கொண்டு வரப்பட்ட தண்ணீர் என்று சொல்லி சிறு குப்பிகளிலிருந்து தண்ணீரை அந்த குடத்துக்குள் ஊற்றுவேன். பின்னர் 'இந்தியாவில் பல தரப்பட்ட கலாசாரம் கொண்ட பல்வேறு மாநிலங்கள் உண்டு என்றாலும், நாம் அனைவரும் இந்தியர்கள் தான்' என்று சொல்லி அந்தக் குடத்தைக் கவிழ்த்தால் அதிலிருக்கும் தண்ணீர் எல்லாம் கொட்டிவிடும். அதன்பிறகு, 'வாட்டர் அஃப் இந்தியா' என்று சொன்னபடியே மறுபடி குடத்தைக் கவிழ்த்தால், மறுபடியும் தண்ணீர் கொட்டும். இப்படி, மறுபடி மறுபடியும் குடத்தை சாய்த்துக்கொண்டே இருக்க தண்ணீர் மீண்டும் மீண்டும்

கொட்டிக் கொண்டே இருக்கும். இது பல மேஜிக் நிபுணர்களும் செய்து காட்டும் பிரபலமான மேஜிக் ஐட்டங்களுள் ஒன்று.

பல்வேறு நாடுகளுக்கும் சென்றபோது கூட நான் இந்த 'வாட்டர் அஃப் இந்தியா' நிகழ்ச்சியைச் செய்து காட்டியிருக்கிறேன். எல்லோருமே மிகவும் ரசித்துப் பாராட்டி யிருக்கிறார்கள்.

ஒருமுறை பஹ்ரைன் நாட்டுக்குப் போனோம். அங்கே பதினைந்து நாட்களுக்கு நிகழ்ச்சி ஏற்பாடாகி இருந்தது.

நாங்கள் பஹ்ரைன் போய் இறங்கி, நாலைந்து நாட்கள் நிகழ்ச்சி நடந்திருக்கும். வாட்டர் ஆஃப் இந்தியா ஐட்டம் மிகவும் பிரபலமாகி விட்டது. சிறுவர்கள்கூட அதை அடிக்கடி உச்சரிக்க ஆரம்பித்தனர். பஹ்ரைன் நாட்டு மன்னருக்கு இதுபற்றி தவறான அபிப்ராயம் ஏற்படும்படி யாரோ புகார் செய்திருக்கிறார்கள். அதன் விளைவை நான் விரைவிலேயே சந்திக்க வேண்டியிருந்தது.

'வாட்டர் ஆஃப் இந்தியா' என்று இனி சொல்லாமல், அந்த குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கு, 'வாட்டர் ஆஃப் பஹ்ரைன் என்றுதான் பெயரிட்டுச் சொல்ல வேண்டும்' என்று மன்னர் உத்தரவிட்டிருப்பதாக எனக்குச் சொல்லப்பட்டது. எனக்கு ஒன்றும் புரியவில்லை. அன்றுமாலை மேஜிக் ஷோ முடிந்தவுடன், நிகழ்ச்சிக்கு வந்திருந்த சில முக்கியமான இந்தியர்களை, மட்டும் அழைத்து ஒரு ரகசிய ஆலோசனைக் கூட்டம் நடத்தினேன்.

பஹ்ரைன் இந்தியர்கள், அந்நாட்டு மன்னர் ரொம்பக் கோபக்காரர் என்று சொன்னார்கள். ஒருவர், இதற்கு முன்பு, பஹ்ரைனில் மல்யுத்தம் நடத்த வந்திருந்த ஆறு வீரர்களை, மன்னர் தமக்கென்று பிரத்யேகமாக தமது அரண்மனையில் மல்யுத்தச் சண்டை போட்டுக் காட்டும்படி சொன்ன போது, அவர்கள் மறுத்து விட்டதால், மன்னர் அந்த ஆறு மல்யுத்த வீரர்களையும் கைது செய்ய உத்தரவிட்டதைப் பற்றிச் சொல்லி, என்னை எச்சரித்தார்கள். அப்போது, ஒரு சர்தார்ஜி - அவர் விமான நிலையத்தில் பொறுப்பான பதவியில் இருப்பவர், "உங்களுடைய மேஜிக் ஐட்டத்துக்கு, 'வாட்டர் ஆஃப் பஹ்ரைன்' என்று பெயர் மாற்றம் செய்யச் சம்மதிக்கிறீர்களா?" என்று கேட்டார். நான் எனக்குத் துளியும் சம்மதம் கிடையாதென்று சொன்னேன். "அப்படி

யென்றால், மன்னர் உங்களைக் கைது செய்து, சிறையில் அடைக்க உத்தரவிடுவார் என்று நிச்சயமாகச் சொல்லி விடலாம். எனவே, கைதாகாமல் நீங்கள் தப்பிக்க ஒரே வழிதான் இருக்கிறது'' என்றார்.

''என்ன வழி அது?'' என்று நான் சஸ்பென்ஸ் தாங்க முடியாமல் கேட்டேன்.

''இன்று இரவே நீங்கள் இங்கேயிருந்து புறப்பட்டு, இந்தியா சென்று விடுவது தான் ஒரே வழி'' என்றார் அந்த சர்தார்ஜி.

"என் குழுவைச் சேர்ந்த அனைவரையும் அழைத்துக்கொண்டு, இன்று இரவே எப்படிப் புறப்பட்டுச் செல்ல முடியும்?"

''எல்லோரும் புறப்பட்டுச் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. நீங்களும் உங்கள் மனைவியும் மட்டும் புறப்பட்டுச் சென்றால் போதும். இன்று இரவு, இரண்டு மணிக்கு, லண்டனிலிருந்து மும்பை செல்லும் விமானம் ஒன்று இருக்கிறது. எப்படியாவது அதில் உங்களை நான் இந்தியாவுக்கு அனுப்பி வைத்து விடுகிறேன். நீங்கள் புறப்பட்டுச் சென்று விட்டால், மற்றவர்களை அனுப்பி வைப்பது ஒன்றும் கஷ்டமில்லை. அதை நான் கவனித்துக் கொள்ளுகிறேன்'' என்றார்.

சொன்னபடியே இரவு இரண்டு மணி விமானத்தில் எனக்கும், என் மனைவிக்கும் இரண்டு டிக்கெட்களுக்கு வழி செய்தார். எங்கள் பெட்டிகள், மற்றவை என்று ஒன்றும் எடுத்துக் கொள்ளாமல் இரவோடு இரவாக விமானம் ஏறி காலையில் மும்பை வந்து இறங்கிவிட்டோம்.

கஸ்டம்ஸ் அதிகாரிகள், என்னை அடையாளம் தெரிந்து கொண்டு, என் லக்கேஜ் எங்கே என்று கேட்டனர். நான் என் பஹ்ரைன் அனுபவத்தைச் சொன்னேன்.

பஹ்ரைனில், நாங்கள் எங்களுக்கும், நண்பர்கள், உறவினர்களுக்கும் என்று ஏராளமான விலை உயர்ந்த பொருள்களை வாங்கி வைத்திருந்தோம். ஆனால் எதிர்பாராத சூழ்நிலையில் எல்லாவற்றையும் விட்டு விட்டுப் புறப்பட வேண்டியதாகி விட்டது.

நாங்கள் பத்திரமாக ஊர் வந்து சேர்ந்து விட்டோம். ஆனால், பஹ்ரைனில் இருந்த எங்கள் குழுவினரும், நாங்கள் பார்த்துப் பார்த்து வாங்கிய பொருள்களும்...?

(அடுத்த வாரம்)

● சு. சாந்தி, காட்பாடி.

? ஜெ. எந்த விஷயத்திலாவது மாறி விட்டதாக நீங்கள் கருதுகிறீர்களா?

! திருவண்ணாமலையில் தேர்தல் பிரசாரத்தின்போது தங்க ஒரு லாட்ஜ் ரூமை ஒரு லட்ச ரூபாய்ச் செலவில் அவரது கட்சியினர் புதுப்பித்தார்கள் என்பதைப் பார்க்கும்போது உங்கள் கேள்விக்குப் பதில் கிடைத்துவிடவில்லையா! ஆனால் ஆச்சர்யம் என்னவெனில், நமது மக்களில் பலருக்கு அந்த ஆடம்பரமே பிரமிப்பை ஏற்படுத்தி வாக்குகளாக மாற்றி விடுகிறது! ராஜ தர்பாருக்கும் ஜனநாயகத்துக்கும் ஒத்துவராது என்பதை மக்கள் இன்னும் புரிந்து கொள்ளக் காணோம். பழைய விக்டோரியா மகாராணி காலத்திலேயே இருக்கிறார்கள் போலும்.

# சோனியா பல்டி அடித்தது ஏன்...?

● இ. ராஜேந்திரன், வேலப்பநாயக்கன் வலசு.

? அருந்ததி ராய் மேதா பட்கருடன் இணைந்திருப்பது பற்றி...?

! இதுதாங்க நிஜமான கொள்கைக் கூட்டணி!

● கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர். ❑

? தேர்தலில் பி.ஜே.பி. ஜெயித்தால் மக்கள் அக்கட்சியை மதவாதக் கட்சியாகப் பார்க்கவில்லை என்றும் காங்கிரஸ் ஜெயித்தால் மக்கள் சோனியாவை ஒரு வெளிநாட்டவராகப் பார்க்கவில்லையென்றும் கொள்ளலாமா?

! அப்படி எண்ணுவது மாபெரும் தவறு. இந்தத் தேர்தலில் ஸ்திரத்தன்மை, ஆட்சிக் கவிழ்ப்பு, கார்கில், விலைவாசி, லஞ்ச ஊழல் போன்ற வேறு பல பிரச்னைகளும் அலசப்படுகின்றன. ஒரு கட்சி அல்லது வேட்பாளரின் பிளஸ் பாயின்டுகளுக்காகப் போடப்படும் வோட்டு, மைனஸ் பாயின்டுகளுக்கான அங்கீகாரம் என்று முடிவு கட்டி விடக் கூடாது. ஒவ்வொரு வேட்பாளரும் தமக்கு எதிராக விழுந்த வோட்டுகள் எத்தனை, ஏன் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

● புளியரை கணேசன், சென்னை - 30.

? இருக்கிற கோஷ்டிகள் போதாதென்று தமிழக காங்கிரஸில் புது அணி ஒன்று முளைத்திருப்பது பற்றி...?

! காங்கிரஸை 'காணோம்'கிரஸ் ஆக்க மாற்றுக் கட்சிகளே தேவையில்லை. அவர்களே 'கரசேவை' விற்பன்னர்கள்தான்!

● எஸ். ஜெயகாந்தன், பு. புளியம்பட்டி.

? பிரதமர் வாஜ்பாய், உள்துறை அமைச்சர் அத்வானி, காங்கிரஸ் தலைவர் சோனியா உள்ளிட்ட தலைவர்களை தேர்தல் பிரசாரத்தின் போது மனிதவெடிகுண்டு மூலம் கொலை செய்ய பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ. சதி செய்துள்ளதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதே?

! சதி அம்பலமானது நமது உளவுத் துறையின் தயார் நிலையை உணர்த்துகிறது. கார்கில் தோல்வியைத் தொடர்ந்து பாகிஸ்தானின் வாலாட்டல் அதிகரிக்கும் என்று சரியாக எதிர்பார்த்துச் செயல்பட்டிருக்கிறார்கள். தொடர்ந்து இதே விழிப்புணர்வும் சாமர்த்தியமும் தேவை. சதித் திட்டத்தில் ஈடுபட்டிருப்பவர் கைதாகவில்லை என்பது கவனிக்கத்தக்கது; கவலை அளிப்பது.

● கே. ரமேஷ்பாபு, அம்மாப்பேட்டை.

? சிறந்த, திறமையான பாராளுமன்றப் பேச்சாளர் என்று வைகோவைப் பாராட்டி முதல்வர் பேசியுள்ளாரே?

! உண்மைதானே! தமது பாசறையில் பயின்றவர் என்பதால் கலைஞர் அதற்குப் பெருமையும் கொள்ளலாம்தானே!

● க. சிவமணி, வண்ணாமடை (பாலக்காடு).

? இளையதலைமுறையின் கர்நாடக சங்கீத ஞானம் பாராட்டும்படி உள்ளதா?

! கச்சேரிகளுக்கு வரும் இளைஞர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. இந்த ரசனை மேலும் அதிகரிக்க தமிழ்ப் பாடல்



• பெருமிதம்...



• ...கொள்ளலாம்!



• மாறவில்லை!



• பல்டி!



• அபத்தப் பேச்சு!

களை நமது இளம் கலைஞர்கள் அதிகம் பாடுவது நல்ல பலன் அளிக்கும். இளம் கலைஞர்கள் பலர் இன்று கொடிகட்டிப் பறப்பதைக் காண இசை ஞானமும் அதிகரித்துப் பாராட்டும்படி உள்ளது என்று தயங்காமல் கூறலாம்.

● வி. பிரசன்னகிருஷ்ணன், சென்னை – 17.

? **பிரமோத் மகாஜன் பெண்களை இழிவு படுத்திப் பேசுவதாகக் கூறி ஜெயந்தி நடராஜன் கடுமையாகத் தாக்கிப் பேசியுள்ளாரே?**

! ஜெயந்தி நடராஜன் தாக்கியதில் நியாயம் இருக்கிறது. பிரதமரும் கண்ணியத்துடன் பிரசாரம் செய்யும்படி அனைவரையும் வற்புறுத்தியிருக்கிறார். பிரமோத் மகாஜன், தவறுக்கு வருந்துவதாகக் கூறாமல், பத்திரிகைகள் வேண்டுமென்றே தப்புச் செய்தி போட்டுத் தம்மைச் சிலுவையில் அறைவதாகப் பேசுவதுதான் அபத்தமாக இருக்கிறது.

● சூர்யா, லால்புரம்.

? **பெரும்பாலான பத்திரிகைகளில், அ.தி.மு.க. வேட்பாளர்களின் முக்கிய பலம் இரட்டை இலைச் சின்னம்தான் என குறிப்பிட்டுள்ளதே?**

! இது சரியான கணிப்பு. எம்.ஜி.ஆர். என்கிற மந்திர சக்தியுடன் தொடர்புபடுத்தப்படுவதால் அந்தச் சின்னத்துக்கு பலம் மிக அதிகம். புதிய வாக்காளர்களுக்குக் கூட பழக்கமான சின்னம். அதனாலேயே மற்ற சின்னத்துக்காரர்கள் கூடுதலாக உழைக்க வேண்டும். பிரச்னைகளைக் கவனியாமல், சின்னத்துக்கு விசுவாசமாக இருக்கும் பாமர வாக்காளர்கள் நமது நாட்டில் ஏராளம்! ஏராளம்!

● ஆர். கருணாநிதி, மதுரை – 16.

? **யூகத்தின் அடிப்படையில் செய்தி வெளியிடக்கூடாது என சோனியா கூறியுள்ளது பற்றி...?**

! பிரதமர் அலுவலகத்தில் ஊழல் என்ற செய்தியை அவர் எந்த அடிப்படையில் வெளியிட்டார்? என்று வாஜ்பாய் என்ன, சிந்திக்கத் தெரிந்த வாக்காளர்கள் கேட்க மாட்டார்களா?

● அலமேலு சீனிவாசன், விஷ்ணம்பேட்டை.

? **வரும் தேர்தலுக்குப் பிறகாவது மத்தியில் குழப்பமில்லாத ஒரு நிலை உருவாகுமா?**

! உருவாகும் – மக்கள் குழம்பாமல் வாக்களித்தால்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? **படைப்பாளிக்கும் படிப்பாளிக்கும் உள்ள உறவு எப்படிப்பட்டதுங்க...?**

! ஏன் பிரிக்கறீங்க...? படிப்பாளியாக இல்லாவிட்டால் படைப்பாளியாக நீடிக்க முடியாதே!

● ஜி. நீலா, மன்னார்குடி.

? **ஜெயா டி.வி.யில் முதல் எழுத்தையும் கடைசி எழுத்தையும் இரட்டை இலைச் சின்னம் அணைத்திருக்கிறதே...?**

! ஊம்! "சர்வ வல்லமை மிக்க" தேர்தல் கமிஷனால் என்ன பண்ண முடிந்தது?

● எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? **முதல் தடவையிலேயே டெண்டுல்கர் கோட்டை விட்டுவிட்டாரே?**



• தோற்க வைத்த ஃபீல்டிங்!

! கேப்டன் பதவி டெண்டுல்கருக்கு லாயக்குப் படாது என்ற கருத்து ஒருபுறமிருக்க, நமது சொதப்பலான ஃபீல்டிங் முக்கிய காரணம். எல்லைக்கோட்டில் மரம் முறிவது போல் விழுந்து பந்தைத் தடுக்கும் ஜெயசூர்யாவைப் பார்த்தாவது புத்தி வரக்கூடாதா?

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? **'கூட்டணி ஆட்சி நாட்டுக்குக் கேடு' என்ற சோனியா காந்தி, இப்போது 'கூட்டணி அரசு அமைக்கவும் காங்கிரஸ் தயார்' என்று பல்டி அடித்தது ஏன்?**

! உங்கள் கேள்வி எங்களுக்கு வந்து சேர்வதற்குள் பல்டியிலிருந்து மீண்டும் பல்டி அடித்துவிட்டாரே! இன்னும் தேர்தல் முடிவதற்குள் எத்தனை வித்தைகளோ!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கே. ஆர். உபேந்திரன்
76, பிலோமினா நகர் முதல் தெரு,
தஞ்சாவூர் - 613 006.

சித்திரம் என்றால் எனக்கு உயிர், சித்திரத்தின் சிறப்பு வேறெதற்குமில்லை என்பது தான் என் முடிவான அபிப்பிராயம். இதற்கு விரோதமாக யாரேனும் பேச முன் வந்தால் அவர்களுடன் ஒரு கை பார்க்கத் தயார். ஆஹா! சித்திரம்!! சித்திரம்!!! நேயர்களே! சித்திரத்தின் மகிமையை என்ன வென்று இயம்புவேன்? இப்பொழுது சித்திரத்தின் பெருமை உங்களுக்கு நன்கு விளங்கி விட்டதல்லவா? ஆச்சரியக்குறி ஏழும், கேள்விக்குறி ஒன்றும் சேர்ந்து உங்களுக்குச் சித்திரத்தின் சிறப்பை உணர்த்தா விட்டால், இனி எவ்வளவுதான் எடுத்துச் சொன்னாலும் உங்களுக்கு அது விளங்கப்போவதில்லை.

* * *

நான் பள்ளிக் கூடத்தில் படித்தபோது, சித்திர உபாத்தியாயரின் செல்லப் பிள்ளையாயிருந்தேன். ஏன் என்றால், சித்திர வகுப்புக்கு மணி அடித்ததோ இல்லையோ, எனக்கு எங்கிருந்தோ தலைவலி, வயிற்று வலி, அல்லது வேறு ஏதேனும் ஒரு வலி வந்து விடும். உபாத்தியாயருக்கு இதில் பரம சந்தோஷம். "ஒரு சனியன் ஒழிந்தது" என்று விடை கொடுப்பார். எனக்கும் சந்தோஷந்தான், ஏனெனில் அவருடைய வகுப்பில் மட்டும் இருந்திருந்தால் சித்திரத்தில் எனக்கு இப்போதுள்ள பேரன்பில் ஆயிரத்தில் ஒரு பங்கேனும் மிஞ்சியிருக்கு மென்று சொல்ல முடியாது.

* * *

இந்த நிலைமையில், கொஞ்ச நாளைக்கு முன் ஔவை மூதாட்டியாரின் பாடல்கள் சிலவற்றைப் படிக்க நேர்ந்தது. "சித்திரமும் கைப் பழக்கம்" என்று அந்தப் பாட்டி கூறியிருப்பதைப் படித்தபோது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆகா! இந்த இரகசியம் இத்தனை நாள் தெரியாமல் போயிற்றே என்று ஒரு தடவை துள்ளிக் குதித்தேன். சித்திரங்களைப் பார்த்துச் சந்தோஷப் படுவது மட்டும் போதுமா? நாமேயல்லவா அக்கலையில் தேர்ச்சியடைய வேண்டும்? வழியோ ஔவையார் காட்டியிருக்கிறார். இன்னும் என்ன சந்தேகம்? உடனே காகிதமும் பென்ஸிலும் கையிலெடுத்துக் கொண்டேன்.

* * *

மிக விரைவிலேயே ஔவையின் மொழி எவ்வளவு உண்மையென்பது நன்கு விளங்கிற்று. "சித்திரமும் கைப் பழக்கம்" என்று சொன்ன வாயில் சர்க்கரையைப் போட வேண்டும். நான் தீட்டிய சித்திரங்களைப் பார்த்து எனக்கு அளவிலாத குதூகலம் உண்டாயிற்று. அவைகளைக் கண்காட்சி சாலைக்கு அனுப்பலாமா வென்று முதலில் எண்ணினேன். நல்ல வேளையாய் அந்தத் துர்யோசனையை எதிர்த்து வெற்றி கொண்டேன். கண்காட்சிசாலைக்கு அனுப்பினால் கண்டவர்களெல்லாம் பார்ப்பார்கள். ரஸிகனுடைய கைத் திறமையை ரஸிகர்களல்லவா பார்த்து அனுபவிக்க வேண்டும்? ஆகவே 'விகடன்' நேயர்களுக்குத்தான் இந்தப் பாக்கியத்தை அளிப்பது என்று உறுதி கொண்டேன்.

# சித்திரக் கொத்து

* * *

ஆனால் ஒரு முக்கிய விஷயத்தை மனத்தில் நன்றாய்ப் பதித்துக் கொள்ளுங்கள். அதாவது பின்வரும் சித்திரங்களை மட்டும் தனியாய்ப் பார்த்து விட்டுக் குறைபாடு சொல்லக் கூடாது. அந்தந்தச் சித்திரத்துடன் சேர்ந்த விஷயத்தையும் சேர்த்துப் படிக்க வேண்டும். அப்போதுதான் அவைகளின் மேன்மையை நன்குணர்ந்து கொள்வீர்கள். ஏனென்றால், சித்திரம் எழுதுவதற்குப் பயிற்சி எப்படித் தேவையோ, அப்படியே சித்திரத்தின் அழகை உணர்ந்து அனுபவிப்பதற்கும் பயிற்சி தேவை. தற்காலத்தின் பிரபல ஓவியக் கலைஞர்களின் சித்திரங்களைச் (முக்கியமாக, வங்க

# – அமரர் கல்கி தீட்டியது



நாட்டார் சிலரின் சித்திரங்களை) சாதாரண மனிதர்கள் பார்த்தால் ஒன்றும் விளங்காமல் விழிப்பார்கள். "இதென்ன? இந்தப் பெண்ணின் கண் ஏன் மூடியிருக்கிறது? இவளுடைய இடுப்பு ஏன் ஒடிந்து விட்டது? இவன் மனிதனா? கற்சிலையா? இது மாடா? பன்றியா?" என்று இது போன்று அபஸ்மாரமான கேள்விகள் கேட்பார்கள். ஆனால் தெரிந்தவர்கள், பயிற்சி பெற்றவர்கள் இதே சித்திரங்களைப் பார்த்தால் "ஆகா என்ன கலை? என்ன மனோபாவம்? என்ன சௌந்தர்யம்!" என்று பூரித்துப் போவார்கள். ஆகவே, உங்களில் சித்திரம் பார்க்கப் பயிற்சியில்லாதவர்கள், அந்தச் சித்திரத்துடன் சேர்ந்த விஷயத்தைப் படித்துவிட்டுப் பிறகு சித்திரத்தைப் பாருங்கள்.

* * *



இது ஒரு திமிங்கலம். உங்களுள் 100க்கு 99 பேர் திமிங்கலம் பார்த்திருக்க மாட்டீர்கள். ஆகையால் இது திமிங்கலம் என்று சொல்ல வேண்டியதாயிருக்கிறது. உண்மையில் நானும் திமிங்கலம் பார்த்ததில்லை. ஆகையினால்தான் முதலில் திமிங்கலத்தை எடுத்துக் கொண்டேன். பார்க்காத பொருளைச் சுலபமாய் எழுதிவிடலாமல்லவா? யாரும் குறை சொல்ல இடமிராது. உதாரணமாகத் திமிங்கலத்தின் முதுகில் சிறகு உண்டா என்பது எனக்கு ஞாபகமில்லை. இருந்தாலும் போட்டு வைத்தேன். உங்களுக்கும் இது தெரியாதாகையால் கவலை கிடையாது. அந்தச் சிறகு போட்டதும் ஒரு அழகாய்த்தான் இருக்கிறது இல்லையா?

* * *



இதுவும் திமிங்கலந்தான் என்பதைச் சொல்லாமலே அறிந்து கொண்டீர்கள். ஆனால் அந்தப் புதிய வஸ்து என்ன? அது சொல்லித்தான் ஆக வேண்டும். திமிங்கல வேட்டையாடுவோர் உபயோகிக்கும் கருவி அது. நீண்ட கயிறு கட்டி ஒரு சூலாயுதத்தை வெகு தூரத்திலிருந்தபடி திமிங்கலத்தின் விலாப் பக்கம் எறிவார்கள். இவ்வாயுதம் திமிங்கலத்தின் விலாப்புறச் சதையை உள்ளே பொத்துக் கொண்டு போய் விடுமாதலால் அதன் முனை வெளியிலிருந்து பார்த்தால் தெரியாது. ஆனால் படத்தில் வெளியில் தெரியும்படி காட்டியிருக்கிறேன். தெரியாததைக் கூடத் தெரியும்படி செய்வதுதான் சித்திரக் கலைஞனின் சாமர்த்தியம்.

* * *

உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் சரம்-அசரம், அதாவது அசையும் பொருள் அசையாப் பொருள் என்று பிரிக்கப்பட்டிருக்கின்றன. "ஓவியங்கள் உயிர் பெற்றிருக்க வேண்டும்" என்று சமீபத்தில் எங்கேயோ படித்தேன். ஆகையால்தான் கேவலம் மரம், மட்டை, செடி, கொடி, ஆறு, மலை முதலிய அசையாப் பொருள்களை விடுத்து உயிர்ப் பிராணிகளை எடுத்துக் கொண்டேன். உயிர்ப்பிராணிகளை நீரில் வாழ்வன, நிலத்தில் வாழ்வன என்று பிரித்திருக்கிறார்கள். நீர் வாழும் பிராணி இப்போது எழுதியாகி விட்டது. நிலத்தில் வாழும் பிராணிகளில் பறப்பன நடப்பன என்று இரண்டு பிரிவுகள் உண்டு. முதலில் பறப்பனவற்றை எடுத்துக் கொள்வோம்.

* * *

இது என்ன பட்சி என்று உங்களுக்கு உடனே தெரியவில்லையல்லவா? சற்று நிதானமாக யோசித்துப் பாருங்கள். இது

வீட்டில் வளர்க்கும் பட்சிகளில் ஒன்று. காலையில் கொக்கரக்கோ என்று கத்தும். ஆமாம், கோழிதான்! சித்திரத்தில் கொஞ்சம் யோசித்துத்தான் கண்டுபிடிக்க வேண்டும்.





நெல்லு அல்லது வேறு தானியமணி ஒன்றைக் கண்டதும் திடீரென்று கொத்தித் தின்னும். இது எவ்வளவு இயற்கையாய் அமைந்திருக்கிறது பாருங்கள்!

* * *

பார்த்தவுடனே தெரிந்து போனால், அப்புறம் சித்திரத்துக்கும் நிஜக் கோழிக்கும் என்ன வித்தியாசம்? அதைவிட நிஜக் கோழியையே பார்த்து விடலாமே? நிற்க. இவ்வளவு அற்புதமாக இந்தக் கோழியை எப்படி எழுதினேன் என்று அறிய உங்களுக்கு ஆவல் உண்டாகலாம். இரகசியத்தைச் சொல்லி விடுகிறேன். பயிற்சி, பயிற்சி! பயிற்சிதான் இரகசியம்! "பல துறையிலும் கவனம் செலுத்தி மேம்புல் மேயக் கூடாது. ஒன்றிலேயே ஈடுபட்டு நிபுணத்துவம் பெற வேண்டும்" என்று ஒரு புத்தகத்தில் படித்தேன். ஆகவே கோழியிலேயே என் முழு கவனத்தையும் செலுத்தி நிபுணனானேன். பின்வரும் சித்திரங்களைப் பார்த்தீர்களானால் என்னுடைய நிபுணத்துவத்தைப் பற்றி உங்களுக்குச் சிறிதும் சந்தேகம் தோன்றாது.

* * *

இதுதான் நான் பயிற்சி பெற்ற விதம். கோழிக்கு மூக்குதான் பிரதானம். ஆகவே மூக்கு, மூக்கு, மூக்கு, மூக்கு எழுதியே பயிற்சி பெற வேண்டும். கவனம் செலுத்தி நூறு மூக்கு எழுதி விட்டால் அப்புறம் ஆயுள் முடியும் வரை மூக்கைப் பற்றிக் கவலை வேண்டியதில்லை. இப்படித்தான் ஒவ்வொன்றும்.

* * *

கோழி வரைவதில் நிபுணத்துவம் பெறுவதென்றால் இலேசில்லை. பல்வேறு சந்தர்ப்பங்களுக்குரிய பற்பல தோற்றங்களிலும் "கோழி எழுதிப் பழக வேண்டும். இந்தக் கோழி இரை தேடிக் கொண்டிருக்கிறது. அதன் வாய் பிளந்திருப்பதைப் பாருங்கள்.

* * *

இந்தக் கோழி முட்டையிட்டிருக்கிறது. அதனால் அதற்குக் கர்வம் தாங்கவில்லை. இந்த அற்புதச் சம்பவத்தை ஊருக்கெல்லாம் தெரிவித்துக் கொண்டிருக்கிறது. இது பெண் குலத்துக்கே உரிய இயற்கைக் குணம். 'தலைச்சன் பிள்ளை' பெற்ற இளம் பெண் ஒருத்தியுடன் சற்று நேரம் பேசிப் பாருங்கள். தன் அதிசய, அற்புத, அபூர்வ, அசாதாரண, தெய்வீகக் குழந்தையைப் பற்றியல்லாமல் வேறெதைப் பற்றியும் அவள் பேச மாட்டாள். இந்தப் பெட்டைக் கோழியும் அப்படித்தான். (கோழி சேவலா, பெட்டையா என்னும் சந்தேகம் யாருக்காவது இருந்திருந்தால், இப்பொழுது அதுவும் போயிருக்குமென்று நம்புகிறேன்.) இந்தப் பிராணியின் மனோபாவத்தை எப்படித் தத்ரூபமாய் படம்பிடித்துக் காட்டியிருக்கிறேன் பாருங்கள்! உயர்தர ஓவியக்காரர்களின் ஆற்றல் இதில்தான் நன்கு விளங்கும்.



* * *

இந்தக் கோழியின் படத்தில் காட்சி



ஒன்றுதான். கீழே, தான் கூவியது போதா தென்று இந்தக் கர்வம் பிடித்த பெட்டைக் கோழி தான் முட்டையிட்ட வைபவத்தைக் குட்டிச் சுவரின் மேலேறி வெட்ட வெளிச்ச மாக்க முயல்கிறது என்பதைச் சுட்டிச் சொல்ல வேண்டியதில்லை. (பாருங்கள்! கவிதை கூட வருகிறது. ஒரு கலையில் தேர்ந் தால் மற்றக் கலைகள் தானே வரும் என்று தெரியாமலா சொன்னார்கள்?) இந்த எட்டா வது படத்தில் கோழி ஏறக்குறையக் குட்டிச் சுவரின்மேல் ஏறி விட்டது.

• • •

இந்த நிலைமையில் அந்த முட்டையை அடைகாக்க வேண்டுமென்று நினைவு வந்தது. (சபாஷ்! அழகிய கதையாகவே அமைந்து வருகிறதல்லவா?) எலவே திரும்பிப் போய் அடை காக்கிறது. கிழே யிருப்பது கூடு. கோழிக்குக் கூடு கட்டத் தெரியுமாவென்று எனக்கு நிச்சயமாய்த் தெரியாது. இருந்தாலும் போட்டு வைத்தேன். என் பிரயாசையும் கோழியின் ஆசையும் வீண் போகவில்லை. குஞ்சு(கள்) வெளியே வந்தது(ன).



• • •

ஒரு முட்டையிலிருந்து ஒரு குஞ்சுதான் வருமா, இரண்டு மூன்று வருமா என்பது சந்தேகமாயிருக்கிறது. ஆகையால் இங்கே குஞ்சுபோட்டுக் காட்டாமலே விடுகிறேன். ஆனால் குஞ்சைப் பார்த்ததும் கோழியின் கர்வம் தலைக்கு மேல் போய் விட்டது. இந்தியச் சட்ட சபையில் புதிய வாணம் ஒன்று விட்ட அக்கிராசனர் வி.ஜே. படேலைவிட அதற்குப் பெருமை அதிகமாய் ஆகி விட்டது. குட்டிச் சுவர் போதாதென்று வீட்டுக் கூரை மேலேயே ஏறுகிறது பாருங் கள்!



• • •

இப்போது கோழி கூரைமேலிருந்து கிளம்பி ஆகாயத்திலேயே பறக்கத் தொடங்கி விட்டது. இதில் இன்னொரு



விசேஷம். ஒருபுறம் பார்த்தால் கோழி போல் காண்கிறது; மற்றொருபுறம் பார்த்தால் கொக் கைப் போல் காணப்படுகிறது. என்ன அற் புதம், பாருங்கள்! இந்த அற்புதம் பயிற்சியை மீறிய விஷயம்; இதற்கெல்லாம் இயற்கை ஆற்றல் வேண்டும். கோழியைப் போல் இருக்க வேண்டுமானால் பயிற்சி போதும். கோழி கொக்கைப் போல் விழுவதற்கு இயற்கை ஆற்றல் தேவை. பூர்வ ஜன்ம வாசனை என்றாலும் சரிதான். இதைத் தான் விட்ட குறை தொட்ட குறை என்பது. "சித்தி ரமும் கைப்பழக்கம்" என்னும் ஔவை வாக்கு இந்த விடத்தில் பொய்ப்படுகிறது.

• • •

பறவைகள் எழுதிக் கைதேர்ந்து விட்டபடியால் இனிமேல் மிருகங்களை ஒரு கை பார்க்கவேண்டும். இதோ, 12வது படத்தில் இருப்பது ஒரு வகை மான். அதன் தலையில் நீட்டிக் கொண்டிருப்பவை கொம்புகள்; இல்லை, காதுகள். இந்த விடத்தில் எனக்கே கொஞ்சம் சந்தேகமாயிருக் கிறது-ஆ! வந்து விட்டது. கொம்புக்குக் கொம்பு; காதுக்குக்காது; இரண்டுக்கும் பொதுவாய் வைத்துக் கொள்ளுங்கள். சித்தி ரத்திலும் இது விசித்திரமல்லவா? நிற்க, மானுக்கு வால் ஒரு மாதிரியாயுமிருக்கிறதே என்று நீங்கள் நினைக்கலாம். உண்மைதான். அந்த குறையை நானும் உணர்ந்திருக்கிறேன். ஒடிந்து போய் ஒட்ட வைத்தது போல் காணப்படுகிறது. ஆனாலும் பாதகமில்லை;



கொஞ்சம் நிமிர்த்திவிட்டால் சரியாய்ப் போய் விடும்.

* * *

நாலு கால் ஜந்துக்கள் விஷயத்தில் நான் இன்னும் பூரணத்தேர்ச்சி பெறவில்லை யென்பதை ஒப்புக் கொள்ள வேண்டியது தான். இருந்தாலும் இது புலியென்பதைத் தெரிந்து கொண்டிருப்பீர்கள். இதில் குறை பாடு கால்களில் இருக்கிறது. ஆனால் அது



என்ன என்பதுதான் நன்கு விளங்கவில்லை. புலி பாய்வது போல் காட்ட வேண்டுமென் பது என் எண்ணம். ஒரு வேளை முன்னங் கால் பின்னங்காலாகவும் பின்னங்கால் முன் னங்காலாகவும் தவறி அமைந்து விட்டன போலும். போனால் போகட்டும்; எப்படி யாவது காரியம் முடிந்தால் சரி.

* * *

பதினாலாவது படத்திலுள்ள பிராணி யைக் கழுதையென்று உங்களில் யாராவது



எண்ணினால், பெருந்தவறு செய்தவர் களாவீர்கள். கழுதை இப்படிப் பாய்ந்து ஓடுமா என்று நீங்களே சொல்லுங்கள். இந்தக் குதிரையில் ஒரு விசேஷம் என்ன வென்றால், முன்னங்கால்கள் பாய்ச்சலில் நிற்கின்றன; பின்னங்கால்கள் சும்மாயிருக் கின்றன, ஆகவே குதிரை நொடித்துக் கீழே விழும் தறுவாயிலிருக்கின்றது. "நம்மில் ஒற் றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே" என் னும் கவியின் வாக்குக்கு உதாரணமாக இதை அமைத்திருக்கிறேன். குதிரை வாலைப் பாருங்கள். ஆகா! என்ன நேர்த்தி! இந்த வால் ஒன்றுக்கு மட்டும் ஆயிரம் பொன் கொடுக்கலாமே?

* * *

மிருகங்கள் எல்லாவற்றிலும் சிங்கம் எழுதுவதுதான் மிகவும் சுலபம். ஏனென் றால் அதற்கு மூக்கு, கண், வாய் முதலியவை போட வேண்டிய அவசியமேயில்லை. எல் லாவற்றையும் பிடரி மயிர் மூடிக் கொண்டு



விடுகிறதல்லவா? இந்தச் சிங்கம் தற்போது தூங்கிக் கொண்டிருக்கிறது. அதை எழுப் பாமலே விட்டு மேலே செல்வோம். ஏனென் றால், ஏற்கெனவே பிரிட்டிஷ் சிங்கத்தைக் காந்தி தட்டி எழுப்பிவிட்டிருக்கிறார். ஒரு சமயத்தில் ஒரு சிங்கமே போதும். இந்தச் சிங்கம் தூங்கிக் கொண்டேயிருக்கட்டும்.

* * *

மிருகங்களை வேலை முடித்துவிட்ட படியால் இனி மேல் மனிதர்கள்தான் பாக்கியிருக் கிறார்கள். இந் தப் படத்திலுள் ளவர் ஆங்கிலோ இந்தியப் பத்திரிகை ஒன்றின் ஆசிரி யர்; வெள்ளைக் கார துரை. துரைகள்தான்



இப்படிக் காலைத் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு உட்காருவார்கள். இவர் இப்போது தம் பத்திரிகைக்குத் தலையங்கம் எழுதிக் கொண்டிருக்கிறார். காந்தியைத் திட்டுவதற்குப் போதிய வார்த்தைகள் அகப்படவில்லையாகையால் நடுவில் எழுதுவதை நிறுத்தி வாயில் பேனாவை வைத்துக் கொண்டு யோசிக்கிறார். புதிய திட்டு யாரேனும் கண்டு பிடித்து அவருக்குத் தெரிவித்தால் மிகவும் நன்றியுடையவராயிருப்பார்.

* * *

இவர் ஓர் இந்திய தேசியப் பத்திரிகையின் ஆசிரியர். இத்தனை காலமும் காங்கிரஸையும் காந்தியையும் பலமாகத் தாங்கி எழுதி வந்தவர். ஆனால் இப்போது இவர் பாடு 'டூலா'வில் வந்துவிட்டது. காந்தியையும், சட்ட மறுப்பையும், காங்கிரஸையும், கடன் மறுப்பையும், தாங்கி எழுதினால் சர்க்கார் கோபத்துக்கு ஆளாக நேரும்; வெள்ளைக்காரர் கொடுக்கும் விளம்பரப் பணத்தில் மண் விழுந்துவிடும். ஆனால் காங்கிரஸையும், காந்தியையும் தாக்கினாலோ ஜனங்களின் கோபத்துக்கு ஆளாக நேரிடும்; சந்தாத் தொகை குறைந்துவிடும். இத்தகைய நெருக்கடியான நிலைமையில் இவர் மரத்திலும் படாமல் மாங்காயிலும் படாமல் அப்படியும் சொல்லாமல் இப்படியும் சொல்லாமல், முன்னால் பார்த்தால் வாதியின் குதிரை பின்னால் பார்த்தால் பிரதிவாதியின் குதிரை என்று சொல்ல வேண்டியதாயிருக்கிறது. இத்தகைய அற்புதமான விளக்கெண்ணெய்த் தலையங்கம் ஒன்றை இப்போதுதான் இவர் எழுதி முடித்தார். ஆகையினால்தான் அவர் முகத்தில் இப்போது புன்னகை தாண்டவமாடுகிறது. சந்தோஷமாய் முடியும் இந்த கட்டத்திலே நானும் இந்த சித்திரக் கொத்தை முடித்து விடுகிறேன்.



**(ஆனந்த விகடன் – 14.3.30)**

# நடக்கணும்னா நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

குரு வக்ரமா இருக்கறதோட மட்டுமல்லாம, கேதுவும் புதனும் வேற உங்களுக்கு சாதகமா இருக்கும்போது வெளுத்து வாங்கறதை விட வேறென்ன வேலைங்க? துணிச்சலா எந்தக் காரியத்துல இறங்கினாலும் இப்ப உங்களுக்கு வெற்றி நிச்சயம்தான்னாலும் பெரியவங்ககிட்ட அபிப்பிராயம் கேட்காம எதையும் தொடங்காதீங்க. வீட்டுல சில விசேஷங்கள் நடக்கப் போகுதில்லையா? பணம் வேணுமே. இப்ப அநாவசிய செலவுகளைக் குறைச்சிக்கறது பின்னால உபயோகமா இருக்கும். ஆனாலும் ஜென்மராசியில சனி உலவறதால உடலுழைப்பு நிறைய இருக்கும்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

'எங்கிருந்தோ வந்தான்'னு சந்தோஷமா பாடப் போறீங்க பாருங்க. முன்ன பின்ன தெரியாத யாரோ ஒருத்தர் வலிய வந்து உங்களுக்கு செய்யப்போற ஒரு உதவி உங்களை ஓஹோன்னு உயர்த்தப் போகுது. எதுக்கும் கொஞ்சம் எச்சரிக்கையாகவும் இருக்க வேண்டியது அவசியம். மிகப் பெரிய திட்டங்கள் போடறப்ப, உங்க பிளானை ரகசியமா வெச்சுக்கங்க. ஏன்னா அனுகூல சத்ருக்கள் உங்களுக்கு ரொம்ப ஜாஸ்தி. பண விஷயத்துலேயும் கவனம் முக்கியம். கடந்த சில வாரமா, பணம் தண்ணியா செலவாகுது இல்லையா? கொஞ்சம் இழுத்துப் பிடிக்கப் பாருங்க. கடன் குடுக்கற பிசினஸே இப்ப வேணாம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

ஒம்பதுல நாலஞ்சு கிரகங்கள் உங்களுக்கு நிபந்தனையற்ற ஆதரவு தர்றதால, துணிஞ்சு நீங்க புது முயற்சிகள்ல இறங்கலாம். வெற்றி நிச்சயம். பெரிய மனுஷங்க தொடர்பு கிடைச்சி வளர்ச்சிப் பயிருக்கு உரமாகும். கவர்மெண்ட் ஸ்டாஃப்புங்களுக்கு பழைய பாக்கிகள் வசூலாகற நேரம் இது. எழுத்து, பத்திரிகைன்னு கலைச் சேவை செய்யறவங்களுக்கு மட்டும் மனச்சோர்வு அடையறாப்பல சில சம்பவங்கள் நடக்கும். தங்க நகை வியாபாரிகளுக்கும் பெண்களுக்கும் ஆதாயமான வாரம்னாலும் அதிக ஆசைப்பட்டு, நிறைவேறாத, ஏமாற்றமடையற வாய்ப்பும் உண்டு.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

சினிமாக்காரங்களுக்கு ஷோக்கான நேரங்க! புது வாய்ப்புகள், பண வரவுன்னு ஜமாய்க்கப் போறீங்க. ஆனா, இப்ப சோம்பல்தான் உங்க முதல் எதிரியா இருக்குது. எப்பவும் தூங்கணும் போல ஒரு ஃபீலிங் இருந்துட்டே இருக்கு பாருங்க! அதை விட்டொழிக்க வேண்டியது அவசியம். வீட்டுல சில சின்ன மனஸ்தாபங்கள் இருக்கும். மாமியார் மருமகள் உறவு அவ்ளோ சிலாக்கியமா இருக்காது. வீட்டுச் சண்டை வீதிக்கு வராம பார்த்துக்கங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கூட்டுத் தொழில் பண்றவங்க கொஞ்சம் கவனமா இருக்கணும். நண்பர்களை எவ்ளோ தூரம் நம்பறதுன்னு ஒரு கணக்கு வெச்சிக்கங்க. இப்ப உங்க டைம் நல்லாருக்குன்றது வாஸ்தவம்தான். அதுக்காக, சக்திக்கு மீறின செலவு செய்யறது, வாக்குறுதி கொடுக்கறது, கடன் தர்றது-இதெல்லாம் வேண்டாம். மேலதிகாரிகள்கிட்ட உஷாரா நடந்துக்காட்டா, சிக்கல் உண்டாகும். ஆபீஸ்ல, கெட்டபேர் வாங்கறாப்பல ஏதாவது வேலைல சொதப்புவீங்க, கவனமா இருங்க. சிலருக்கு வெளியூர் பயணம் இருக்கும். முடிஞ்சா தவிர்த்துடறது நல்லது.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

எதிர்ப்புகள் குறைந்து, நல்லதெல்லாம் நடக்கப் போவுது. முக்கியமா உங்க காதலுக்கு எதிர்ப்புத் தெரிவிச்ச பெற்றோர் இப்ப பச்சைக் கொடி காட்டுவாங்க. பிசினஸ்ல இருக்கறவங்களுக்கு புது ஒப்பந்தங்கள் வரும். பணப் பிரச்னை இருக்காது. உடல் நலம் சீராவே இருக்கும். சிலருக்கு உல்லாசப் பயண

யோகமும் இருக்கும். புதுசா கல்யாணம் ஆன வங்களுக்குக் குழந்தைப் பேறு ஏற்படும். சட்டத் துறைல உள்ளவங்க புகழடையற நேரம் இது.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

போற போக்குல சாமியார் ஆயிடு வீங்க போலிருக்குதே? பரவாயில்லை. ஆன்மிக நாட்டம் நல்லதுதான். அதுக்காக வீட்டை கவனிக்காம இருக்கலாமா? பாருங்க, உங்க சம் சாரத்துக்கு இப்ப உடல் நலம் கொஞ்சம் படுத்தப் போவுது. நீங்க பார்த்து கவனிச்சாத் தானே உண்டு? கடல் வாணிபம் செய்யறவங்க, மீனவர்கள் இவங்களுக்கெல்லாம் இது ஆதாய மான காலம். பணம் நிறைய வருதேன்னு ண்ட செலவு செய் யாம சேர்த்து வைக்க வேண்டியது முக் கியம். வெளி இடங் கள்ல சாப்பிட்டு வயித்தைக் கெடுத்துக் காம இருங்க.



**மகர ராசிக்காரரான ரஜினி துணிச்சலா எதையும் ஆரம்பிக்கலாமாம். வெற்றி நிச்சயமாம்!**



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

நீங்க ஒரு ஸ்போர்ட்ஸ் ஆசா மின்னா இந்த வாரம் எல்லா பந்தயங்கள் லேயும் வெற்றி உறுதி. ஆனா, கை கால்ல அடிபட சான்ஸ் இருக்கு. வயசானவங்களுக்கு ஆன்மிக டூர் போக வாய்ப்பு இருக்கு. பெண் களுக்குப் புடைவை, நகைன்னு வாங்கற யோகம். ஆனா, பேச்சு விஷயத்துல எச்சரிக் கையா இல்லாட்டி இப்ப பல சங்கடங்கள் உங்களுக்கு உண்டு. குறிப்பா, ஆபீஸ்ல அநா வசிய அரட்டை, அடுத்தவர் பத்தின விமர் சனங்கள் வேண்டாம். சக ஊழியர்கள்கிட்ட அன்பா பழக முயற்சி பண்ணுங்க. வெளியூர் மாறுதல் சிலருக்கு இருக்கலாம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்தி ராடம் முதல் பாதம் வரை)*

டைம் அவ்வளோ நல்லா இல்லை. எதுலயும் அகலக் கால் வைக்காம இருக்கறது நல்லது. புது முயற்சிகள் இப்ப வேணாம். யாரையும் மரியாதைக் குறைவா பேசாதீங்க. ரேஸ், லாட்டரி, சீட்டு எதுவும் இப்ப உங்களுக்குக் கை கொடுக்காது. பெண்களுக்கு பலவிதமான பிரச்னைகள் வரும். உடம்பு/மனசு ரெண்டுமே வருத்தும். வீட்டுல, அநாவசியமான பிரச்னைகளைக் கிளப்பிவிட்டு சண்டைக்கு வழி வகுக்காதீங்க. வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீரா கலாம். அதுவரைக்கும் வாயைத் திறக்காதீங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

ஜாலியான வாரம். காதல் கல் கண்டா இனிக்கும். ஒளிமயமான எதிர்காலத் துக்கு ஒரு ஜி.எஸ்.டி. ரோடே உங்களுக்காகத் திறந்திருக்கு! துணிச்சலா எதையும் ஆரம்பிங்க. வெற்றி நிச்சயம். எதிரிகள் ஓடி ஒளிவாங்க. வழக்குகள் ஏதும் இருந்தா, உங்களுக்கு சாதகமா தீர்ப்பாகும். சட்டம், காவல் துறையினருக்குப் பாராட்டும் பரிசும் கிடைக்கற வாரம் இது. வீடு, மனை வாங்கவும் சரியான நேரம். ஆனா, ரியல் எஸ்டேட்காரங்களுக்குக் கொஞ்சம் சங்கடமான வாரமா இது இருக்கும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

எதிர்ப்பில்லாம ஜெயிக்கறவங்க நீங்க. கவலையே படாதீங்க. எந்தக் காரியத் துலேயும் தனி முத்திரையோட வெற்றிக் கொடி கட்டப் போறீங்க. இந்த ராசிக்காரப் பெண்களுக்கு இது உற்சாகமான வாரமா இருக்கும். திருமணப் பேச்சு எடுக்கவோ, வீடு நிலம் வாங்கவோ சரியான நேரம். உங்க வாழ்க்கைத் துணைவர் அன்பா, அனுசரணை உள்ளவரா இருப்பார்ங்கறதால, துணிஞ்சி புதுக் காரியங்கள்ல ஈடுபடலாம். மாணவர் களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பிரமாதமான பிரச்னை ஒண் ணும் இல்லாட்டாலும் வளர்ச்சி மந்தமாத் தான் இருக்கும். குறிப்பா எக்ஸ்போர்ட் பிஸி னஸ் பண்றவங்க கொஞ்சம் மந்தமான பீரி யடை சந்திக்க வேண்டிவரலாம். அரசு உத்தி யோகஸ்தர்களுக்கு உற்சாகமில்லாத நேரமா இருக்கும். வழக்கறிஞர்களுக்கு நூதனமான கேஸ்கள் அகப்படும். பெண்கள், குழந்தைகள் உற்சாகமாகவே இருப்பாங்க. வீட்டு விசேஷங் கள் காரணமா உறவினர்கள் சந்திப்பு, விருந்து உபசாரங்கள் இருக்கும். பணப் பிரச்னை இருக்காது. சிலருக்கு புண்ணியத் தல யாத்திரை யோகம் இருக்கும். ●

33

சின்ன வயதில் பனிச் சென்று தெரிந்த மூன்றாம் பிறைச் சந்திரன், வயதான பிறகு பார்த்தால் தெரியவில்லை.

பேரன், குழந்தை கோவிந்தன் என்பவனைக் கூப்பிட்டுக் கிழவி கேட்கிறாள்.

"சந்திரன் தெரியலையடா! நீ கொஞ்சம் காட்டேன்" என்கிறாள்.

"அதோ தெரிகிறதே, பாரேன்..."

"தெரியலையேடா!"

பேரன் ரொம்ப கெட்டிக்காரன். பாட்டிக்குப் பேரனல்லவா!

"கோடி வீட்டு பாதாம் மரம் உனக்குத் தெரிகிறதா பாட்டி?" என்று கேட்கிறான்.

"நன்றாகத் தெரிகிறதே!" என்கிறாள் பாட்டி.

"அந்தக் கிளை நுனியிலே ஒட்டிக் கொண்டிருக்கிறதே சந்திரன்!"

இப்படிச் சொன்னதும் பாட்டி சந்திரனைப் பார்த்து விட்டாள். பரம சந்தோஷம் அவளுக்கு. பேரனைக் கட்டிக் கொண்டு முத்தம் கொடுத்தாள்.

குழந்தை என்ன சொல்கிறது...?

'கிளை நுனியிலே சந்திரன்!'

# குறையொன்றுமில்லை

கேட்டுக் கொண்டிருக்கிற நாமெல்லாம் கொஞ்சம் கவனிக்க வேண்டும். கோடி வீட்டு பாதாம் மரக் கிளையிலே ஒட்டிக் கொண்டிருக்கிற சந்திரனுக்கும் சந்திரலோகத்திலே பிரகாசிக்கிற சந்திரனுக்கும் என்ன சம்பந்தம்? ஒரு சம்பந்தமும் இல்லை!

அப்படியிருந்தும் இந்தக் குழந்தை காட்டினான்; அதை அவளும் பார்த்தாள். இது எப்படி சம்பவித்தது என்றால், இங்கேயிருந்து பார்க்கிறபொழுது அந்தக் கிளை நுனியிலே ஒட்டிக் கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது.

அதைப் பார்த்து, 'அதோ இருக்கிறதே' என்று காட்டப்படுகிறதேயொழிய, இதை வைத்து அது இல்லை என்பதை நாம் நன்கு உணர வேண்டும்.

அதைப் போன்று பகவான் சர்வ வியாபியாக இருந்தாலும் எதனுடனும் சம்பந்தமில்லாமல் அவன் இருக்கிறான் என்பதை நாம் உணர வேண்டும்.

அவனுக்குக் கிலேசாதிகள், கஷ்டங்கள், ஆனந்தாதிகள் எதுவும் கிடையாது. தனித்து நிற்கக்கூடியவன்.

விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்யத்திலே பராசர பட்டர் எல்லோருக்கும் புரியும்படியாக, அழகாகச் சொல்கிறார்.

ஒரு பள்ளிக்கூடத்தில் வீட்டுப்பாடம் எழுதி வருவது ரொம்ப முக்கியம். எல்லா புத்தகத்தையும் பார்த்துப் பார்த்து ஆசிரியர் கையெழுத்துப் போடுவார்.

ஒரே ஒரு பையன் வீட்டுப் பாடம் எழுத முடியவில்லை. அவன் என்னோடு சோளிங்கபுரம் வந்து விட்டான். மறுநாள் வீட்டுப் பாடம் எழுதாமல் போனான்.

உபாத்யாயர் என்ன பண்ணினார், 'கையை நீட்டு' என்றார் அடிப்பதற்கு!

குழந்தை நடுங்கிப் போய் விட்டான். உடனே அவருக்கே என்ன தோன்றியதோ, 'இன்றைய தினம் பரவாயில்லை; இனிமேல் எழுதாமல் வராதே' என்றார்.

சோளிங்கபுரத்திலிருக்கும் நரசிம்மனை நினைத்துக் கொண்டான் அந்தச் சிறுவன். 'இன்றைக்கு நரசிம்மன்தான் வந்து காப்பாற்றினான் என்று நினைத்துக் கொண்டான்.

'சோளிங்கபுரத்துக்குப் போனாயானால், உபன்யாசத்துக்குப் போனாயானால் வீட்டுப் பாடத்தை எப்படி எழுதுவாய்?' என்று தடுத்தோமானால், இந்த வித்தைக்கும் கல்விக்கும் அதெல்லாம் தடை என்றல்லவா ஏற்பட்டுப் போய்விடும்!

அதனால் தாய், தந்தையர்கள் அதிலேயும் ஈடுபட்டு, போய்ச் சீக்கிரம் பெருமாளை சேவித்து விட்டு வா – உடனே படி; என்றல்லவா சொல்ல வேண்டும். அதற்கு இது தடையாக இருக்கிறது என்கிற எண்ணம் விழவிடக் கூடாது.

இன்னொரு நாள் வேறெங்கோ போய் விட்டு வந்து பாடம் எழுதவில்லை. 'சுரீர் சுரீர்' என்று இந்தக் கையிலே ஆறு, அந்தக் கையிலே ஆறு அடி விழுந்தது!

அடிக்கிற உபாத்யாயர் நன்றாக அடித்துக் கொண்டிருக்கிறார். ஒரு கஷ்டமில்லை அவருக்கு. அடிபடுகிற பையன்தான் துடிக்கிறான்.

நம் சரீரம் என்பது இருக்கிறதே... அது தான் அடிக்கிற பிரம்பு மாதிரி. இதிலே, அடிக்கிறவனே உபாத்யாயர் ஸ்தானத்தில் இருக்கும்படியான பரமாத்மாவாகவும் உட்கார்ந்திருக்கிறான்; அடிபடுகிற ஜீவாத்மாவாகவும் உட்கார்ந்திருக்கிறான். அடிக்கிறவனான பரமாத்மாவுக்கு எந்த கிலேசமும் கிடையாது. அடிபடுகிறவனான ஜீவாத்மாவுக்குத்தான் எல்லா கஷ்டங்களும்!

பிரம்பாகிற உடம்பைப் பிடித்துக் கொண்டிருந்தாலும் இந்தக் கிலேசங்கள் எல்லாம் ஒட்டிக் கொள்ளாமல் இருக்கிறான். இதுதான் அவனுடைய வியாப்தியின் இலட்சணம். நாளும் குண தோஷங்கள் ஒட்டிக் கொள்ளாமல் தனித்து நிற்கக்கூடிய தகைமையுடைய காரணத்தினாலே 'விஷ்ணு' என்று அழைக்கப்படுகிறான்.

நரசிம்ஹ அவதாரத்திலே பரமாத்மா ஒரு கர்ஜனை பண்ணினான். அந்த கர்ஜனை எதைக் காண்பித்தது என்றால் அவனிடத்தில் அவியாப்தி, அதிவியாப்தி, அசம்பவம் ஆகிய தோஷங்கள் இல்லாதிருக்கிறான் என்பதை. அந்த சப்தமானது, எத்தனையோ பிரும்மாண்டங்களைக் கடந்து காற்றுக்கு அப்பால் போய்க் கேட்டதாம் - அப்படியொரு சப்தம்! கோஷம்!

'இந்த மாதிரி எங்கும் நிறைந்தவனை, எதிலும் சேராதவனை, தனித்து நிற்கும் பெருமை உடையவனை - விஷ்ணு என்கிற சப்தத்தினாலே நினை' என்று இங்கே காட்டித் தரப்படுகிறது.

யக்ஞம் என்ற சொல்லினாலும் விஷ்ணுவானவன் சொல்லப்பட்டான். அந்த விஷ்ணுவைப் பிரார்த்தித்தால் நமக்கு என்ன கிடைக்கும்...?

பரிபூரண ஆயுள் கிடைக்கும்.

வேதம் இதை ஆசீர்வாதம் பண்ணுகிறது - 'சதமானம் பவதி'!

சதமானம் என்பதற்கு வித்யாரண்யர் 120 வயது என்று பாஷ்யம் எழுதுகிறார். எம்பெருமானார் ராமானுஜர் 120 வயது இருந்தார். 120 வயது என்பது பூரண ஆயுள் ஒரு மனிதனுக்கு. அதனால்தான் அறுபதாவது வயதிலே ஒரு விழா கொண்டாடுகிறோம். முதல் அறுபது எப்படிப் போனாலும் பரவாயில்லை. மேல் அறுபதாவது ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்பதற்காக நம்மை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதற்கான காம்யமான கர்மா அது.

வாழ்கிற 120 வயதில் முதல் நான்கு வருடம் சின்னக் குழந்தையாய் அக்ஞானத்திலே போய்விடுகிறது. மீதி 116 வயதும் தர்மத்துக்காகவே செலவிடப்படுகிறது. அதனால்தான் ஆந்திர தேசத்திலே ஒரு பழக்கம். சம்பாவனை பண்ணினால் 116 ரூபாய் கொடுப்பார்கள்; அல்லது 1116, 2,116, 10,116 என்று 116 வரும்படி கொடுப்பார்கள். இப்படி 116 என்பது தர்மானுஷ்டான காலத்தைக் குறிக்கிறது. வாழ்க்கையைப் பூரணமாய் தர்மானுஷ்டானத்தின் பொருட்டே வாழ வேண்டும்.

## அருள்வாக்கு

ஒரு த்ருஷ்டாந்தம் சொல்வதுண்டு. ஒரு காடு இருந்ததாம். அதன் பக்கத்தில் ஒரு பெரிய நதி, ஒரு சின்னக் குட்டை இரண்டும் இருந்தனவாம். காட்டிலே தீப்பிடித்துக் கொண்டதாம். அப்போது பலமான காற்று சேர்ந்து கொள்ளவே எரிகிற சருகுகள், விறகுத் துண்டுகள், மண் எல்லாம் அடித்துக் கொண்டு வந்து குட்டையிலும் விழுந்ததாம்; நதியிலும் விழுந்ததாம். குட்டையை மண்ணும் சேத்தையும் பாதி அடைத்தது என்றால் பாக்கி பாதி அப்படியே அந்த உஷ்ணத்தில் வற்றி, மொத்தத்தில் குட்டை இருந்த இடம் தெரியாமல் ஆகிவிட்டது.

'அப்படிப்பட்ட ஆயுளை பகவான் விஷ்ணு உனக்குக் கொடுக்கட்டும்' என்கிறது வேதம். விஷ்ணு பெயரைச் சொன்னால் பூரண ஆயுள் ஏற்படுகிறது.

'பிராணா யக்ஞேன கல்பதாம்' என்று வாழ்க்கையையே யக்ஞமாகச் சொல்லியிருக்கிறது.

உணவு சாப்பிடும் முன் 'பிராணாஹுதி' என்று செய்ய வேண்டும். உள்ளே இருக்கிற அந்தர்யாமியான பகவானுக்காக நிவேதனம் என்று நினைத்து, அவனை தியானம் பண்ணிச் சாப்பிட வேண்டும்.

அப்படியில்லாமல், 'நான் எனக்காகச் சாப்பிடுகிறேன்' என்று ஒருவன் சாப்பிடுவானானால் அந்த அன்னம் அவனைச் சாப்பிட்டு விடும்!

ஆகையினாலே அந்தர்யாமி நிவேதன

மாகக் கருதித்தான் சாப்பிட வேண்டும்.

அவனிருக்கிற இடம் என்று இந்த உடலைக் கொண்டாட வேண்டும்.

பராசர பட்டர் என்கிற ஆசார்யர், ஸ்ரீரங்கத்திலே நித்யம் உபன்யாஸம் பண்ணுவார்.

அப்படி அன்றைய தினம் வைராக்கியம் என்பதைப் பற்றி ஏகமாகச் சொல்லிவிட்டார். கேட்டவர்கள் எல்லோருக்கும் பரம வைராக்கியம் வந்து விட்டது! எப்படிப் பட்ட வைராக்கியம் என்றால், மறுநாள் பார்த்தால் யாரும் பல் கூட தேய்க்கக் கூடாது என்று ஒரு வைராக்கியம்!

பல் தேய்க்கவில்லை, குளிக்கவில்லை, ஒன்றும் பண்ணிக் கொள்ளவில்லை!

சரீரம் அழியும்; ஆத்மா அழியாது. இந்த சரீரத்துக்காகப் பாடுபடலாமா! அலங்காரம் பண்ணிக் கொள்ளலாமா? என்று ஒருத்தரும் ஒன்றும் பண்ணாமல் இருந்து விட்டார்கள்!

மொத்த பேரும் ரங்கநாதர் கோயிலுக்குப் போகிறார்கள். போனால், அங்கே பராசரபட்டர் உடம்பிலே முழுக்க சந்தனம் பூசிக் கொண்டிருக்கிறார். சிகையிலே புஷ்பத்தைச் சுற்றிக் கொண்டு, கழுத்திலே துளசி மணி மாலை அணிந்து, உயர்ந்த சுவாசனையோடு அந்த ரங்கநாதருக்குப் பக்கத்தில் நின்றபடி,

'ஆபரணத்துக்கழகு செய்யும் பெருமான் முன்னழகைக் காட்டிலும் பின்னழகு விஞ்சி நிற்கும் பெருமாள்...' என்று கட்டியம் சொல்லிக் கொண்டிருக்கிறார்!

முதல் நாள் ராத்திரி எல்லோரும் வைராக்யத்தைப் பற்றிக் கேட்டார்களல்லவா...? அத்தனை பேரும் பார்த்தார்கள்.

'இவர் இத்தனை அலங்காரத்தோடு இருக்கிறார்; என்ன அலங்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்! நாமெல்லாம் இப்படிப் பைத்தியம் போல் இருக்கிறோமே!' என்று அவரையே போய்க் கேட்டு விட்டார்கள்!

"என்ன அக்கிரமம்! நீங்கள் சொன்ன உபதேசம் உங்களுக்கில்லையா? எங்களுக்குத் தானா?" என்றார்கள்.

"எனக்கும் உண்டு. உங்களை மாதிரிதான் நானும். ஆனால் ரங்கநாதருக்குக் கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருக்கிறேன் இங்கே நான்.

"ஒரு வீட்டிலே மங்களகரமான காரியம் நடக்கிறபோது வாசலிலே பந்தல் போடுவார்கள். மாவிலைத் தோரணம் கட்டுகிறார்கள், வாழை மரத்தைக் கொண்டு வந்து கட்டுகிறார்கள். அதைப் பார்க்கிறபோது சுபமான காரியம் நடக்கிறது என்று தெரிந்து கொள்கிறோம்.

"ரங்கநாதர் பக்கத்திலே நிற்கிறபோது அழுக்குடம்போடு நிற்கலாமா! அவன் பக்கத்தில் இருப்பதற்காகவே இந்த அலங்காரம். ஒரு தூணுக்கு அலங்காரம் பண்ணினது மாதிரி இந்த அலங்காரமேயொழிய எனக்கு அல்ல..." என்று சொல்லிவிட்டார் பராசர பட்டர்!

ஆகையினாலே, தினப்படி வாழ்க்கையிலே உண்பதும் உடுத்துவதும் கூட அந்த பகவானுக்காகத்தான்.

(தொடரும்)

---

மஹாநதியில் விழுந்த குப்பை கூளங்களை, அவை பற்றி எரிந்து கொண்டிருந்தாலும் தன் பிரவாஹமே அணைத்து அடித்துக் கொண்டு போய் ஸமுத்திரத்தில் விட்டு இருந்த இடம் தெரியாமல் பண்ணிவிட்டது. குப்பைக் குட்டையை இல்லாமல் பண்ணிற்று; நதியோ குப்பையை இல்லாமல் பண்ணிவிட்டது. இந்த மாதிரி தான் தோஷமாகத் தெரிகிற சில பழக்க வழக்கங்கள் பூர்வ காலத்தில் வீர்யத்தோடிருந்தவர்களைச் சேர்ந்தபோது அந்த தோஷம் அவர்கள் சக்தியில் அடிபட்டுப் போயிற்று; பலஹீனர்களான நாம் அந்த வழக்கங்களை



கைக்கொண்டாலோ தோஷம் நம்மை அடித்துப் போட்டுவிடும். அவர்களுடைய சக்தி நமக்கு இல்லாததால், கலியுகத்தில் எப்படி இருக்கணுமென்று அவர்கள் சட்டம் போட்டுக் கொடுத்திருக்கிறார்களோ அதற்கு அடங்கித்தான் நாம் நடக்கணும். 'அல்டிமேட்'டாக அஹிம்ஸா போஜனத்துக்குப் போகத்தான் எல்லாரும் முயற்சி செய்யணும் என்பதே நமக்கான தர்மம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

# ரூ. 25,000 பரிசு பெறும் நாவல்



அது ஒரு டிசம்பர் மாதக் குளிர் காலம். எலும்பு வரை ஊசியாய்க் குத்தும் கொடுமையான குளிர். நாம் நிற்கும் இந்த இடத்திலிருந்து கண்ணுக்கெட்டிய தூரம் வரை பொட்டல் வெளியாய் விரிந்து ஓடும் மைதானம். அதையொட்டிய வானளாவிய கட்டடங்கள். அவை எங்கும் காணக் கிடைக்காத பசுமையை மேல் பூசிக் கொண்டு நிற்கின்றன. இதுதான் அன்னை இந்திரங்கா ராக்கெட் ஏவுதளம் (ராகுல் காந்தியின் கொள்ளுப் பேத்தி. எத்தனை தலைமுறை ஆயினும் யாரும் அவர்களை விடுவதாக இல்லை).

என்ன... என்ன? அன்னை இந்திரங்கா ராகுல் காந்தியின் கொள்ளுப் பேத்தியா? அவர்கள் பெயரில் ராக்கெட் ஏவுதளமா? நாம் எந்தக் காலத்திலிருக்கிறோம்?

"ஏன் பதறுகிறீர்? எல்லாம் எதிர்காலம் தான்."

"எந்த ஆண்டு?"

"ஊஹூம்."

'அட்லீஸ்ட் எந்த நூற்றாண்டு என்பதை யாவது சொல்லுங்களேன். ப்ளீஸ்!"

"எந்த நூற்றாண்டு என்பதை வரும் அத்தியாயங்களில் நிச்சயம் தெரிந்து கொள்ளத்தான் போகிறீர்கள்.

# உயிர்களைத்

அப்புறம் என்ன? தற்போது இது ஒரு எதிர்கால சிந்தனை என்ற அளவில் தெரிந்து கொண்டால் போதுமானது. இந்த ராக்கெட் ஏவுதளம் இன்றைக்கு உலகில் ஒரு முதல்தர, அதிநவீனமான ஏவுதளமாகும். லேட்டஸ்ட் டெக்னாலஜி, ராக்கெட்டின் எல்லா சோதனைகளையும் பேலோடு சிஸ்டம் முதற் கொண்டு, லாஞ்ச் கன்ட்ரோல், பவர் டிஸ்ட்ரிபூஷன், டெலிமெட்ரி, புரொபல்ஷன், ப்ரோக்ராமிங், பாஸிவ் ராடார் டீகன் வரை எல்லா சோதனைகளையும் கம்ப்யூட்டர் பார்த்துக் கொள்ளுகிறது. மிக மிகத் துல்லியமாக.

இந்திரங்கா ஏவுதளம் இரைச்சலின்றி அமைதியாயிருந்தது. தடித்த இலைகளைக் கொண்டிருந்த மரங்களில் இதுவரையிலும் அழிந்து போகாமல் தாக்குப்பிடித்துக் கொண்டிருக்கும் ஒன்றிரண்டு பறவையினங்களின் கூக்... கூக்... கூக்... சப்தங்களைத் தவிர வேறு இரைச்சல் ஏதுமில்லை, நிசப்தம். கேட்டில் கறுகறுப்பாய் செக்யூரிட்டிகள் அதாவது ஸின்தெட்டிக் தோல் போர்த்திய ரோபோக்கள்!

நொடிக்கொருதரம் போவதும் வருவதுமாயிருந்த மனிதர்களைச் சுமந்த சப்தமில்லாத அட்டாமிக் ஃப்யூஷன் ஹைட்ரஜன் கார்கள் கேட்டில் தயங்கி நகர, அந்த



# தேடித் தேடி

சொற்ப நொடியில் சென்ஸார்கள் கூர்மையாய்த் தடவி, உள்ளே செல்ல அனுமதித்துக் கொண்டிருந்தன.

நிறைய மனிதத் தலைகள். உள்ளே நுழைந்தபின் சற்றுத் தள்ளி அந்தப் பச்சை நிற கட்டடத்தின் வால் பகுதியில் மென்மையான நுரை ஆடைகளில் விஞ்ஞானிகள் சிரத்தையுடன் விவாதித்துக் கொண்டிருந்தனர். எல்லோர் முகங்களிலும் ஒரு பரபரப்பு, கூடவே கவலை ரேகைகள். வலப்புறமாய் ஒரு அரை கிலோ மீட்டர் தூரத்தில் கூரை மூடிய கோபுரம் ஒன்று நெடுநெடுவென்று நிற்கிறது. சுற்றிலும் இயந்திர செக்யூரிட்டிகளின் அணிவகுப்பு.

உள்ளே அதை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். இங்கிருந்தே பார்க்க முடிகிறது. எத்தனை சாதுவாய். ஜடமாய் நிற்கிறது. அதற்கு உருக்கொடுத்து உயிர்ப்பிக்க வேண்டியது தான். அப்புறம் அதன் சக்தியை யாரால்

**தி. தா. நாராயணன்**

விளக்க இயலும்? அமைதியாய் நிற்கும் அந்த பூதம்தான் வரப்போகும் நிகழ்வுகள் அத்தனைக்கும் சாட்சியமாக இருக்கப் போகிறது.

பூதம்? - ராக்கெட்.

பெயர் - ஸ்பேஸ் ஈகிள்.

இந்த டிசம்பர் மாதத்துக்காக பதினேழு வருடங்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். திட்டமிட்டு உருவாக்கிய ப்ராஜக்ட். சரியாக இந்த டிசம்பரில்தான் செவ்வாய் அதன் நீள்வட்டப் பாதையில் பூமிக்கு நெருக்கமாய் வருகிறது. நெருக்கம் 26 மில்லியன் மைல்கள். இந்த இடைவெளி தூரம் கூட மாறிவிட்டது தற்போது. சென்ற நூற்றாண்டின் பிரளயத்தின்போது விண்வெளியில் நடந்த அதிசயங்களில் முக்கியமானதாக விஞ்ஞானிகளால் கருதப்படுவது, செவ்வாய் தன் சுற்றுப் பாதையை விட்டு நகர்ந்து சூரியனுக்கு நெருக்கமான பாதைக்கு வந்து அங்கு நிலைகொண்டு சுற்ற ஆரம்பித்த நிகழ்ச்சிதான்.

**விண்கலம் : ஸ்பேஸ் ஈகிள்**

**எடை : 380.815 டன்**

**நோக்கம்: செவ்வாய் கிரகத்திற்குப் பயணம்**

**தூரம் : 23.62 மில்லியன் கிலோ மீட்டர்கள்.**

**மொத்தம் செலவிடும் காலம் :**

**2 வருடம் 5 மாதங்கள், 17 நாட்கள்.**

**குறிக்கோள்: ஆராய்ச்சி.**

**எரிபொருள்: ஹைட்ரஜன் (டியூட்ரியம் டிரிடியம். அணுக்கரு பிணைவு (அதாவது, அடாமிக் ஃப்யூஷன் முறையில் பெறப் படும் எரிபொருள்.)**

**ஒப்புவிசைத்திறன் : 1050 செகன்ட்**

**பொறுப்பு : மிஸ்டர் தாமு, டைரக்டர் இன்சார்ஜ், இந்திரங்கா ஏவுதளம், ஐ.எஸ்.ஆர்.ஓ.**

முடியாது என்று முடிவு கட்டியிருந்த ஐன்ஸ்டீனின் ரிலேட்டிவிட்டி தியரிக்கு திருத்தம் கொண்டு வந்த மேதை மிஸ்டர் தாமுவின் வீடு!

கம்ப்யூட்டர் மாடல் எண் XXXLRV 2102. வீட்டின் பாதுகாப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறது. அனுமதியின்றி நுழைந்தால் அடி தப்பாது. மண்டையைப் பிளந்து விடும் ரோபோக்கள். அதையும் ஜெயித்து உள்ளே போனால் லேசர் பீம் ஆளைப் பொசுக்கி நொடியில் சாம்பலை உதிர்க்கும். மனித உயிர்களுக்கெல்லாம் இங்கே விசாரணை கிடையாது. போனால் ஓர் உயிரின் உணவு மிச்சம். ஈ நுழைந்தாலும் காட்டிக் கொடுக்கும் இன்ஃப்ராரெட் வலைப் பின்னல்கள்.

ஈயும் கொசுவும் மற்ற இதர பூச்சியினங்களெல்லாம் எந்தக் காலத்திலேயோ துப்புரவாய் ஒழிக்கப்பட்டு விட்டன என்பது வேறு விஷயம். தாமு எனும் அவரன்றி ஓர் அணுவும் அசையாது.

டைனிங்டேபிளில் மிஸ்டர் தாமு. எல்லாம் தளர்ந்த நிலையில் அந்த மூளை மட்டும் பிரகாசிக்கிறது போலும். பொத பொதவென்று உடல்வாகு, எந்நேரமும் அசதியைச் சொல்லும் முகத் தோற்றம். எதிரே மிஸ் சூர்யா. ஒரே மகள். மூத்தவள். தொட்டால் கன்றிப் போய்விடும் சிவப்பு. கூர்மையான, சற்றுக் கீழே சரிந்த நாசியில், அகன்ற நெற்றியில், பிளந்து வைத்த இதழ்களில், அந்த கன்னக் கதுப்புகளில், அடர்த்தியான . புருவங்களில், எதிரியை ஊடுருவும் தீர்க்கமான பார்வைகளில் எல்லாம் இதோ, இதோ... என்று மிஸ்டர் தாமு தெரிந்தார். எல்லாம் அளவாய். ஒரு முப்பது வயது மதிக்கலாம். அது கூட அவள் வகிக்கும் பதவிக்காக. கம்ப்யூட்டரில் நெம்பர் ஒன்.

திருமணம்? இன்னும் இல்லை. அந்த நினைப்பு ஏதுமில்லை. வரும் சமயங்களில் அதற்கு மாற்று வழி சுலபத்தில், மிகச் சுலபத்தில் கிடைக்கிறது.

மூளையின் ஒவ்வொரு செல்லும்



**''முதலிரவு அன்னிக்கு பழம் சாப்பிட்டு முடிக்கறதுக்குள்ளே பொழுது விடிஞ்சுடுத்து!''**

**''ஏன்?''**

**''பின்ன! பலாப்பழத்தை முழுசா வைச்சுட்டாங்களே.''**

**- சூர்யா**

கம்ப்யூட்டரின் சூட்சுமங்களை பிரதி யெடுத்து வைத்திருக்கும்.

அடுத்தது ரஷ்ஷா! - ஒரே மகன். சூர்யா வுக்கு இளையவன். இருபத்தி நான்கு வயது. திடகாத்திரமான முறுக்கேறிய உடல்வாகு. எல்லாம் பயிற்சி. ஸ்பேஸ் ட்ரெய்னிங் அகாடமியில் நான்கு வருடங்கள் கோர்ஸ் முடித்தவன். கேலக்ஸியில் பறக்க சந்தர்ப்பத் திற்காக ஏங்கிக் கொண்டிருப்பவன்.

''அப்பா! நாங்களும் ஒரு வாரமாய் கவனித்துக் கொண்டுதானிருக்கிறோம். உங்க மனசுக்குள்ள அப்படி என்ன போராட் டம்?'' - இது சூர்யா.

''நத்திங்'' - அவர் சிரிக்க முயற்சி செய் தார்.

''எல்லாந் தெரியும் டாடி! செவ்வாய் டிரிப்புக்கு ரஷ்ஷா செலக்ட் ஆகக் கூடாது என்று என்னென்ன தப்பு வேலைகள் செய்தீங்க?''

''எஸ்! அதுதான் என் கவலை சூர்யா!'' - அவர் முகம் ஒரு வினாடி துக்கம் காட்டிச் சிரித்தது.

''த்சு.. த்சு... அவன் எதிர்காலத்தை சாக அடிக்கிறீங்க. பாசம்னு சொல்லப் போறீங் களா?''

''அதுதான் உண்மை சூர்யா!''

''பொய். பின்னே எதுக்காக எஸ்.டி.ஏ. விலே நாலு வருஷம் படிக்க வெச்சீங்க? அதில் அவன் கோல்ட் மெடலிஸ்ட்பா.''

''அதற்காகத்தான் பயப்படறேன்'' - அவர் முகம் இறுகியது.

''அவனை அனுப்பத்தான் போகிறேன். செவ்வாய்க்கு அல்ல. சந்திரனிலுள்ள நம் ஆராய்ச்சிதளத்தின் இன்சார்ஜ் ஆக. அங்கே ஒரு முக்கியமான காரியம் செய்ய வேண்டியிருக்கிறது.''

''அப்பா நான் செவ்வாய்க்குச் செல்ல ஆசைப்படுகிறேன்.''

''நோ... நெவர்!'' - அவர் தலையை ஆட்டினார்.

''வருத்தப்படாதே ரஷ்ஷா! அவரை எதிர்த்து நம்மால் எதுவும் செய்ய முடியாது. தலைமை விஞ்ஞானி.''

''எஸ்! நான் நினைப்பதுதான் நடக்க வேண்டும். என் உழைப்புக்கு இந்த நாடு கடன்பட்டுள்ளது.''

அப்போது உணவு பரிமாற மூன்று ரோபோக்கள் டேபிளுக்கு வந்தன.

''ரஷ்ஷா!'' - தாமு கூப்பிட்டு ரஷ்ஷா வைப் பார்க்க, அவன் ரிமோட்டில் ரோபோக்களின் ஹியரிங் சர்க்யூட்களை




**''ஏன்யா! பஸ்ஸுக்குள்ள ஃபுட் பால் கிரவுண்ட் போல இடம் இருக்கு. நீ மட்டும் ஏன்யா படியிலேயே நிக்கற?''**

**''நான் கோல் கீப்பருங்க!''**

**- வண்ணாமடை க. சிவமணி**

ஆஃப் செய்தான். செய்திகள் மெமரி பகுதிக் குப் போய் விட்டால் எதிரிகள் சுலபமாய் வார்த்தை பிசகாமல் பேச்சுக்களை நகல் எடுத்துக் கொள்ள இயலும். இவர்கள் சம்பாஷனை முடியும் வரை அவை செவிடுகள்.

''சூர்யா, ரஷ்ஷா! உங்க இரண்டு பேருக்குந்தான் சொல்றேன். காரணமில் லாமல் செவ்வாய்க்குச் செல்வதைத் தடைசெய்ய மாட்டேன். இந்தப் பயணம் ரொம்ப ஆபத்தானது. மற்ற எல்லாப் பய ணங்களையும் விட.''

''ஹூம்... பேத்தல்.''

''அவசரப்படாமல் கேளுங்கள். செவ்வாயை மலை மலையாய், ஆஸ்டராய்ட் கள் சுற்றிக் கொண்டிருக்கின்றன. ஆயிரக் கணக்கில். அசுரவேகம். இவை மீது மோதா மல் முன்னேற வேண்டும். ரொம்பக் கஷ் டம். அதிலிருந்து தப்பினாலும் லட்சக்கணக் கில் சிறு சிறு விண் எரிகற்கள் சுற்றிக் கொண்டிருக்கின்றன. ராக்கெட் போகும் வேகத்தில் ஒரு சின்னத் துகள் மோதினால் கூட ராக்கெட் வெடித்துச் சிதறிவிடும்.''

அவர்கள் கிண்டலாய் உதட்டை சுழித்து விட்டு சிரித்தார்கள்.

''டாட்! எங்களை இன்னும் சின்னக் குழந்தைகளாகவே நினைத்துக் கொண் டிருக்கிறீர்கள். அப்படி எதுவும் நடக்காது. ஒவ்வொன்றும் அதனதன் கதியில் போய்க் கொண்டிருக்கும். ஹூம் என்னை விடுங்கள். நான் கம்ப்யூட்டர் மனுஷி. ரஷ்ஷா? அஸ்ட்ரானமியை முதல் இரண்டு வருடங்களிலேயே கரைத்துக் குடித்து விட்டவனல்லவா? அப்புறம் அவனிடமே கதை சொன்னால்?''

"இல்லை... இல்லை சூர்யா! ராக்கெட்டின் எலக்ட்ரிக் ஸர்க்யூட்களில் இந்த இரண்டரை வருடப் பயணங்களில் ஒரு சின்ன கம்பியின் இணைப்பு கூட உயிருக்கு ஆபத்தை விளைவிக்கும் சாத்தியம் உண்டு. என்னைப் புரிந்து கொள்ளுங்கள்."

"இப்படி ஏன் விபத்தாவே கற்பனை பண்றீங்க...?"

ரஷ்ஷு சிரித்தான்.

அழுத்தமாய் அவனைப் பார்த்தார்.

"விவேகம் முக்கியம். ஓ.கே. ரஷ்ஷு! நீ செவ்வாய்க்குச் செல்ல கனவு காணாதே. என்னை மீறி எதுவும் நடக்காது. செலக்ஷன் கமிட்டியின் ரேங்க் லிஸ்ட்டின்படி உன் பொஸிஷன் ஒன்று. அதை நாலு என மாற்றி விட்டேன். அந்த மராத்தி பையன் கைலாஷ்... அவனை சிபாரிசு செய்து அனுப்பி விட்டேன். நேரில் தலைவரிடமும் பேசி விட்டேன். உன் திறமைக்கு ஏற்ற நல்ல பயணத்தை விரைவில் ஏற்பாடு செய்வேன். அதுவரை பொறுத்திரு."

ஆத்திரமாய் சூர்யா குறுக்கிட்டாள். "எப்படியோ உங்கள் ஈகோ ஜெயிக்கணும்."

"அதில் உங்கள் இருவரின் நலன்தான் பிரதானம் சூர்யா!"

"ச்சு... போதும்... போதும் டாடி! ரஷ்ஷு! எழுந்திரு. இது உன் எதிர்காலம் பற்றிய பிரச்னை. விடக் கூடாது. இப்பவே தலைவரை கான்டாக்ட் பண்ணுவோம், வா! எல்லாவற்றையும் சொல்லிடுவோம். கமான்!"

"இரு அக்கா! பொறு. அப்பாவைப் பற்றியா நாம் புகார் தரப் போகிறோம். நிதானமாய் யோசி. சரியான காரணமில்லாமல் அப்பா அப்படிச் செய்ய மாட்டார்."

"சே!"

"அக்கா! இந்த முன்கோபந்தான் வேண்டாம் உனக்கு. எதையும் தீர யோசிப்பதில்லை.

தாமு அவர்களை நெருங்கினார். கண்கள் கலங்கியிருந்தன. "என்னைக் காட்டிக் கொடுப்பாயா சூர்யா?"

அவர் முகத்தைப் பார்த்ததும் இளகிப் போனாள். ஒரு நிமிடம் தவித்தவள் குற்ற உணர்வு மேலிட,

"சாரி டாட்!" - அருகில் சென்று அவரைக் கட்டிக் கொண்டாள்.

"என்னை மன்னிச்சிடுங்க. கோபம் வந்தால் ஒரு நிமிஷம் எல்லாவற்றையும் மறந்து விடுகிறேன். நீங்கள் செய்த வேலைக்கு எங்கள் மேல் வைத்திருக்கும் பாசம்தான் காரணம் என்ற அடிப்படை விஷயம் கூடத் தோன்றவில்லை எனக்கு. அநீதியை சகிச்சிக்க முடியல. அப்படித்தான் சென்ற மாதம் தலைவரிடமே எதிர்த்துப் பேசிவிட்டு மாட்டிக் கொண்டு விட்டேன். ப்ளீஸ் டாட்! என்னை மன்னிச்சிடுங்க."

ஆறுதலாய் அந்தக் குழந்தையின் முதுகைத் தட்டிச் சிரித்தார்.

"இந்த முன்கோபத்தை விட்டு விடு சூர்யா! கோபம் வரும்போது மனத்தைத் திசை திருப்பி விடு. கம்ப்யூட்டரில் புதுப் புது ப்ரோலாக்குகளைப் போட்டுப் பார்க்கலாம். ஒரு பத்து நிமிஷம் - கோபம் தணிந்து விடும்."

அப்போது அழைப்பு மணியோசை கேட்டது. நான்கு ரோபோக்கள் லேசர் கன் ஏந்தி பாதுகாப்புத் தர, தலைவரின் பிரத்தியேக செயலர் குழுவில் உள்ள மிஸ்டர் சாம், ஒரு சீலிட்ட கவரை ஜாக்கிரதையாகக் கொண்டு வந்து தாமுவிடம் சேர்ப்பித்தார். அவர்களையனுப்பி விட்டு கவரை உடைத்தார். முகம் மாறியது. ஒற்றை வரியில் அவருக்கு அதிர்ச்சி செய்தி இருந்தது.

மிஸ்டர் டி. ரஷ்ஷு செலக்டட் ஃபார் மார்ஸ் வாயேஜ்.

கையொப்பம்,
தலைவர்.

(தொடரும்)

---

**க்விஸ் போட்டி - 3 முடிவு!**

**வா**சகர்களுக்கான க்விஸ் போட்டி -3ன் சரியான விடைகள்:

**1) காரி சோபர்ஸ் 2) ஸ்டெஃபி கிராப் 3) மைக்கேல் ஜோர்டான் 4) மாரடோனா 5) காஸ்பரோவ் 6) மார்டினா நவ்ராத்திலோவா 7) சுனில் காவஸ்கர் 8) லியாண்டர் பயஸ்.**

சரியான விடைகளை 22 பேர் எழுதியிருந்தார்கள். குலுக்கலில் வென்று ரூ. 200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**ஜோ. ஜெயக்குமார்,**
**3/4-A, அன்னை இல்லம்,**
**அன்னை நகர்,**
**நாட்டரசன் கோட்டை - 630 556.**
**சிவகங்கை மாவட்டம்.**

# நேரில் பார்த்த பிரமிப்பு...

✉ தலையங்கத்தை மொழிபெயர்த்து வாஜ் பாய்க்கு அனுப்புங்கள். அணு ஆயுதம் பற்றிய அறிக்கையைத் தேர்தல் வாக்குறுதியாக அண்டை நாடுகள் எடுத்துக் கொள்ளாது. விபரீதத்தைத் தடுக்க வேண்டியது பா.ஜ.க. வின் கடமை!
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ சுயமரியாதையோடு 'அம்மா'வின் கீழ் இருப்பேனென்று தலித் எழில்மலை சொல் வதைக் கேட்டுச் சிரிப்பு வரவில்லை?
காரைக்குடி, பாலு.

✉ ''அரசியலில் கிடைத்த வாய்ப்பை மக்களின் நல்வாழ்விற்காக அர்ப்பணித்துக் கொண்டவன். சுயமரியாதைக்காரன்'' என்று தம்மைப் பற்றிக் கூறும் எழில்மலை சம்பந்த மில்லாமல், அ.தி.மு.க.வுடன் சேர்ந்திருப்பது முரண்பாடாக அல்லவா இருக்கிறது? உண்மையிலேயே மக்களுக்காக அவர் போராடுவதாக இருந்தால் தனித்து நின்று போராடலாமே!
மங்கநல்லூர், எல். துர்காதேவி.

✉ கலைஞரின் தேர்தல் பிரசாரப் பயணத் தைப் படங்களுடன் வெளியிட்டு, நாங்களும் நேரில் பார்த்த பிரமிப்பை ஏற்படுத்தி விட் டீர்கள்!
நெத்திமேடு, நிர்மலாநாதன்.

✉ 'அட, இப்படியும் ஓர் இஸ்கூலா?' கட்டுரை படித்து வியந்தேன். சின்னத் தடாகம் கிராமம் சார்ந்த மாணவமணிகளும் அவர் களது எதிர்காலச் சந்ததியினரும் கொடுத்து வைத்தவர்கள்!
நாமக்கல், கே. மூர்த்தி.

✉ ஆன்மீகத் தேடலில் ஈடுபடும் மனிதனின் மனம் மனிதநேயத்திற்கும் பக்குவப்படும் விதத்தை ம. ராஜேந்திரன் சித்திரித்திருந்த விதம் வெகு நேர்த்தி!
நெய்வேலி, சாந்தி சுந்தர்.

✉ கோவை மட்டுமல்ல, வேறு பல தொகுதி களிலும் தி.மு.க. + பா.ஜ.க. தொண்டர்களிடம் தேர்தல் ஒற்றுமை இல்லாதிருப்பது நிருபணமாகிக் கொண்டுதான் இருக்கின்றது. இருப்பினும் நாட்டின் நலனைக் கருத்தில் கொண்டு சொந்தப் பகையை தள்ளி வைத்து உழைப்பார்களேயானால் வெற்றிக்கனியை தட்டிச் செல்லும் வாய்ப்பு தேசிய ஜனநாயக கூட்டணிக்கு இருக்கிறது!
தேவனாங்குறிச்சி, பா. வடிவேல்.

✉ 'அனைத்துக்குமான அரிய சிகிச்சை' - கட்டுரை படித்து வியந்தேன். அக்னிஹோத்ரம் வெறும் சாஸ்திரம் அல்ல; அடங்கியிருப்பது சயன்ஸ் என்பது தெரிந்தது. நம் முன்னோர் கள் எப்படிப்பட்ட அற்புதங்களைக் கண் டறிந்து, ஆயிரக்கணக்கான வருடங்கள் முன்னமேயே நடைமுறைப்படுத்தியும் இருக் கிறார்கள்! கண்ணதாசன் கூறியது போல் 'அன்று சொன்னவை யாவும் அர்த்தம் உள்ளவை'யே!
காஞ்சிபுரம்; தென்காசி. தெ. கணேசன்.

✉ 'குவிஸ் போட்டி-1 முடிவு'-ல் இந்தியா வில் முதல் பொதுத் தேர்தல் நடந்த ஆண்டு 1950 என்று தெரிவித்திருக்கிறீர்கள். 1952 என்பதே சரியல்லவா?
தி. அகரம், ச. நா. ஜெய்சிவசங்கர்.

சுதந்தர இந்தியாவின் முதல் பொதுத் தேர்தல் எந்த ஆண்டில் நடைபெற்றது?
☐ 1948 ☐ 1950 ☑ 1952

(1952 என்பதே சரியான விடை. பரிசு பெற்ற வாசகரும் அதனையே குறிப்பிட் டுள்ளார். விடை வெளியிடும் போது நேர்ந்து விட்ட அச்சுப் பிழைக்கு வருந்துகிறோம் - ஆர்.)

✉ 22.8.99 இதழில், 'குறையொன்றுமில்லை' பகுதியில் வெளியான திருப்பல்லாண்டுப் பாசுரத்தில் தவறுகள். 'பிரிவின்றி' என்பதற்கு 'திருவின்னி' என்றும் 'வடிவாய் நின்வல மார்பினில்' என்பதற்கு வடிவார் நின் மலர் மார்பில் என்றும், 'புக்கு முழங்கும்' என்பதற்கு பொக்கு முழங்கும் என்றும் தவறாக அச்சாகியுள்ளது. மேலும் 'வடிவார் சோதிவ லத்துறையும் சுட ராழியும் பல்லாண்டு!' என்ற வரி விடுபட்டுள்ளது.
குரோம்பேட்டை, டி.கே. தேவநாதன்.

வட்டமேஜை



துல்லியமாக அளந்து பார்த்து விட்டேன். அரை மீட்டர் நீளமும், அரை மீட்டர் அகலமும் உள்ள தாய் இருக்கிறது இதன் மேற்பரப்பு. உயரம் ஒன்றரை அடி இருக்கிறது. நவீன எடைக் கருவியின் துணை கொண்டு இந்தச் 'செக்கு' எத்தனை கிலோ என்று நிறுத்து விட முடியும்.

வீட்டு வாசலின் தென்மேற்கு மூலையில் தற்சமயம் உபயோகம் ஏதுமற்றுக் கிடக்கிறது. வீட்டுக்கு கிரைண்டர் வந்தபின் 'செக்கு' என்கிற வார்த்தை 'ஆட்டுரல்' என அறியப்பட முடியாமல் துன்பம் தீர்க்கிற 'காசோலை'யை மட்டுமே நினைவுபடுத்துகிறது – cheque-குகள் எதுவும் வராத போதும்.

இனி பழைய செக்குக்கே வருவோம். நதிமூலம், ரிஷிமூலம் போலவே 'விக்கிரஹங்களின் மூலமும்' அவ்வளவு எளிதில் அறிவதற்கில்லை. இந்தச் செக்கு ஆதியில் எந்த மலையில் கல்லாக உறைந்திருந்ததோ? இப்படித் துல்லியமாய்ச் சொல்ல முடியாத பழைய நாட்கள் இதற்கு உண்டு. ஆயிரக் கணக்கான இட்டிலி, தோசை, வடைகளுக்குக் காரணமாயிருந்திருக்கிறது.

கோலிக்குண்டுகளுக்கு வசீகரமான உட்பூக்கள் உள்ளது போல, இட்டிலி அரிசிக்கும் சுடர் வெள்ளையில் பூ நேர்த்தி இருந்தாலும் செக்கும், சட்டியும் இல்லாமல் அது இட்டிலி ஆக முடியாது.

இந்தச் செக்கின் உயரத்தில் நான் இருந்த போது என் வாழ்வின் நினைவு தினங்கள் துவங்கியிருக்க வேண்டும்.

அப்போது எங்கள் வீட்டுக்கு இப்போதுள்ள வடக்கு வாசலோடு, தெற்குப்புறமாகப் போய் வரவும் பாதை இருந்தது. இப்போது அது இல்லை.

மற்றபடி வீட்டின் அப்போதைய அமைப்பையும், இப்போதைய அமைப்பையும் என்னால் வர்ணிக்க இயலாது. இந்தியாவின் பிரதமர்கள் மாறுவதை விட வேகமாய் வீட்டில் மாறுதல்கள் நடக்கும். மற்றபடி வீடு இந்தியா போலத்தான் இருக்கிறது.

தெற்கு வழியில் பொடக்காளியின் மதில் தாண்டி கிழக்கு ஓரமாக செக்கு இருந்தது. கோட்டை மேட்டுக்கு பள்ளிக்கூடம் போய்விட்டு வந்தபின், புத்தகப் பைக் கட்டை செக்கின் மீது வைத்துவிட்டு அந்தாக்கில் விளையாட ஓடுவதற்குத் தோதாக இருந்தது. முதன் முதலில் அதன் மீது தவ்வி ஏறி அமர்ந்த தினம் கூட சாதனைகளின் நாளாயிருந்தது. ஆனால், அம்மா என் வளர்ச்சி குறித்து விசேஷ காரணங்கள் சொல்லி அதன் மீது அமர்வதைத் தடை செய்து விட்டாள்.

அம்மாவின் விருப்பம் போல ஐந்தடி பதினொரு அங்குலம் வளர்ந்துவிட்ட இந்நிலையில் 'இது மட்டுந்தானா வளர்ச்சி?' என்ற கேள்வி நிற்கிறது.

இடையறாத காலை இட்டிலிகளால் செக்கு சதாவும் 'ஆட்டுக் கல்லி'னால் தாக்குண்டிருந்தது. ஆட்டுக் கல் தெரியும்தானே? உரல் – உலக்கை, அம்மி – குழவி, செக்கு – ஆட்டுக்கல் என 'பிரிக்க முடியாதது எதுவோ?' என்ற கேள்வியின் கீழ் வருவதில் ஒன்று.

தோல் கிழாக நிறுத்திய உடுக்கையில் ஒரு லயத்தில் கீழ்ப்புறம் மழுங்கிக் குவிந்த வடிவம் ஆட்டுக் கல்லுக்கு. உச்சியில் குச்சி செருகப்பட்டு அது ஆறு மாதத்துக்கு ஒருமுறை மாறிக் கொண்

டிருக்கும்.

நாட்களின் அசைவில் செக்குக் குழியின் உட்புறம் கறுப்புத் திராட்சை போல வழ வழப்பாகி விடும்.

மழைக் காலத்தில் தெருவே ஓட்டை யாகும். தென்புறத்துப் பாதையில் பகலைக் கிழித்துக் கொண்டு யாரேனும் வருவார்கள்.

"அம்மி கொத்தறதே! அம்மி கொத் தறதே!"

உளியும் சுத்தியலும் கைக்கொண்டு மடிந்த அழுக்கு வெள்ளை வேட்டியும் உப்புக்கறைச் சட்டையுமாய் அவர்கள் இருப் பர். பகலின் எந்தத் தருணத்து சிநோஷ்ணத் தையும் ஏற்று வாங்கியவாறு அவர்கள் செக் கைப் பொளிவார்கள்.

பொளிதலின் போது நான்கிட்டே இருந் தால் எனது 'இன்ஷியலை' பொறிக்கச் செய் வேன். பாலர் காலக் கல்வெட்டு.

பொளிந்து முடித்தபின் புதிய பொலிவு பெறும் செக்கு. தவிரவும் மழை பொழிகிற தினங்களில் 'ஓர் உழவு மழை' என்பதைக் கணக்கிட 'செக்கு நிரம்பி விட்டதா' என் றும் பார்ப்பதுண்டு. இவ்விதம் பொளிதல், பொலிதல், பொழிதல் எல்லாவற்றுடனும் சம்பந்தப்பட்டிருந்தது.

ஒரு கட்டத்தில் எனக்குத்தான் அதனு டன் சம்பந்தம் விட்டுப் போயிற்று. நான் ஆணாயிருந்தது, வீட்டுக்குக் கிரைண்டர் வந்தது, செக்கை நான் காணாதிருந்தது எனச் சில காரணங்கள்தான்.

கிரைண்டர் வந்தபோதே வீட்டின் தெற்குப் பாதை அடைபட்டுப் போய் விட்டது.

எனக்கோ வெளி யூரின் வாசல்கள் திறந்தன. ஊர்கள்

## க. சீ. சிவகுமார்

சுற்றி வீடு திரும்புகிறபோது இட்டிலியைப் பார்த்தாலும் செக்கின் நினைவும் வரு வதில்லை, கிரைண்டர் நினைவும் வரு வதில்லை.

தெற்குப்புறப் பாதை அடைபட்டதும் இப்போதைய முன்வளமும், ஓம் சக்தி கோயி லும் காட்சிக்குத் தப்புகின்றன. அந்த இடம் ஒருகாலம் தோல் பொம்மை ஆட்டத்துக்கும், கழைக்கூத்துக்கும் ஆனதாயிருந்தது. வருடத் தில் சில தினங்கள் வரும் அந்நிகழ்ச்சி களுக்கு எங்கள் வீட்டிலிருந்துதான் 'மின் சாரம்' போகும்.

செக்குக்கும் மதிலுக்கும் இடையேயான இடைவெளி சரியாய் ஒரு மூங்கில் கழி உள்ளே நுழைவதாய் இருக்குமாதலால் 'வயர் போகும்' பாதையில் செக்குக்கு மேலாக மின்சார முடிச்சு இருக்கும். அந்த மூங்கில் கழி இடைவெளியோ மற்ற நாட் களில் 'உக்கை' வைக்கப் பயன்பட்டு வந்தது. உள்ளங்கையினின்று சரியும் மணற்குன்று களுக்கு 'உக்கை' என்று பெயர் - குழந்தை விளையாட்டில். தோல் பாவைக்கூத்து நடந்த இடத்தில் ஒரு பாதியில் ஓம்சக்தி கோயிலிருக்கிறது. இன்னொரு பாதி வியாஜ்ஜியத்தில் கிடந்து சீமைக் கருவேலம் வளர்கிறது. அவற்றிற்கு ஸ்டே ஆர்டர் கிடையாது. ஊர் நடுவே இருந்தாலும் ஓம் சக்தி கோயில் வனத்துக்குள் இருப்பதான 'எஃபெக்டோடு' இருக்கிறது.

எல்லாத் தோல் கூத்திலும் வருகிற 'பத் துப் பைசாக்காரன்' எந்த டாலரைத் தேடி எந்த நாடு போனான் என்று தெரியவில்லை. தோல் பொம்மையாட்டம் எங்கள் ஊருக்கு வருவதேயில்லை. நல்லவேளை இட்டிலி, தோசை வழக்கொழியவில்லை.



# பால்யக் கல்வெட்டுகள்

சரித்திரத்தில் அலாதியான விஷ யம் மறதிதான். காட்சிக்கே கிடைக்காததால் 'செக்கு' இன்று காலை வரை ஞாபகத்தில் தப்பியிருந்தது. இன்று காலை எழுந்திருக்கும்போதே

எங்கள் வாசலின் கிழக்குப் பக்கமுள்ள ஒரு இடத்தை ஆட்கள் தோண்டிக் கொண்டிருந்தார்கள். என்ன? என்று விசாரிக்கையில் தான் தெரிந்தது. எங்கள் 'செக்கு' அங்கே புதைந்திருக்கிற விஷயம். முந்தா நாள் வந்த ஜோஸியக்காரன் சொன்னானாம். 'இந்த மாதிரி ஐட்டமொன்று புதைந்து கிடக்கிறதென்றும் அதை எடுத்தால்தான் பீடை விலகுமென்றும்'.

அப்பாவும், "வாஸ்தவம்தான். போன வருடம் நான்தான் செக்கைக் குழிபறித்துத் தள்ளினேன்" என ஒப்புக் கொண்டு மீட்கும் காரியத்திலிறங்கியிருந்தார்.

எனக்குக் கோபம் கோபமாக வந்தது. பீடைகளை விடுங்கள். செக்கைப் புதைத்தாலும் சும்மாயிருந்தாலும் அது நம்மைச் சுற்றத்தான் போகிறது. நம்மை விட்டால் அதற்குப் போக்கிடம் ஏது? ஆனால் தின்ற இட்டிலிகளை ஒரு வினாடி நினைத்திருந்தால் இப்படிக் குழிபறித்துத் தள்ள மனசு வருமா? அதை உள்ளே தள்ளுகிற அளவா கிராமத்தில் இடநெருக்கடி வந்து விட்டது?

செக்கை வெளியே எடுக்கும் காரியத்தில் பங்குபெற நானும் ஆயத்தமானேன். அப்பா நல்லவேளையாக 'லொகேஷனை' ஞாபகம் வைத்திருந்தார். பறிக்கத் துவங்கிய சில நிமிடங்களில் செக்கு தட்டுப்பட்டு விட்டது.

உள்ளே இரண்டு ஆட்கள் நிற்பதற்குமாய்ச் சேர்த்து செக்கைப் போல இரண்டு மடங்கு அகலமாய் குழி பறிக்க வேண்டி வந்தது.

வடக் கயிறுக்காக ஒரு வீட்டுக்கும், கடப்பாரைக்காக ஒரு வீட்டுக்குமாய் சைக்கிளில் அலைந்தேன். கிராமத்தில் இப்படித்தான். ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொன்று இருக்கும். தேவையான வீட்டில் கூடிப் பிரியும்.

வட்ட வடிவத்தைப் பெற்றிராத செக்கு ஆகையால் உருட்டி மேலே கொண்டு வர வாய்ப்பற்றிருந்தது.

சில பனைச் சட்டங்களை வைத்து அதன் மீது நெம்பி இழுத்துக் கொள்ளத் திட்டம் ஏற்படுத்தப்பட்டது.

புறத்திருந்து நெம்பி அசைப்பதற்காக கல் ஒன்றை எடுத்துவரச் சொன்னபோது என் தம்பி கொண்டு வந்த கல் செக்கில் பாதியளவு இருந்தது. பதற்றத்தில் நடக்கிற காமெடிகளுக்கு அளவேயில்லை. இது பொன் விழா ஆண்டாகையால் எனக்கு வ.உ.சி.யின் நினைவும் வந்தது. பழசை மறந்த யாரும் இப்படிக் கஷ்டப்படத்தான் வேணும்.

கயிறு கட்டி செக்கை மேலிழுக்க... கீழே ஆடும் இடைவெளியில் கல்லைப் போட்டு... மேலே நெம்பி விட்டு... மேலே இழுத்து... மூன்று மூன்று புள்ளிகளுக்கிடையேயும் ஏகமாய் வியர்வை செலவழித்து மேலே ஏற்றியாகி விட்டது.

மண்ணைத் தட்டுகிற சாக்கில் அதைத் தடவிக் கொடுத்தேன். அப்புறமாகத்தான் இது வாசல் மூலைக்கு வந்து சேர்ந்து இப்போது இருக்கிறது.

கடைசியாய்ப் பொளிந்த மீந்திருக்கும் பொருக்கை வடிவச் சிறு குழிகளில் சேகரமாகியிருக்கிறது என் பால்யத்தின் எச்சம்.

இந்த வாசலில் விளையாடும் ஏதாவது ஒரு குழந்தைக்கு இது புதிய விளையாட்டின் கதவுகளைத் திறக்கக்கூடும். இதனுடைய காத்திருப்பும், இருப்பும் ஒன்றும் சும்மா அல்ல. ஆனால்... ஆனால்.. இதனோடு சேர்ந்த ஆட்டுக்கல் எங்கே? என்ற கேள்வி இப்போது எனக்கு வந்து விட்டது. எங்கே தோண்டுவது என்பது மட்டும் புரியவில்லை.



## தலைகீழாக ஒரு எதிர்ப்பு!

**என்ன? படம் தலைகீழாகப் பிரசுரமாகி விட்டதே என நினைக்கிறீர்களா? இல்லை. பிலிபைன்ஸ் நாட்டு மக்கள், வேண்டுமென்றுதான் குடைகளைத் தலைகீழாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்.**

**ஏன்?**

**பிலிபைன்ஸ் ஜனாதிபதி ஜோசப் எஸ்டிராடா, அன்னிய முதலீட்டுக்கு, நல்வரவு கூறி விட்டார். பிலிபைன்ஸ் மக்கள், இந்த முடிவுக்குத் தங்கள் எதிர்ப்பைத்தான் 'இப்படி தலைகீழாய்க் குடை பிடித்துத் தெரிவிக்கிறார்கள்!'**

**— சி.எம்**

# டல்லடிக்கும் மும்பை!



• சரத்பவார்

## வோட்டுப் போட வா...

பேசாமல் மூட்டை முடிச்சுகளுடன் கொஞ்ச காலத்துக்கு பெல்லாரி போய் வரலாம் போலிருக்கிறது; தேர்தலும் அதுவுமாய் மும்பை இப்படி டல்லடிக்கிறதே? வர்லியிலுள்ள சாலைகளில் சிவசேனைக்காரர்கள் பிரசாரத்துக்குப் போக, 'வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கிறோம் என்ற வாக்குறுதியை நிறைவேற்றக் காணோம்; வோட்டுக் கேட்க வந்து விட்டீர்களா?' என்று பொதுமக்கள் அடிக்கவே வந்து விட்டனர்! கைகலப்பு முற்றி ஒரே ரகளையாகிவிட்டது. அதனால்தானோ என்னவோ, மாஹிம் பகுதியில் முஸ்லிம்களிடையே பிரசாரம் செய்யப் போன மனோகர்ஜோஷி, 'எனக்கு நீங்கள் வோட்டே தர வேண்டாம்; உங்கள் பிரியாணியைக் கொடுத்தால் போதும், எனப் பெரிய கும்பிடாகப் போட்டு விட்டார். சரத்பவாருக்கோ, 'சோனியா இந்தியாவின் பிரதமராகலாமென்றால், நவாஸ் ஷெரீஃபும் கூடப் பிரதமராகலாம்' என்ற பல்லவியைத் தாண்டி, அனுபல்லவி கூட கிடைக்க மாட்டேனென்கிறது. மஹாராஷ்ட்ராவிலாவது மானம் போகாதிருந்தால் சரி என்ற நிலை; NCP வேட்பாளர்கள் லிஸ்ட்டையே கடைசியாகத்தானே வெளியிட்டார், அதிருப்தியாளர்கள் கட்சி மாறாதிருக்க வேண்டுமேயென்று! காங்கிரஸாருக்கோ சோனியாவை இந்திய மருமகளாக நிலை நிறுத்துவதுதான் மாபெரும் பிரச்னை! மக்களுக்கு அலுத்தே விட்டது... முலுண்டு ரயில் நிலையத்தில், மாதிரி எலெக்ட்ரானிக் வோட்டளிக்கும் யந்திரத்தைச் சுற்றி நின்றிருந்த கூட்டம் நாளுக்கு நாள் தேய்கிறது. பல மராத்தியர்கள், கணபதி விழா கொண்டாட ஊருக்குப் போகப் 'பேக்' பண்ணினால்... பதினோராம் தேதி வோட்டுப் போட்ட பின்தான் செல்ல வேண்டும்; நாங்களே பஸ் ஏற்பாடு செய்கிறோம் என சேனைக்காரர்கள் தடை உத்தரவு போட்டு விட்டார்களே...! வோட்டுச் சாவடிக்கே ஓட ஓட விரட்ட வேண்டும் போலிருக்கிறதே!

## 'தத்'துவம்!

இம்முறை ரக்ஷா பந்தனன்று, சகோதரிகள் கட்டிய 'ராக்கி'யை, சகோதரர்கள், மறுநாள் வழக்கம்போல் கழட்டி எறியாமல், பத்திரமாகப் பாதுகாத்தனர். தங்கைகளுக்காக இல்லை; தங்கத்துக்காகத்தான்; ராக்கிகளை அப்படியே பென்டென்ட்டாகவோ ப்ரேஸ்லெட்டாகவோ மாற்றிக் கொள்ளும் டிசைனில் நகைக் கடைக்காரர்கள் அமைத்திருந்தார்களே... பணக்கார ராக்கிகளை விரும்பாதவர்களை, நாய், பூனை, மிக்கி மௌஸ், டொனால்ட் டக் ராக்கிகள் பரவசப்படுத்தின. சட்ட விரோதமாக குடிசைகளைப் போட்டுக் கொண்டிருக்கும் சகோதரிகள், முனிசிபாலிடி அண்ணன்களுக்கும், காவல்துறை தம்பிகளுக்கும் ராக்கி கட்டி, தங்கள் குடியிருப்புகளுக்கு பாதுகாப்பு தேடிக் கொண்டனர். சுனில்தத், காமாத்திபுராவுக்கு, தன் தங்கைகளைத் தேடி (இந்த வயதில் அங்கே அவருக்கு அக்காக்கள் இருக்க மாட்டார்களே?) சென்றார். அந்த சிவப்பு விளக்கு மங்கையர், இவர் கையே தெரியாத வண்ணம் ராக்கியோ ராக்கி கட்டி, நெற்றி முச்சூடும் திலகம் அணிவித்து, வாய் கொள்ளாமல் பேடா (இனிப்பு)வை அடைத்தனர். அதற்கு இவர் கொடுத்த பரிசு...? எய்ட்ஸ் நோய் பற்றிய லெக்சர்! அந்த நோயினின்று இவர்கள் தம்மை எப்படிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பதைக் கரிசனத்துடன் விளக்கி, தான் அக்கறையுள்ள அண்ணன் என்பதை பறை சாற்றி விட்டார்! (சீச்சீ... அவர் இந்தத் தொகுதியிலெல்லாம் போட்டியிட வில்லை; பை த வே... களத்தில் இறங்கியிருப்பதே அன்புச் சகோதரி சோனியாவுக்காகத்தானே...?)

— ஜெயஸ்ரீ ராஜ்

# ஊர் கூடி இழுத்த ஒப்பற்ற தமிழ்த் தேர்

அமரர் கல்கிக்கு நூற்றாண்டு விழா கொண்டாடுவதென்றால் சும்மாவா...? முயற்சிக்கும் சுறுசுறுப்புக்கும் மனிதநேயத்துக்கும் முன்னுதாரணமாக விளங்கியவர் அல்லவா? அவர் வாழ்க்கையே ஒரு திருவிழா போன்று வண்ணமும் வனப்பும் நிரம்பியதாக அல்லவா அமைந்திருந்தது! அப்படிப்பட்டவருக்கு உரிய முறையில் சிறப்புச் செய்வதென்பது ஒரு விழாவுக்கே விழா நடத்துவது போன்ற மலைப்பான காரியமல்லவா...?

– நூற்றாண்டு தொடங்கவிருந்த நேரத்தில் இப்படியெல்லாம் யோசனையும் கவலையும் அவர் குடும்பத்தினரையும் கல்கி நிறுவனத்தாரையும் ஆட்கொண்டிருந்ததை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

ஆனால், ஆகஸ்ட் 10, 1998 மாலை அந்த கவலையெல்லாம் கரைந்து போய் விட்டது. கல்கி கிருஷ்ணமூர்த்தி நூற்றாண்டுக் குழுவினர் அன்று கூடி எடுத்த முடிவுகளும் பல்வேறு துறைகளைச் சேர்ந்த அவர்களின் உற்சாகமான பங்கேற்பும் கல்கி நூற்றாண்டு கொண்டாட்டம் தன்னைத்தானே நடத்திக் கொண்டு விடும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தி விட்டன.

குழுத் தலைவர் திரு. ஜி.கே. மூப்பனார் பேசிய முதல் வாக்கியம் : "கல்கிக்குச் செய்யாவிட்டால் வேறு யாருக்கு நாம் செய்வோம்...?" குழுத் தலைவரின் இந்த மெய்யான ஈடுபாடு அனைவரையும் தொற்றிக் கொண்டு, இளமைத் துடிப்புடனும் முதிர்ந்த பொறுப்புணர்வுடனும் இயங்கச் செய்திருக்கிறது. அமரர் கல்கி நூற்றாண்டு விழா தேசமெங்கும் – ஏன் உலகெங்கும் கூட – திருவிழாவாகக் கொண்டாடப்படுவதற்கான உந்து சக்தியாக அமைந்திருக்கிறது.

ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஒவ்வொரு விதத்தில் தனித்துவம் வாய்ந்ததாக அமைந்திருக்கிறது; ஒவ்வொரு விழாவும் அர்த்தமுள்ள கொண்டாட்டமாக மலர்ந்திருக்கிறது. சிகரமாக சென்னையில் 9.9.99 அன்று நிறைவு விழா! இதில் அமரர் கல்கி நினைவாகத் தபால் தலை வெளியிடும் நிகழ்ச்சி முக்கிய இடம் பெறுகிறது எனில், அதற்குத் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள், மனமுவந்தும் கல்கி அவர்களின் திறமுணர்ந்தும் அளித்த முழு ஒத்துழைப்பு முதன்மையான காரணமாகும்.

9.9.98 அன்று விழா கொண்டாட்டங்கள் தொடங்கியபோது ஒவ்வொரு வாசகரும் தமக்கு உவப்பான முறையில் அமரர் கல்கி நூற்றாண்டைக் கொண்டாடலாமே என்று கேட்டுக் கொண்டோம். ஒவ்வொருவரும் தங்கள் இல்லத்து நிகழ்ச்சியாகவே இதை ஏற்று சிறிதும் பெரிதுமான வகைகளில் பங்கேற்றுக் களிப்படைந்திருக்கிறார்கள்.

இந்த நூற்றாண்டு விழா கொண்டாட்டங்கள் நிறைவுறும் தருணத்தில், அதன் வெற்றிக்காக உழைத்த அனைவருக்கும் நெகிழ்ச்சியுடன் மனநிறைவைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஊர் கூடி இழுத்த ஒப்பற்ற தமிழ்த் தேராக அமைந்து விட்ட விழா கொண்டாட்டங்கள் கல்கி கிருஷ்ணமூர்த்தியின் பன்முகப் பண்புகளையும் சிறப்புகளையும் வெளிப்படுத்தியது. அது மட்டுமல்ல.... 'தமிழுணர்வு' என்பதைப் போல் 'கல்கியுணர்வு' என்ற ஒரு மந்திரசக்தி உலகெங்கும் பரவி, தமிழர் உள்ளங்களில் குடிகொண்டிருக்கிறது என்னும் பேருண்மை வரலாற்றில் பதிவாகியிருக்கிறது.

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)**

"சமையலுக்கு எண்ணெய் வாங்கும் போது
லிட்டரா வாங்குவியா ? கிலோவா வாங்குவியா ?"
"அளவைப்பத்தி என்ன இருக்கு !
சுத்தமான சுவையான எண்ணெய்யா இருந்தா போதாதா !!"
"அப்படியில்லம்மா ஒரு கிலோ வாங்கினா 100 மில்லி அதிகமா
இருக்குமாமே"
"100 மில்லி அதிகமா இருக்கலாம். ஆனா ஒரு லிட்டரை விட
ஒரு கிலோ எண்ணெய் விலையும் அதிகம்."



அளவைப் பாக்காதீங்க.. தரத்தைப்பாருங்க..

# ஆனந்தம்
## நல்லெண்ணெய்

லிட்டரிலும், கிலோவிலும் கிடைக்கின்றது.

**Wanted Dealers in Unrepresented Areas all over India & Overseas**

V.V.V. Anandham & Sons, P.B. No. - 11, Virudhunagar - 626 001.
Ph: 04562 - 44413 / 43137

SITA